இந்தியாவின் சில முக்கியமான பிரதேசங்களைச் சேர்ந்த மக்களின் மரபு, பண்பாடு, ஆகியவற்றை விளக்கும் புத்தகங்கள், இந்திய மரபு—பண்பாட்டு வரிசையின்கீழ் வெளியிடப்படுகின்றன. வெவ்வேறு பகுதியினரிடையே நிலவும் சடங்குகள், சம்பிரதாயங்கள், நம்பிக்கைகள், பழங்கதைகள், குறி சொல்லும் முறைகள், மந்திர ஜாலங்கள், பண்டிகைகள், திருவிழாக்கள், நாட்டுப் பாடல்கள், நடனங்கள், நாடகங்கள், ஆகியவை இப் புத்தகங்களில் விவரிக்கப் படுகின்றன. நம் நாடு இவ்விஷயங்களில் செழிப்படைந்து விளங்குவது அந்தந்த மக்களின் இயல்புகளைத் தெளிவாக விளக்கிக் காட்டும் சாளரங்களாக இவை விளங்குவதுடன், அவர்களிடையே நிலவும் பல நுண்ணிய பண்பாட்டு ஒற்றுமைகளையும் உணர்த்துகின்றன. இந்த ஒற்றுமையை வலுப்படுத்துவதே இந்த வரிசையின் நோக்கம்.

# தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும்




' சோமலெ '



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

First Edition 1975 (1897)
Reprinted 1981 (1903)



விலை ரூ. 12-25

*Original Title :* *FOLKLORE OF TAMILNADU (English)*

*Title of Tamil Version :* *TAMIZH NATTU MAKKALIN MARABUM PANBADUM*

PUBLISHED BY THE DIRECTOR, NATIONAL BOOK TRUST, INDIA,
A-5, GREEN PARK, NEW DELHI-110016, AND PRINTED BY
RAJ PRINTING COMPANY, 158, N. O. I. C. Phase-1,
New Delhi-110020

## நன்றியுரை

மக்கள் மரபு, பண்பாடு என்ற பெரிய துறையில் தங்கள் தங்களுக்கு நன்கு தெரிந்த விவரங்களை எனக்குக் கூறி, இந்நூல் எழுத உதவி புரிந்த கீழ்க்கண்ட நண்பர்கட்கு என் நன்றி உரியது.

1. டாக்டர் அ. அழகப்பன், எம்.ஏ., பிஎச்.டி., பாரிஸ்டர்-அட்-லா,
   தலைவர்,
   நீர்வள ஆராய்ச்சிப் பிரிவு,
   ஐக்கிய நாடுகள் அவை.

2. டாக்டர் சுப. அண்ணாமலை
   பேராசிரியர்,
   தியாகராசர் கல்லூரி, மதுரை 9.

3. திரு. மு. அருணசலம், எம்.ஏ.
   இயக்குநர், தமிழ்—சமஸ்கிருதம் மற்றும்
   இந்திய மொழிகள் ஆராய்ச்சி நிலையம்
   வேங்கட கிருஷ்ணய்யர் சாலை
   சென்னை 600 028.

4. டாக்டர் ஜீன் பிலியோசா
   இந்திய இயல் அறிஞர்
   காலேஜ்—டி—பிரான்ஸ்
   பாரிஸ்.

5. திருமதி பிலியோசா (இளையவர்)
   இந்திய இயல் ஆராய்ச்சிக்கான பிரெஞ்சுக் கழகம்
   புதுச்சேரி.

6. திரு சா. கணேசன் (கம்பன் அடிப்பொடி)
   செயலாளர்
   கம்பன் கழகம்
   காரைக்குடி.

7. திரு. கோபாலகிருஷ்ணன்
உதவிப் பொறியியல் அலுவலர்,
பொதுப்பணித்துறை, மேலூர்,
மதுரை மாவட்டம்.

8. டாக்டர் கே.பி.எஸ். ஹமீது,
உதவி இயக்குநர்
அனைத்திந்திய வானொலி நிலையம்
திருச்சிராப்பள்ளி.

9. திரு. முகவூர் எம்.ஆர். கந்தசாமி பிள்ளை
தமிழ் விரிவுரையாளர்
அம்பைக் கலைக் கல்லூரி
அம்பாசமுத்திரம்
திருநெல்வேலி மாவட்டம்.

10. (காலஞ்சென்ற) புலவர் குழந்தை
பவானி.

11. திரு. எஸ். மஹராஜன்
முன்னாள் நீதிபதி, உயர்நீதி மன்றம்
சென்னை.

12. (காலஞ்சென்ற) திரு ஏ.எஸ். நாராயணசாமி நாயுடு
முதல்வர்,
ஜி.வி.என். கல்லூரி,
கோவில்பட்டி.

13. திரு. சொல்விளங்கும் பெருமாள்
தமிழ்ப் பேராசிரியர்
வெள்ளைச்சாமி நாடார் கல்லூரி
நாகமலை புதுக்கோட்டை
மதுரை மாவட்டம்.

14. (காலஞ்சென்ற) டாக்டர் வே. ராகவன்
சமஸ்கிருதப் பேராசிரியர்,
சென்னைப் பல்கலைக் கழகம்)
ஜவஹர்லால் நேரு நினைவு நிதி ஆராய்ச்சி அறிஞர்
சென்னை 14.

15. திரு ஆர். ரெங்காச்சாரி
துணை நிதிச் செயலாளர் (ஓய்வு)
தமிழ்நாடு அரசு,
நிர்வாக அதிகாரி (ஓய்வு)
நெய்வேலி பழுப்பு நிலக்கரிச் சுரங்கம்.
85, மு.க. அம்மன் கோயில் தெரு,
மாதவபுரம், சென்னை 4.

16. திரு வி.வி. சடகோபன்
இசையறிஞர்
புது தில்லி.

17. பேராசிரியர் சங்கர ராஜு
தமிழ்த் துறைத் தலைவர்
வேளாண்மைக் கல்லூரி
மதுரை.

18. டாக்டர் ந. சஞ்சீவி
தமிழ்ப் பேராசிரியர்
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை 5.

19. திரு கே. சங்கர மேனன்
இணை இயக்குநர்,
கலாக்ஷேத்திரம்
சென்னை 41.

20. டாக்டர் சி.ஆர். சர்மா
மண்டல அதிகாரி
சாஹித்திய அகதமி
சென்னை 6.

21. பேராசிரியர் சேதுரகுநாதன்
தமிழ்த் துறைத் தலைவர்
செந்திக் குமார் நாடார் கல்லூரி
விருதுநகர்.

22. டாக்டர் பி.ஆர். சுப்பிரமணியம்
மரபு-பண்பாட்டுத் துறை ஆராய்ச்சியாளர்
44, தெற்குத் தேரடித் தெரு
வீரவநல்லூர்,
திருநெல்வேலி மாவட்டம்.

23. டாக்டர் வி.ஐ. சுப்பிரமணியம்
மொழி இயல் பேராசிரியர்
கேரளப் பல்கலைக்கழகம்
திருவனந்தபுரம்.

24. (காலஞ்சென்ற) திரு ஏ. சுப்பையா
செயலாளர்
தமிழ் ஆராய்ச்சிக்கான பல நாடுகளின் சங்கம்
நுங்கம்பாக்கம்
சென்னை.

25. திரு. இரா முத்துக்குமாரசுவாமி, எம்.ஏ., பி.லிப்.சயி.,
நூலகர், மறைமலையடிகள் நூல்நிலையம்,
105, லிங்கிசெட்டித் தெரு, சென்னை—1

26. டாக்டர் ஜெயபாரதி, எம்.பி., பி.எஸ்.,
சிங்கம்புணரி, இராமநாதபுர மாவட்டம்.

27. திரு. ம. ப. பெரியசாமித் தூரன்
தலைமைப் பதிப்பாசிரியர்,
கலைக்களஞ்சியம்,
தமிழ் வளர்ச்சிக் கழகம்,
சென்னைப் பல்கலைக்கழகக் கட்டிடம், சென்னை—5

28. திரு. டி. வஜ்ரவேலு
தமிழ்த் தட்டச்சர், தமிழ்வளர்ச்சிக் கழகம்,
23, குருவப்ப செட்டி தெரு,
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை—2

29. திரு. தஞ்சைவாணன்
அனைத்திந்திய வானொலி நிலையம்
சென்னை.

30. திரு. கே. சி. தியாகராஜன்
இசைப் பகுதி
அனைத்திந்திய வானொலி நிலையம்
சென்னை—4

31. திரு. திருஞானசம்பந்தம்
(தலைமைப் பேராசிரியர், சமஸ்கிருதம்
மாநிலக் கல்லூரி)
ஓய்வுபெற்ற பதிவாளர், சென்னைப் பல்கலைக் கழகம்,
சென்னை—5.

32. திரு வளன் அரசு

தமிழ்த் துறை
புனித யோவான் கல்லூரி
பாளையங்கோட்டை
திருநெல்வேலி மாவட்டம்.

33. (காலஞ்சென்ற) திரு வானமாமலை
மரபு பண்பாட்டுத் துறை நிபுணர்
ஆசிரியர் : ''ஆராய்ச்சி''
பாளையங்கோட்டை
திருநெல்வேலி மாவட்டம்.

34. திரு மீ. ப. சோமசுந்தரம்
சிறப்பு நிகழ்ச்சிகள் அதிகாரி
அனைத்திந்திய வானொலி நிலையம்
சென்னை—4.

35. திரு ஏ. வி. ஜெயசந்திரன், எம்.ஏ., பி.எல்.
கௌரவ இயக்குநர்
கோயில் கலை அருங்காட்சிக் கூடம்.
மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில்
மதுரை—1.

36. திரு எஸ். சரவணன்
சண்முகநாத பட்டணம்
(வழி) சருகணி 623405
இராமநாதபுர மாவட்டம்

37. செல்வி H. அலமேலு
ஆசிரியை
புனித மேரி மகளிர் உயர்நிலைப்பள்ளி, தேவகோட்டை,
இராமநாதபுர மாவட்டம்.

38. செல்வி V. சுமதி,
D/o திரு. வெங்கடேச ஐயர்
பத்தூர் அக்கிரகாரம்
கொரடாச்சேரி (அ.நி.)
தஞ்சை மாவட்டம்

39. திரு. பு. மனோகரன்
247, கீழைமாசி வீதி, மதுரை—!

40. திரு சுபா
ஓவியர், 'அமுதசுரபி', சென்னை—33

41. திரு பி. கே. மூக்கையாத் தேவர், எம்.பி.
மதுரை

42. திரு. செ. போசு,
தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை-28.

இறுதியாக, விடுகதைகளைத் தொகுத்துத் தந்ததற்காக என் மகன் திரு லெ. சோமசுந்தரத்துக்கும் என் நன்றி உரியது.

சாஸ்திரிநகர் அஞ்சல் நிலையக்கட்டிடம்
சென்னை—600 020.

'சோமலெ'

# பொருளடக்கம்

# 1. இடமும் மக்களும்

தமிழ்நாட்டின் பூகோளம், வரலாறு, இங்கு நிலவும் சமயங்கள், பெரும்பாலும் வாணிகத்துக்காக உலகெங்குமிருந்து தமிழ்நாட்டுக்கு வருகை தந்த அறிஞர்களால் பரவிய பல்வேறு கலைகளின் செல்வாக்கு—இவை யாவும் சேர்ந்து தமிழ்மக்களுக்கு ஒரு தனித் தன்மையை உண்டாக்கியிருக்கின்றன.

தமிழ்நாட்டு மக்களில் உயர்கல்வி பெற்றவர்களின் சிந்தனை, மரபு, பண்பாடு எல்லாம் அண்மைக்காலத்தில் மேற்கத்திய நாகரிகத்தில் மூழ்கியிருக்கின்றன. எனினும், சங்க காலமும் பழந்தமிழ்ப் பெருமை யுமே தங்களுக்கு எழுச்சி தருவதாக அவர்கள் பெருமையுடன் சொல்லுகிறார்கள். மக்களின் அன்றாட வாழ்வில், குறிப்பாகக் கிராமங்களில், பழந்தமிழர்களின் நடை, உடை, உணவு, பழக்க வழக்கங்கள், சிந்தனைகள், மதிப்பீடுகள் போன்ற எல்லாப் பாவனை களிலும், பழந்தமிழ்ப் பண்பாடு அழியாது இன்றளவும் நின்று நிலவி வருவது ஒரு தனிச்சிறப்பு எனலாம்.

இந்தியாவின் ஏனைய பகுதிகள் வெளிநாட்டுப் படையெடுப்பு, போர் முதலிய இக்கட்டுக்களுக்கு உள்ளானதை ஒப்பிட்டுப் பார்க்கும் போது, பெருமளவுக்கு அமைதியான ஒரு சூழ்நிலையைத்தான் தமிழ் நாட்டு வரலாற்றில் காணுகிறோம். அரசியல் கொந்தளிப்புக்கள் குறைந்து, பொருளாதாரநிலையும் ஏறத்தாழ ஒரே அளவினதாக இருந்து வந்திருக்கிறது. இதனால், தொன்றுதொட்ட மரபு அழியாது காப்பாற்றப்பட்டிருக்கிறது. அதிகாலையிலும் அந்தி மாலையிலும் இறைவழிபாடு, உண்பது நாழி உடுப்பன இரண்டே, கந்தையானாலும் கசக்கிக் கட்டுவது, குறித்த நேரப்படி பசி தீர்த்துக்கொள்வது, மேலை நாகரிகத்தால் உடை மாற்றம் ஏற்படாது பெண்கள் தொடர்ந்து சேலையையே கவினுற உடுத்துவது—காலம் மாறினாலும் இந்த மரபுகள் அணுவளவும் மாறவில்லை.

இராமன் ஆண்டால் என்ன? இராவணன் ஆண்டால் என்ன?

என்பது ஒரு தமிழ்ப் பழமொழி. நமக்கு வேண்டியது அமைதி யான வாழ்க்கைக்கு இடையூறு இல்லாத அரசியல் நிலைமை, என்ற தமிழன் கொள்கைக்கு இது சான்று. முக்கியமாக கிராம சமுதாயமும் அதன் அன்றாட வாழ்வும் ஆட்சி மாற்றங்களாலும் அரசியல் குமுறல்களாலும் பாதிக்கப்படவில்லை.

## நில அமைப்பு

தமிழ்நாடு, இந்தியாவின் தென்கோடியில் ஏறத்தாழ முக்கோண வடிவில் உள்ளது. ஆசியாவின் வரைபடத்தில், இந்தியப் பெருங் கடல் வட்டாரத்திலுள்ள இந்தியா என்ற துணைக்கண்டத்தின் படத்தைப் பார்க்கும்போது, மேற்கே ஆப்பிரிக்காவும் அரேபியாவும் ஒரு பக்கமும், தென் கிழக்கே பர்மாவும் கீழைத்தீவுக் கூட்டமும் ஆஸ்திரேலியாவும் ஒரு பக்கமும் இருக்க, இவற்றுக்கிடையே தொங்கிக்கொண்டிருக்கும் ஒரு பதக்கம்போல இந்தியத் துணைக் கண்டம், நடு நாயகமாகக் காட்சி தருகிறது. திருவனந்தபுரத்தில் தத்துவப் பேராசிரியராக இருந்த மனோன்மணியம் பி. சுந்தரம்பிள்ளை ஒரு கவிதையில், உலக நாயகியான தாயின் நெற்றிக்கு இந்தியத் துணைக்கண்டத்தையும், அந்த நெற்றிக்கு ஒளிதரும் திலகத்துக்குத் தமிழ்நாட்டையும் உவமித்துள்ளார்.

## எல்லைகள்

'வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகம்' என்று பரம்பரையாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது வடக்கே திருப்பதி-திருமலையும் தெற்கே கன்னியாகுமரி முனையும் தமிழ் நாட்டின் எல்லைகள். ஆந்திரப்பிரதேஷ் மாநிலம் உருவான பிறகு, இப்போது தமிழ்நாட்டின் வடகோடியாகத் திருத்தணிகை விளங்கி வருகிறது. கிழக்கே வங்காளக் குடாக்கடல், தெற்கே இந்தியப் பெருங்கடல், மேற்கே மேற்குத் தொடர்ச்சிமலை ஆகியவை ஏனைய எல்லைகளாக இருக்கின்றன. மேற்குத் தொடர்ச்சி மலைக்கு அப்பா லுள்ள பகுதி, புதிதாக உருவாகியிருக்கும் கேரளத்தைச் சேர்ந்தது.

திருத்தணிகை, தமிழ்த் தெய்வமாகக் கருதப்படும் குமரன் அல்லது சுப்பிரமணியர், கோயில் கொண்டுள்ள மலைநகரம். கன்னித் தெய்வ

மாகிய குமரி அம்மன், கன்னியாகுமரியில் கோயில் கொண்டிருக்கிருள். எனவே தமிழ்நாட்டு எல்லை குமரன் கொலுவீற்றிருக்கும் தலத்தில் தொடங்கி குமரி தவம் செய்யும் இடம்வரை பரவியுள்ளது. போருக்கும் காதலுக்கும் உரிய இறைவன் குமரன் ; என்றும் கன்னியாக இருக்கும் இறைவி குமரி.

கபாடபுரத்தைத் தலைநகராகக் கொண்டு பாண்டியர்கள் அரசாட்சி செய்தனர் என்றும், அவர்களுடைய நாட்டின் தென்பகுதி—தமிழ் நாட்டின் ஒரு பெரும் பரப்பு (தெல் குமரி என்னும் ஆறு உட்பட) வாலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் கடல்கோளால் அழிந்தது என்றும் வழிவழியாக ஒரு நம்பிக்கை நிலவி வருகிறது.

## பரப்பு

தமிழ்நாட்டின் பரப்பு 1,29,900 சதுரமைல். இது பிரிட்டன், வட அயர்லாந்து இரண்டின் மொத்தப் பரப்புடன் ஒப்பிடத்தக்கது. ஒரு புறம் இராமேசுவரம் தீவில் அனல் கக்கும் மணற்பரப்பு, மற்ருெரு புறம் நீலகிரியிலும் கோடைக்கானல் மலையிலும் நடுக்கும் குளிர் நிறைந்த பகுதிகள் என்று தமிழ்நாட்டின் தட்பவெப்பம் இடத்துக்கு இடம் மாறுகிறது.

## ஐந்திணைகள்

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று நிலத்தைப் பழந் தமிழர் ஐவகைப்படுத்தினர். ஒவ்வொரு நிலப் பகுதியும் அதற்குரிய சிறப்பான பூவின் பெயரைப் பெற்றது. மலையும் மலைசார்ந்த இடமும் குறிஞ்சி. அங்கு பூப்பது குறிஞ்சிப்பூ. முல்லை, காடுகளும் அதைச் சார்ந்த வளமான வனங்களும் உடையது. அங்கு பூப்பது முல்லைப்பூ. நிலவளமும், ஆறு, குளம் முதலிய நீர்வளமும் நிறைந்தது மருத நிலம். கடலோரமாக உள்ள பகுதி நெய்தல் நிலம்; தீவுகள், தருவை, காயல், என்னும் நீர்நிலைகள் ஆகியவையும் இதில் அடங்கும். பாலை என்பது பாலைவனப் பகுதி.

> 'முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து
> நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப்
> பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்'

என்று சிலப்பதிகாரம் (காடுகாண் காதை) கூறும்.

### மக்கள்

கிழக்குத் தொடர்ச்சி மலையையும் மேற்குத் தொடர்ச்சி மலையையும் சேர்த்து ஒரு முடிச்சுப் போட்டிருப்பதுபோல, அவை இரண்டும் தமிழ்நாட்டில் கூடுகின்றன.

தமிழ்நாட்டின் மலைப்பகுதிகளும் அவற்றின் உச்சியிலுள்ள எழில் மிகு நகரங்களும் வெவ்வேறு வகையான தேவைகளுக்கு ஏற்றவாறு அமைந்திருக்கின்றன. ஐரோப்பாவில் நிலவுவதுபோன்ற கடுங் குளிரில் பழக்கப்பட்டவர்களுக்கு ஏற்றது, இந்திய மலைவாச நகரங் களுள் தலைசிறந்து மலையரசியாகத் திகழும் உதகமண்டலம். அந்த அளவு குளிரைத் தாங்க முடியாமல் இருப்பவர்களுக்கும் அமைதியை விரும்புபவர்களுக்கும் உரியது கோடைக்கானல். குறைந்த செலவில் வாழ விரும்புபவர்களுக்கும் நெஞ்சு வலி உடையவர்களுக்கும் ஏற்ற வாறும் தமிழ்நாட்டில் மலை நகரங்கள் உள்ளன; இவ்வகையில் நீலகிரி மாவட்டத்தில் கூனூரும் கோத்தகிரியும், கோவை மாவட்டத்தில் ஆனைமலையில் டாப்ஸ்லிப்சும் வால்பாறையும், சேலம் மாவட்டத்தில் ஏர்க்காடும், வட ஆர்க்காடு மாவட்டத்தில் ஏலகிரியும் குறிப்பிடத்தக்கவை. இந்த மலை நகரங்களில் வாழ் வதற்குக் கம்பளி ஆடை இன்றியமையாதது. ஆனால் தென்னிந்தியாவின் நீராடுமிடம் என்ற பொலிவும் புகழும் பெற்ற திருக்குற்றாலத்தில், கம்பளி உடைகள் தேவையில்லை. அநேகமாக ஒவ்வொரு மாவட்டமும், இத்தகைய ஒரு மலைநகரம் அல்லது கடலோரத்தில் ஒரு சுகவாச நகர் உடையதாகவே இருக்கிறது.

பொள்ளாச்சிக்கும் பாலக்காட்டுக்கும் இடையே உள்ள பள்ளத் தாக்கு வளம் கொழிக்கிறது. கம்பம் பள்ளத்தாக்குக்கும் இத்தகைய சிறப்பு உண்டு. இவ்விரு பகுதிகளும் எழில்மிக்க காட்சிகளும், ஏராளமான பணப்பயிர்களும் நிறைந்தவை.

### காடுகள்

தமிழ்நாட்டின் குறிப்பிடத்தக்க விலங்குகள் யானை, காட்டெருமை, காட்டுப்பன்றி ஆகியவை. முதுமலையிலுள்ள வனவிலங்குச் சரணாலயத்தில் இவற்றைக் கண்டுகளிக்கலாம். வேடந்தாங்கல் பறவைச் சரணாலயத்தில் பல நாடுகளிலிருந்தும் கண்டங்களி லிருந்தும் குளிரிலிருந்து தப்பிச் சிலநாள் இருப்பதற்காக வரும் பறவைகளைப் பார்க்கலாம். வேதாரணியம் வட்டத்துக் கோடிக் கரைக்கு அப்பாலுள்ள சதுப்பு நிலப் பகுதியில் கோடியக்காடு

சரணாலயத்திற்கும் இத்தகைய பறவைகள் வருகின்றன. இந்த உலகம் சுற்றும் பறவைகளிடையே வர்ணத்தாரை, வெண் கொக்கு, நரையான், பூநாரை, அரிவாள் மூக்கு, உன்னிக்கொக்கு—இப்படி எண்ணற்ற வகைப்பறவைகள் உண்டு.

மலர்களில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது 12 ஆண்டுகளுக்கு ஒரு முறை பூத்துக் குலுங்கும் குறிஞ்சி மலர். சின்கோனு என்ற ஒருவகை மரம் இருக்கிறது; இதிலிருந்துதான் கொய்னு மருந்து தயாரிக்கப்படுகிறது. திருநெல்வேலி மாவட்டத்தில் லட்சக் கணக்கில் பனைமரங்கள் உள்ளன; சமுதாயத்தின் அடித்தளத்தில் உள்ள மக்களுக்கு இவை வாழ்வளிக்கின்றன.

கன்னியாகுமரி மாவட்டத்தின் தட்பவெப்ப நிலை, மலேசிய நாட்டின் தட்பவெப்ப நிலைக்குச் சமமானது. எனவே, இங்கும் தரத்தில் சிறந்த ரப்பர் உண்டாகிறது. நீலகிரியில் புதிதாக மரம் நடும் திட்டம் அல்லது காடு வளர்க்கும் திட்டத்தின்கீழ் யூகலிப்டஸ் எனப்படும் நீலகிரித் தைல மரங்கள் நடப்பட்டு வருகின்றன. வட ஆர்க்காடு மாவட்டத்தில் சவ்வாது மலையில் அங்குமிங்குமாகச் சந்தன மரம் பயிரிடப்படுகிறது. பழநி மலைத் தொடர்ச்சியிலும் திருக்குற்றாலமலைப் பகுதியிலும் மூலிகைகள் மிகுந்துள்ளன.

### ஆறுகள்

வடமேற்கு, தென் கிழக்கு ஆகிய இரு பருவக்காற்றுக்களாலும் மழைநீர் கிடைத்து ஆண்டு முழுவதும் வற்றாதிருக்கும் ஆறு தமிழ் நாட்டில் ஒன்றுதான் உண்டு. அதன் பெயர் காவிரி. 'வான் பொய்ப்பினும் தான் பொய்யாக் கடற் காவிரி' என்று புலவர் நாவில் பொருந்திய பெருமையுடையது அந்தப் பேராறு. அது தமிழ் நாட்டின் ஊடே பாய்ந்து, இந்த மாநிலத்தை இரு கூறுகளாகப் பிரிக்கிறது. காவிரிக்கு வடக்கே பாலாறும் (வட) பெண்ணையும் காவிரிக்குத் தெற்கே, தமிழ் கண்ட வைகையும் தாமிரபரணி எனப் படும் தண் பொருநையும் இருக்கின்றன. ஆற்றங்கரைகளிலும் ஏரிக்கரைகளிலும் நகரங்களிலும் தலங்கள் உண்டாகி உள்ளன. பெரும்பாலும் இவை ஒவ்வொன்றைப் பற்றியும் வியப்பூட்டும் கதையோ சுவையான புராணமோ இருக்கும்.

ஒரு சான்று கூறலாம். மதுராந்தகம் ஏரி தமிழ்நாட்டின் பெரிய ஏரிகளுள் ஒன்று. அதன் பரப்பு 13 சதுர மைல். ஒரு முறை அடை மழையால் ஏரியின் கரை உடைந்துவிடும் நிலையில் இருந்தது. மக்கள் பயந்து ஊரைக் காலிசெய்யலாயினர். அப்போது, இராம

பிராமனும் அவர் தம்பி இலக்குவனும் கூடை, மண்வெட்டி முதலியவற்றுடன் வந்து கரையை அடைத்து ஏரியைக் காப்பாற்றியதாக மக்கள் நம்புகிருர்கள். இதனுல் கரைமீதுள்ள கோதண்டராமர் கோயிலுக்கு ஏரிகாத்த பெருமாள் கோயில் என்ற பெயர் வழங்கி வருகிறது. செங்கற்பட்டு மாவட்டத்துக் கலெக்டராக இருந்த ஆங்கிலேய துரை, இக்கோயிலில் தம் செலவில் சீதாபிராட்டிக்கு உட்கோயில் கட்டியிருப்பதாகக் கல்வெட்டு மூலம் உறுதிப்படுவதால் இந்தக் கதையில் ஓரளவு உண்மை இருக்கவேண்டும்.

ஊருணி என்ற பெயருள்ள சிறு குட்டைகள் உள்ளன; இவை ஊரரால் உண்ணப்படும் குடிநீரை வழங்குவதால் ஊருணி என்று பெயர் பெற்றன. ஏரிகள் அல்லது கண்மாய்கள், நீர்ப்பாசனத்துக்கு மட்டும் பயன்படுத்தப்படுகின்றன. உயர்ந்த மலைப்பகுதிகளில் இயற்கையாகவும் செயற்கையாகவும் உள்ள நீர்த்தேக்கங்கள் மின்சாரம் உண்டாக்க உதவுகின்றன.

### தேரிகள்

தேரி என்பது செக்கச் சிவந்த மணற்பாங்கான இடம். கோடை மாதங்களில் அடிக்கும் காற்று தேரியின் தோற்றத்தை மாற்றும்.

திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள காயாமொழி அருகே உள்ள தேரிகள் ஒவ்வொன்றும், 200 அடி உயரமான அகன்ற மணல் மேடாக உள்ளன. இவ்வகைப் பாலைப் பகுதியைத் தமிழ்நாட்டில் வேறு எங்கும் காண இயலாது. இவையும்கூட இப்போது பசுமைப் புரட்சியின் பயனைப் பெற்று விளைநிலங்களாகி வருகின்றன.

### துறைமுகங்கள்

கிறிஸ்து சகாப்தத்தின் தொடக்கத்தில் காவிரிப்பூம்பட்டினத்திலும் ஏனைய துறைமுகங்களிலும் வணிகம் சீருடனும் சிறப்புடனும் நடைபெற்றது. தமிழ்நாட்டில் தாங்கள் வாங்கிய பண்டங்களுக்குப் பணம் செலுத்துவதற்காக கிரேக்கர்கள் கடலோரமாக நாணயச் சாலைகளை நிறுவினர்; கொற்கையிலும் ஆதிச்சநல்லூரிலும் கண்டு பிடிக்கப்பட்ட ரோமாபுரி நாணயங்களாலும் சிங்களவர்கள் எழுதியுள்ள பழமையான ஆதார நூல்களாலும் புதைபொருள் அகழ்வாராய்ச்சிகளாலும், கிரேக்கம்—ஹீப்ரு முதலிய மொழிகளில் வழங்கி வரும் தமிழ்ச் சொற்களாலும் இது மேலும் உறுதிப்படுகிறது.

ரோமாபுரியை ஆண்ட அகஸ்டஸ் என்ற பேரரசனுக்குப்

பாண்டிய மன்னன் ஒருவன் இரு தூதர்களை அனுப்பியுள்ளான், சில சமயங்களில், தெருக்கூத்துக்களில் இந்த நிகழ்ச்சி ஒரு காட்சியாக நடிக்கப்படுகிறது. சந்தனக் கட்டை, மிளகு, இஞ்சி, அரிசி, ஏலக்காய், இலவங்கப்பட்டை, மஞ்சள், யானைத்தந்தம், பவளங்கள், மரகதம் முதலிய நவரத்தினங்கள் ஆகிய பொருள் களைத் தமிழ்நாட்டிலிருந்து வெளிநாட்டார் ஆவலுடன் வாங்கிச் சென்றனர்.

சென்னையும் தூத்துக்குடியும் இந்தியாவின் பெரிய துறைமுகங் களாக வளர்ச்சியடைந்திருக்கின்றன. நீண்ட கடற்கரை உடைய தமிழ்நாட்டில், மீன் பிடிப்பது பல்லாயிரம் மீனவர்க்கு வாழ்வு தரும் தொழிலாக இருந்து வருவதால், மீன்பிடி துறைமுகங்கள் உருவாக்கப் பட்டும் விரிவாக்கப்பட்டும் வருகின்றன.

ஆழ்கடலில் மீன் பிடிப்பதிலும், உள்நாட்டு நீர்நிலைகளில் மீன் பிடிப்பதிலும் மீனவர்கள் வல்லவர்களாகத் திகழ்வதுடன் புதிய உத்திகளையும் கையாண்டு வருகின்றனர். சங்ககாலத்தில், மீனவர் படகுகள் அவற்றின் அமைப்பை ஒட்டிப் பெயரிடப்பெற்றன. சான்று : சிங்கம் அல்லது அரிமா, யானை, குதிரை முதலியவற்றின் முகங்களை உடைய படகுகள் முறையே **அரிமுக அம்பி, கஜமுக அம்பி, பரிமுக அம்பி** என்று பெயர் பெற்றிருந்தன. இவற்றுடன் தோணி, கப்பல் என்பவற்றையும் சேர்த்து 'ஓடவகை ஐந்து' என்று பழந் தமிழர் வகுத்திருந்தனர்.

சங்கு குளிப்பதும் முத்துக் குளிப்பதும் தலைமுறைதலைமுறையாக நிகழ்ந்து வருவன. இந்தத் தொழில்கள் அல்லது மரபு எப்போது ஏற்பட்டது என்பதைச் சொல்ல இயலாது. வலது பக்கம் திரும்பி யுள்ள சங்குகளுக்கு வலம்புரிச் சங்குகள் என்று பெயர் ; இவை அரிதாகவே அகப்படுவதால் இவற்றுக்குக் கொள்ளை விலை கொடுத்து வாங்குவது வழக்கம். 'பாண்டியா, நின் நாடு முத்துடைத்து' என்பது ஒரு பழமொழி. வடிவத்தாலும் ஒளியாலும் பாண்டிய நாட்டுக்கரையில் அகப்படும் முத்துக்கள் ஆழிசூழ் உலக மெங்கும் புகழ்பெற்றுள்ளன. முத்துக்களைப்பற்றி எத்தனையோ நாட்டுப்பாடல்கள் பாடப்படுகின்றன. இதோ ஒன்று :

"முத்தான முத்து
முதிரா இளம் முத்து
காரமடை ரெங்கருக்கு
கழுத்தில் இடும் ராணிமுத்து

ஆயிரம் முத்திலே
ஆராய்ந்து எடுத்த முத்து
சீரங்க நாதருக்கு
சிரசில் இடும் ராணிமுத்து
தொள்ளாயிரம் முத்திலே
துளாவி எடுத்த முத்து
மதுரை மீனாட்சிக்கு
மார்பில் இடும் முத்து"

## வரலாற்றுப் பின்னணி

வரலாறும் இதிகாச புராணங்களும் இலக்கியங்களும், மரபையும் பழமைச் சின்னங்களையும் ஆராய உதவுகின்றன. தமிழ் மக்களுடைய வாழ்க்கை முறைக்கும், ஒரு பெரும் வெள்ளம் அல்லது பிரளயத்துக்குமுன் சிந்து பள்ளத்தாக்கில் வாழ்ந்தவர்கள் என்று கருதப்படும் மக்களின் வாழ்க்கை முறைக்கும் இடையே, பல ஒற்றுமைகள் அல்லது பொதுத்தன்மைகள் உள்ளன. சில சின்னங்கள், கருவிகள், சான்றுகள் ஆகியவற்றுக்குப் புதைபொருள் அறிஞர்களும் இந்திய இயல் ஆராய்ச்சியாளர்களும் விளக்கம் கூறியிருக்கிறார்கள். ஆனால் இவர்கள் 'ஓரளவே' தெரிவித்திருக்கின்றனர். முழுமையான விளக்கம் இனிமேல்தான் வெளியிடப்பட வேண்டியதாக உளது.

நிற்க. பலுசிஸ்தானத்தில் வழங்கும் புருகி என்னும் கிளைமொழியில் முந்நாள் தமிழ் மொழியின் சின்னங்கள் காணப்படுகின்றன. தமிழர்கள் வடமேற்கு இந்தியாவில் ஒரு காலத்தில் வாழ்ந்திருக்கக் கூடும் அல்லது அங்குள்ள மக்களுடன் மிக நெருங்கிய தொடர்பு கொண்டிருந்திருக்க வேண்டும். அதனால்தான் அப்பிரதேசத்தில் வழங்கும் மொழியில் தமிழின் பாதிப்பைக் காண்கிறோம் என்ற கருத்து இப்போது பொதுவாக ஒப்புக்கொள்ளப்படுகிறது. உணர்ச்சி வயப்பட்ட இந்திய ஒருமைப்பாட்டுக்கு இது உதவும்.

### சங்க காலம்

தமிழ் இலக்கியத்தின் சிறப்பான காலம், சங்க காலம் எனப்படுவது.

இது இயேசு பிறப்பதற்கு முன்பு மூன்று அல்லது நான்கு

நூற்ருண்டுகள் வரை நீடித்திருந்த ஒரு காலகட்டம். சங்க கால இலக்கியத்தில் இப்போது நமக்குக் கிடைத்திருப்பவற்றுள் பழமை யானவை எட்டுத் தொகையும் பத்துப்பாட்டுமே.

சங்ககாலத் தமிழ்நாட்டில் 'பாலும் தேனும் ஓடிய'தாகவும் உணவு தானியங்களும் இறைச்சியும் மீனும் ஏராளமாக இருந்ததாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. மேற்கே இருந்த சேரநாடு, எருமை, பலா மிளகு, மஞ்சள் ஆகிய வளங்களைக் கொண்டிருந்தது. காவிரி பாயும் சோழநாடு தென்னுட்டின் நெற்களஞ்சியமாக விளங்கியது. தென் கோடியில் இருந்த பாண்டிய நாடு வள்ளிக்கிழங்கு, தேன், முத்து ஆகிய செல்வங்கள் உடையதாயிருந்தது.

அந்நாளில் பரம்பரை முடியாட்சியே நிலவிற்று. அரசன் சர்வாதி காரியாக இருந்து நினைத்த காரியத்தைச் சாதித்தபோதிலும், அறிவுடையோர்களின் ஆலோசனையை மதித்து நடந்தான். இலட்சிய அரசனுக` அவன் விளங்கவேண்டும் என்று மக்கள் எதிர்பார்த்தனர். எனவே, நீதி வழுவாமலும் சத்தியம் தவருமலும் உயர்ந்த குறிக்கோள்கள் உடையவனுகவும் அரசன் நடந்து கொள்ளவேண்டியவன் ஆனுன். நகரங்களில் இராக்காவல் இருந்தது. சிலசமயம் அரசர்களே இக்காவல்பணியை மேற்கொண்டு இரவில் நகர்வலம் வந்தனர். தெருக்கூத்துக்களில் இந்தக்காட்சியை இன்றும் நடிக்கிருர்கள். பாமரர் கதைளிலும் இந்த நிகழ்ச்சி இடம் பெற்றுள்ளது.

இசையும் நாடகமும் படிப்படியாக வளர்ச்சிபெற்று, மிக உயர்ந்த நிலையை எய்தியிருந்தன. வேட்டையாடுவது, மற்போர், குத்துச் சண்டை, பகடை ஆட்டம் முதலியன பொழுதுபோக்குகளாகவும் பலரும் விரும்பி ஆடும் விளையாட்டுக்களாகவும் விளங்கின. பெண்கள் மொட்டைமாடிகளில் சிறு பந்துகளை உருட்டி விளை யாடினர். இருபாலாரும் சேர்ந்து குளிப்பது, நீண்ட நெடுந்தூரம் நடப்பது ஆகியவை அன்ருட நிகழ்ச்சிகளாக இருந்தன. பொம்மை வில், அம்பு, பலவகைப் பொம்மைகள் ஆகியவற்றைக் குழந்தைகள் உபயோகித்தனர்.

பல்லவர்

பல்லவ மன்னர்கள் அறிவும் ஆற்றலும் நிறைந்திருந்தனர். நாடகம், இசை; கட்டிடக்கலை, சமயத்துறை, போர்க்கலை ஆகிய பலவகை இயல்களிலும் ஆழ்ந்த புலமை பெற்றவராய், தங்களுக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லை என்னும்படி கூரிய அறிவும் செயல்

திறனும் ஒருங்கேபெற்று மிளிர்ந்தனர். காவிரி வரையில் அவர்கள் ஆட்சி பரவியிருந்தது. சமயம், இலக்கியம், கலை ஆகிய முத்துறைகளும் அவர்களுடைய ஆட்சியில் ஏற்றம் பெற்றன. அவர்கள் சமஸ்கிருத மொழிக்குப் பேராதரவு காட்டினார்கள். அவர்களுடைய கல்வெட்டுக்களில் செய்திப்பகுதி (அரசனின் ஆணைகள்) தமிழிலும், மெய்க்கீர்த்திப் பகுதி சமஸ்கிருதத்தில் தமிழ்நாட்டிற்கு மட்டுமே உரிய சிறந்த வரிவடிவத்திலும், காணப்படுகின்றன.

பல்லவர் ஆட்சியில் இந்து மதத்தின் இரு கூறுகளான சைவம், வைணவம் இரண்டிலும் மறுமலர்ச்சி ஏற்பட்டது. சைவ சமயத்து நாயன்மார்களாலும் வைணவ சமயத்து ஆழ்வார்களாலும் தேவாரம், பிரபந்தங்கள் முதலியன பாடப்பெற்றன. அருளாளர்களான இப் பெருமக்களுடைய பாராட்டத்தக்க பணியின் விளைவாகச் சமணமும் பௌத்தமும் தமிழ்நாட்டில் செல்வாக்கிழந்தன. சம்பந்தரும் சுந்தரரும் அப்பரும் பாடிய தேவாரப்பாடல்களும் ஆழ்வார்கள் இயற்றிய பிரபந்தங்களும் உலகத்தின் சமய இலக்கியத்தில் நின்று நிலவும் தகுதியுடையன. பக்திப் பாடல்கள் என்ற புதுவகை இலக்கியத்துக்கு அவை அடிகோலின. அவற்றின் உள்ளத்தை ஈர்க்கும் தன்மையும் பண்ணுடன் அமைந்த இயல்பும் செய்யுள் துறையில் ஒரு புதிய போக்குக்கு வழிவகுத்தன. மாணிக்கவாசகப் பெருமான் படைத்த திருவாசகம் 'பக்தர் எல்லாம் பாராட்டும்' இயல்பும் வையமெலாம் போற்றும் சிறப்பும் உடையது. திருவாசகத்திற்கு உருகார் ஒரு வாசகத்துக்கும் உருகார் என்று சொல்வதுண்டு. திருவாசகத்தால், தமிழ்நாட்டில் சமய மறுமலர்ச்சி வேகம்பெற்றது. இந்தப் பாடல்கள் மக்களிடம் வேரூன்றின ; வீட்டில் தனித்தனியேயும், கோயில்களில் பலர் சேர்ந்து ஒரே குரலில் பல்லவிபோலவும், பாடினார்கள்.

சமாதி கட்டுவதற்குமட்டுமே கற்களைப்பயன்படுத்தி வந்த நிலையை மாற்றி, பல்லவர்கள் கற்களைக்கொண்டு கோயில்கள் அமைத்தனர். அவர்கள் காலத்திற்குமுன் மரம், மண், செங்கல், உலோகங்கள் ஆகியவற்றாலேயே கோயில்கள் கட்டப்பட்டன. மலையைக் குடைந்து சிவனுக்குக் குடைவறைக்கோயில் கட்டிய முதல் அரசன் மகேந்திர பல்லவன் ஆவான்.

### சேரர்

சேரர் மேற்குக் கடற்கரையில் ஆட்சிபுரிந்தனர். யானைத்தந்தம், வாசனைப்பொருள்கள் முதலியவை பெரிய அளவில் சேர நாட்டிலிருந்து வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி ஆயின. பாண்டிய,

சோழ அரசர்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது சேரர்கள் நீர்வளச் செல்வம் நிரம்பியவர்களாயிருந்தனர்.

### சோழர்

சோழவம்சத்தில் ஆடவரும் பெண்டிரும் திறமைமிக்கவர் களாகவும் பேராற்றல் படைத்தவர்களாகவும் இருந்தனர். கலையழகில் ஈடுபாடு, அறிவுத் துறைகளில் நுண்ணிய ஆர்வம், சமயத்தில் ஆழ்ந்தபற்று ஆகிய மூன்று இயல்புகள் வழிவழியாக அவர்களுக்குக் கைவந்து அவர்களுடைய இரத்தத்திலேயே இரண்டறக் கலந்து விட்டன. புதிய கோயில்களைக்கட்டுவது, பழைய கோயில்களில் புதிய மண்டபங்கள் கட்டுவது அல்லது அவற்றை விரிவாக்குவது ஆகிய திருப்பணிகளைச் சோழர் பெரும் அளவில் மேற்கொண்டனர். அவை என்றென்றும் சோழர் புகழை நிலைநாட்டும். பத்தாம் நூற்றுண்டில் முதலாம் ராஜ ராஜசோழன் தஞ்சாவூரில் கட்டியுள்ள கோயிலும், அவன் மகனுன முதலாம் ராஜேந்திரன் கங்கைப் பகுதியில் தான் அடைந்த வெற்றியின் நினைவாகக் கங்கைகொண்ட சோழபுரத்தில் கட்டியுள்ள கோயிலும், மிகவும் அழகுவாய்ந்தவை. அவற்றின் கட்டிடக்கலை, சிற்பக்கலை, இரண்டும் தனிச் சிறப்பு வாய்ந்தவை. வெண்கலத்தில் இறை உருவங்களைச் சமைப்பதிலும் சோழர்கள் தலைசிறந்து விளங்கினுர்கள்; இந்தத் துறையில் அவர்கள் காட்டியுள்ள கைவண்ணம் ஈடு இணையற்றது. காலத்தைக் கடந்து நிற்கும் அவர்தம் கலைப்பெருமை எழுத்தில் வடிக்க இயலாது.

கிராம ஆட்சியை, சோழர் ஊக்குவித்தனர். கிராமப் பஞ்சாயத்து அங்கத்தினர்களுக்குச் சோழர்கள் கூடுதலான அதிகாரங்களையும் பொறுப்புக்களையும் கொடுத்தார்கள். ஏரிகள் வெட்டுவது, அணைக் கட்டுகள் கட்டுவது, வாய்க்கால்கள் தோண்டுவது ஆகியவற்றில் அவர்கள் பெரிதும் கவனம் செலுத்திஞர்கள். திருச்சி மாவட்டத் திலுள்ள ஜெயங்கொண்டான் ஏரியும், தஞ்சை மாவட்டத்திலுள்ள கல்லணையும் அவர்கள் பொறியியல் துறையில் அடைந்திருந்த வியத்தகு முன்னேற்றத்திற்குச் சான்ருக விளங்குகின்றன.

தென் கிழக்கு ஆசியாவில் தமிழ்மொழியும் தமிழர் பண்பாடும் பரவியுள்ளதற்குச் சோழர்களே பெரிதும் காரணமாவார்கள். இன்றுங்கூட, சயாம் என்னும் தாய்லந்து நாட்டில் அரசருடைய முடிசூட்டுவிழாவில் திருப்பாவையும் திருவெம்பாவையும் பாடப் படுகின்றன. இந்தோனேசிய மொழியிலும் மலாய் மொழியிலும் பல

தமிழ்ச் சொற்கள் உள்ளன. தமிழ்மரபு வழிவந்த பல கல்வெட்டுக்களை இந்த நாடுகளில் காணலாம்.

கோயில் கட்டிடக்கலையில், தமிழ்நாட்டு மரபை உலகப்புகழ்பெற்ற அங்கோர்வாட் கோயிலிலும் ஏனைய கோயில்களிலும் பார்க்கலாம். மதுரை, மூவார் என்ற தமிழ்ப் பெயர்களுடன் கூடிய ஊர்கள் இந்தோனேசியாவிலும் மலேசியாவிலும் உள்ளன. சைவசமயத்தைச் சார்ந்த மக்கள் இன்றும் மலாக்காவில் வாழ்கின்றனர்.

குடிமக்களுடைய குறைகளைச் சோழர்கள் உடனுக்குடன் தீர்த்து வைத்தார்கள். அரண்மனை வாயிலில் ஆராய்ச்சி மணியைத் தொங்கவிட்டிருந்தனர். அதை அடித்து, குடிமக்கள் உடனே அரண்மனையுள்ளே சென்று அரசரிடம் எதைப் பற்றிவேண்டு மானாலும் முறையிட்டுக்கொள்ளும் உரிமை பெற்றிருந்தனர். மனு நீதிச் சோழன் என்ற அரசனின் மகன் தேரோட்டிச் சென்றபோது கன்றுக்குட்டி ஒன்றின்மீது அவனுடைய தேர்க்கால் ஏறி, அந்தக் கன்று உயிரிழந்ததாகவும், அந்தக் கன்றினை ஈன்ற பசு கண்ணீரும் கம்பலையுமாய் ஆராய்ச்சி மணியை அடித்ததாகவும், உடனே அரசன் விசாரணை செய்து தன் மகன்மீதே தேரை ஏற்றச் செய்ததாகவும், இறைவனுடைய கருணையால் இளவரசனும் கன்றும் புத்துயிர் பெற்றதாகவும் சொல்லப்படுகிறது.

தேர்த் திருவிழா அல்லது தேரோட்டம் என்பது தமிழ்நாட்டின் சமய வரலாற்றில் ஒரு முக்கியமான நிகழ்ச்சி. கோயில் தேரை இழுப்பது கேவலமானதென்றோ அல்லது கௌரவக் குறைவானது என்றோ ஒருவரும் நினைப்பதில்லை. சோழ அரசர்கள் தாங்களே முன்நின்று தேர்களை இழுத்தார்கள். மக்கள் பெருந்திரளாகக் கூடித் தேரை இழுப்பார்கள். ஆகையால் எங்கேயாவது கூட்டம் நிறைய இருந்தால், ‘தேர் வடம்பிடித்த மாதிரி ஆட்கள் திரண்டிருக்கிறார்கள்’ என்று உவமிப்பது தமிழர் மரபு.

கோயில் திருப்பணியாளர்களான பாண்டிய, சோழ அரசர்கள் தாங்களே இப்பணிகளை நேரடியாகக்' கவனித்தனர். வேலைகள் அரசர்களின் நேரடிக்கண்காணிப்பில் நடைபெற்றன. கல்தச்சர்களான சிற்பிகளையும் ஸ்தபதிகளையும் அரசர்கள் பேணினர். அவர்களுடன் இருந்து, அவர்களுக்கு வேண்டிய வசதிகளை அரசர்களே செய்து கொடுத்தார்கள். ஒரு ஸ்தபதி வெற்றிலை போட்டுக்கொண்டு அந்த எச்சிலைத் துப்ப நேரிட்டபோது, அரசனே அவனுக்கு எச்சிற் பணிக்கத்தை ஏந்தி அவனுக்குப் பணிவிடை செய்ததாகச் சொல்லப் படுகிறது.

### பாண்டியர்

பாண்டியர்கள் தென்கோடியில் செல்வாக்குப் பெற்றிருந்தனர். குறிப்பாகத் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குப் பாண்டியர்கள் பெரும் சேவை புரிந்துள்ளனர். கழுகுமலையிலுள்ள குடைவரைக் கோயில் அவர்களுடைய கலை ஆர்வத்துக்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாகும். நாட்டுப் பாடல்களில் பாட்டனைக் குறிப்பிட 'பாண்டியரோ உங்கள் அப்பன்' என்று சொல்வது மரபு.

### விஜயநகரப் பேரரசின் ஏற்றம்

திறமைமிக்க தளபதிகளின் உதவியால், விஜயநகரப் பேரரசு தென் இந்தியாவில் நிறுவப்பட்டது. ஆனால் தமிழ் நாட்டில் பெயரளவில்தான் விஜய நகர ஆட்சி நடந்தது.

விஜயநகரப் பேரரசின் தளபதிகளான மதுரை நாயக்கர் முதலிய சிற்றரசர்கள் கோயில் திருவிழாக்களைப் பெரிய அளவில் கொண்டாடினார்கள். 16 கால் மண்டபம், நூற்றுக்கால் மண்டபம் முதலியவற்றைக் கட்டினார்கள். அவர்கள் அளித்த ஆதரவினால் ஆந்திராவிலிருந்து தமிழ்நாட்டுக்கு ஏராளமான பிராமணர்களும் கைத்தொழில் கலைஞர்களும் குடியேறினார்கள். ஸ்ரீவில்லிபுத்தூரிலும் வேறு பல நகரங்களிலும் தெலுங்கர் குடியிருப்புக்கள் தோன்றின. தளிக்கோட்டையில் விஜயநகரப் பேரரசு தோல்வி அடைந்த பிறகு, செஞ்சியிலும், தஞ்சாவூரிலும், மதுரையிலும் அவர்களுடைய பிரதிநிதி (கவர்னர்)களாக இருந்தவர்கள் தங்கள் தங்கள் பகுதிகளுக்குச் சுதந்திரமான அரசர்கள் ஆயினர். இவர்கள் 'நாயக்கர்கள்' என்றழைக்கப்பட்டனர்.

இந்த நாயக்க மன்னர்களின் பேராதரவில், பழைய கோயில்கள் புதுப்பிக்கப்பட்டன. புதிய கோயில்களும் கட்டப்பட்டன. மதுரையிலுள்ள பொற்றாமரைக் குளம், திருமலை நாயக்கர் பெயரால் உள்ள மஹால் (அரண்மனை) ஆகிய இரண்டும் உலகப் புகழ்பெற்றவை.

### மராட்டிய ஆட்சி

1677-ல் சிவாஜி கர்நாடகத்தின்மீது படையெடுத்தான். இதன் இறுதிக்கட்டமாக, தஞ்சாவூரில் மராட்டியச் சிற்றரசு ஒன்று ஏற்பட்டது.

தஞ்சைத் தரணியை ஆண்ட மராட்டிய அரசர்களுள் அறிவுக் களஞ்சியமாக விளங்கியவர் ராஜா சரபோஜி. ஸ்குவார்ட்ஸ் என்ற

டென்மார்க் நாட்டுப் பாதிரியாரிடம் அவர் கல்வி பயின்ருர். ஸ்குவார்ட்சுக்கு சரபோஜியிடம் இருந்த செல்வாக்கைப் பயன் படுத்திக்கொண்டு, டென்மார்க், ஹாலந்து, இங்கிலாந்து, பிரான்ஸ் ஆகிய நாட்டினர் மராட்டிய ஆட்சியின்போது தஞ்சைக் கடற்கரை யெங்கும் வணிக நிலையங்களையும் தொழிற்சாலைகளையும் நிறுவிக் கொண்டார்கள். இதனுல் ஐரோப்பிய நாடுகளுக்கிடையே பொரு மையும் பூசலும் ஏற்பட்டன. இறுதியாக, புதுச்சேரியில் பிரெஞ்சு ஆட்சி ஏற்பட்டு 150 ஆண்டுகளுக்கு நடைபெற்றது. சென்னை நகரத்தில் புனித ஜார்ஜ் கோட்டையில் கிழக்கிந்தியக் கம்பெனி, தன்னுடைய தலைமை அலுவலகத்தை வைத்துக்கொண்டது.

### முஸ்லிம் ஆட்சி

18-ம் நூற்ருண்டில் முஸ்லிம் அரசர்களான ஹைதர் அலியும் திப்புசுல்தானும் படையெடுத்ததால், தமிழ்நாட்டின் பெரும்பகுதியில் அமைதி குறைந்து கொந்தளிப்பு ஏற்பட்டது. 'ஹைதர் அலி என்ருல் அழுத பிள்ளையும் வாய் மூடும்' என்பது ஒரு தமிழ்ப் பழமொழி. வட ஆர்க்காட்டிலும் ஏனைய மாவட்டங்களிலும் முஸ்லிம்களின் குடியிருப்புக்கள் தோன்றி, ஆர்க்காட்டு நவாப், அரசியலில் வல்லமை பொருந்திய ஒரு சக்தியாக விளங்கலானுர். "நீ என்ன பெரிய ஆர்க்காடு நவாப் மகன் மாதிரி பேசுகிருயே" என்று சாதாரண மக்கள்கூட நாட்டு வழக்கில் சொல்லுகிருர்கள். இதிலிருந்து நவாபுகளுடைய முக்கியத்துவத்தையும் பாமரமக்கள் சமுதாயத்தில் அவர்கள் பெற்றிருந்த நிலையையும் உணரலாம். நவாபும் அவருடைய போர்ப்படை வீரர்களும் மிகவும் விலையுயர்ந்த காலணிகளை அணிந்து கொண்டதால், 'அடிபட்டாலும், ஆர்க் காட்டுச்சடாவால் அடிபட வேண்டும்' என்று ஒரு பழமொழி வழங்கிவருகிறது. 'நவாப் அத்தனை ஏழை, புலி அத்தனை சாது' என்பது இன்னெரு பழமொழி.

### பிரிட்டிஷ் ஆட்சி

தமிழ்நாட்டுக்கு ஏனைய மாநிலங்களைவிட முன்னதாகவே ஐரோப் பியத்தொடர்பு ஏற்பட்டுவிட்டதால், இங்கு ஆங்கில மொழியும் கிறிஸ்தவ சமயமும் பரவின. சமீபகாலத்தில் தமிழ் அடைந்திருக்கும் வளர்ச்சிக்கு, இந்நாட்டில் பரவியுள்ள மேனுட்டு முறைக்கல்வியும் ஐரோப்பிய அறிஞர்களின் தமிழ்ப்பணியும் உறுதியாகத் துணை புரிந்திருக்கின்றன. உலகின் பல்வேறு பகுதிகளிலும், பிரிட்டிஷ்

ஃபிரெஞ்சு ஆட்சிகளுக்குட்பட்ட இடங்களில் தமிழர்கள் பெருவாரியாகக் குடியேறினர்.

## விடுதலைப்போர்

இந்தியாவை அந்நியர் ஆட்சியிலிருந்து விடுவிப்பதற்கான இயக்கத்தில், தமிழ்நாடு பெரும்பங்கு கொண்டது. வீரபாண்டியக் கட்டப் பொம்மன் ஆங்கிலேயருடன் நடத்திய சண்டைகளும், சிவகங்கைச் சீமையில் ஆங்கிலேயப் படையுடன் சலியாமலும் துணிச்சலுடனும் மருது சகோதரர்கள் புரிந்த ஓயாத போர்களும், வேலுத்தம்பி, பூலித்தேவர் ஆகிய விடுதலை வீரர்களின் வீரம் நிறைந்த பல போராட்டங்களும், வேலூரில் நிகழ்ந்த சிப்பாய்க் கலகமும் தமிழ் நாட்டின் சுதந்தர இயக்க வரலாற்றில் பொன் எழுத்துக்களில் பொறிக்கத்தக்கவை. இவற்றில் சில நிகழ்ச்சிகளைப்பற்றிய நாட்டுப் பாடல்களும் தெருக்கூத்துக்களும் பாமரர் உள்ளங்களில் பதிந்துள்ளன.

பாரத தேசந்தன்னை வாழ்விக்க வந்த காந்தி மகாத்மா, இந்திய அரசியலில் அடியெடுத்து வைத்த பிறகு, தமிழ்நாட்டில் நடந்த முக்கியமான நிகழ்ச்சி, ராஜாஜியின் சீரிய தலைமையில் வேதாரண்யத்துக்கு உப்பு சத்தியாக்கிரக வீரர்கள் அணிவகுத்துச் சென்றது தான். எவருக்கும் தீங்கிழைக்காமலும் வன்முறையின்றியும் இந்தப் போராட்டம் நடைபெற்றது என்பது, ‘கத்தியின்றி ரத்தமின்றி யுத்தமொன்று வருகுது’ என்ற நாமக்கல் கவிஞர் பாடலால் தெரியவரும். இதற்குப் பின்னர் தமிழ்நாட்டில் நடந்த இந்திய விடுதலைப் போர் சம்பந்தமான முக்கிய நிகழ்ச்சிகளாக, கப்பலோட்டிய தமிழர் வ. உ. சிதம்பரனார், சுதேசிக் கப்பலை மிதக்க விட்டதையும், வெள்ளையனே வெளியேறு இயக்கத்தைத் தொடர்ந்து குலசேகரப்பட்டினத்திலும் திருவாடானையிலும் தேவகோட்டையிலும் திருப்பூரிலும் வன்முறைச் செயல்கள் நடைபெற்றதையும், ஜப்பானியரால் பர்மாவும் மலேயாவும் கைப்பற்றப்பட்டபின் அங்கு நேத்தாஜி சுபாஷ் சந்திரபோஸ் அமைத்த இந்திய தேசிய இராணுவத்தில் பல்லாயிரக்கணக்கான தமிழர்கள் சேர்ந்ததையும் குறிப்பிடலாம்.

இதற்கும் முன்னதாக, தென்ஆப்பிரிக்காவில் தமிழ் இளைஞர் சிலர்—ஆடவரும் பெண்டிரும்—காந்தியடிகளுடன் தொடர்பு கொண்டிருந்தனர். ‘என்னை உருவாக்கியதில் அவர்களுடைய

பங்கு கணிசமானது; என்னுடைய பணி வெற்றியடைய அவர்கள் செய்த உதவிகளும் பல ' என்று காந்தி மகானே சொல்லியிருக்கிறார்.

## இன வகை

மக்களில் சிலர் தீவு வாழ்நர். ஏனையோர் நிலப்பகுதியில் மட்டுமே குடியிருப்பவர்கள். தமிழ்நாட்டில் பெரும்பகுதி மக்கள், நிலப் பகுதியில் வாழ்பவர்களே. மலைப்பகுதிகளைத் தாயகமாகக் கொண்ட பழைய இனத்தவர்களிடம் நீக்ராயிடு இன இயல்புகள் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. தமிழர்கள் பொதுவாக சிறு உருவத்தினராயும் மெல்லிய உடற்கட்டுடையவராயும் உள்ளனர்.

பல இனச்சாயல்கள் கலந்த ஒரு கதம்பமாகத் தமிழர்கள் விளங்குகின்றனர்: சிலர் கறுப்பு நிறத்தவர், சிலர் நடுத்தரமான பழுப்பு நிறத்தோல் உடையவர்கள், சிலர் மாநிறத்தினர்; தலையில் அதிகமாக மயிர் முளைக்காதவர்கள், ஆனால் உடல் முழுவதும் ஓரளவு மயிர் உடையவர்கள்; ஓரளவு சரிவான, அகன்ற நெற்றி உடையவர்கள், அடர்ந்து வளைந்த புருவத்தினர்; சராசரியாகவோ அல்லது மிக அகலமாகவோ உள்ள பழுப்பு நிறக்கண்கள் உடையவர்கள்; கண்ணின்மேல் இமை மடிப்பு இல்லாதவர், அகன்ற நாசித்துவாரங்களும் புறங்கனிந்த வடிவமும் கொண்ட மூக்கு உடையவர்.

நீலகிரி மாவட்டத்திலுள்ள தோதவர்கள் பழங்குடி மக்களிலேயே மிகவும் பழமையானவர்களாகக் கருதப்படுகிறார்கள். அவர்கள் பெரும்பாலும் உயரமான தோற்றம் உடையவர்கள்.

திராவிடப் பண்பாட்டைப்பற்றி இங்கு சொல்லுவது பொருந்தும். "இந்துக்களின் மதம் மற்றும் பண்பாட்டின் இன்றையக் கலவையைப் பொறுத்தவரையில், அதில் ஆரியமும் திராவிடமும் ஊடும் பாவுமாக உள்ளன என்றும், நமது பண்பாட்டில் முக்கால் பங்கு ஆரியம் அல்லாதது (திராவிடம்) என்றும் சொல்லலாம்" என்பது பேரறிஞர் டாக்டர் சுநீதிகுமார் சாட்டர்ஜியின் கருத்து.

திராவிடர்களிடம் ஆரியர்கள் தங்களுடைய மொழியைப் பரப்பி யிருக்கிறார்கள் என்றும் ஆரியர்களிடம் திராவிடர்கள் தங்களுடைய பண்பாட்டைப் பரப்பியிருக்கிறார்கள் என்றும் டாக்டர் கில்பர்ட் ஸ்லேட்டர் எழுதியிருக்கிறார்.

## பழமையான மக்களினக் குடியிருப்புக்கள்

இன்றைய வழக்கில், சேர்ந்து வாழ்பவர்கள் ஒரு 'சமுதாயம்' எனப்படுகிறார்கள்.

தொல்காப்பியர் கருத்தில் மனிதருக்கு மட்டுமே ஆறறிவு உண்டு. ஆறாவது அறிவு மனம் அல்லது காரிய காரண அறிவு. உலகத்தைத் தொல்காப்பியர் ஆறு கூறுகளாகப் பிரிக்கிறார். முதல் கூறில் தாவரங்கள் அடங்குகின்றன. தொட்டால் அவை உணர்ச்சி பெறுகின்றன, அவ்வளவுதான். இரண்டாவது கூறில், ஊர்ந்து செல்லும் சிறு பிராணிகள் அடங்கும். தொட்டால் ஏற்படும் உணர்வும் சுவை உணர்வும் அவற்றுக்கு உண்டு. மூன்றாவது கூறில், மரத்தை உணவாகக்கொண்ட சில சின்னஞ்சிறு உயிரினங்களும் எறும்பும் அடங்கும். இவற்றுக்கு, தொட்டாலும் சுவைத்தாலும் மூக்கால் நுகர்ந்தாலும் உணர்ச்சி ஏற்படும். நான்காவது கூறு, நண்டுகளும் லாப்ஸ்டர் என்னும் மீன் வகையும். இவற்றுக்கு நான்கு வகை உணர்ச்சிகள் உண்டு—தொட்டாலும் சுவைத்தாலும் நுகர்ந்தாலும் பார்த்தாலும் இவை உணர்வு பெறுகின்றன. ஐந்தாவது கூறு, பறவைகளும் விலங்குகளும். இவற்றுக்கு ஐந்து அறிவுகள் உண்டு. தொட்டாலும், சுவைத்தாலும், நுகர்ந்தாலும், பார்த்தாலும், கேட்டாலும் இவை உணர்வு பெறுகின்றன. ஆறாவது கூறில் ஆறறிவுடைய மக்கள் அடங்குவார்கள். ஆறாவது அறிவு என்பது நல்லது, கெட்டதைக் கூர்த்த மதியால் பகுத்துணரும் ஆற்றல். மக்கள் சிலரிடம் ஆறாவது அறிவு செயல்படாமல்போய் மழுங்கியிருந்தால் அவர்களை மாக்கள் என்று குறிப்பிடுவதும், பண்பட்டவர்களாகத் திகழ்ந்து ஆறு அறிவுகளையும் உடையவர்களை மக்கள் என்று குறிப்பிடுவதும் தமிழர் மரபு.*

ஐவகை நிலம் என்ற பழைய தமிழ்ப் பாகுபாட்டில், ஒவ்வொரு திணைக்கும் உரிய இனத்தலைவனுக்கும், தலைவிக்கும் சிறப்பிடம்

---

*ஓரறிவு—புல்லும் மரமும், ஏனென்றால் நகராது
ஈரறிவு—சிப்பி, சங்கு, நகரும்

| | |
|---|---|
| மூவறிவு—கரையான், எறும்பு | பறக்கமுடியாது |
| நாலறிவு—தும்பி, வண்டு | பறக்கும் |
| ஐந்தறிவு—மிருகம் | கண்டு, கேட்டு, உண்டு வாழும், ஆனால் பேசமுடியாது |
| ஆறறிவு—மனிதன் | கண்டு, கேட்டு, உண்டு, வாழ்வதோடு நன்மை எது, தீமை என்று தெரியக்கூடிய பகுத்தறிவும் உடையவன். |

வழங்கப்பட்டது. சான்ருக, மலேயும் மலேசார்ந்த பகுதிகளும் என்பதில் இன்றைய பழநிமலே, நீலகிரி, மேற்குத் தொடர்ச்சி மலேகள் அடங்கும். இவற்றின் தலேவன் பொருப்பன், வெற்பன், சிலம்பன் என்ற பெயர்களால்வழங்கப்பட்டான். இவனுடைய மனேவி கொடிச்சி அல்லது குறத்தி என்ற பெயரால் வழங்கப்பட்டாள். பொருப்பனேத் தலேவனுகக் கொண்ட குறிஞ்சி இனத்தவர் இரு பெரும் பிரிவுகளாக வாழ்ந்தனர்-ஒரு பிரிவினர் கணவர் என்றும் மற்ரெரு பிரிவினர் குறவர் என்றும் பெயர் பெற்றனர். இரு பிரிவினரின் மனேவிமார்களும் குறத்தியர் எனப்பட்டனர்.

நீர்வளம் நிறைந்த தஞ்சைப் பகுதியில், குடியிருப்பின் தலேவனுக்கு **மகிழ்நன்** அல்லது **ஊரன்** என்றும் அவன் துணேவிக்கு **மனேவி** அல்லது **கிழத்தி** என்றும் பெயர்கள் வழங்கிவந்தன. வேளாண்மைச் செழிப்பு நிறைந்த செல்வக குடியினரின் தலேவர் தலேவியர் உழவர்-உழத்தியர், கடையர்-கடைச்சியர் எனப்பட்டனர்.

கடலோரப் பகுதிகளில், குடியிருப்பின் தலேவன் சேர்ப்பன் அல்லது புலம்பன் ஆவான். அவன் மனேவி, பரத்தி அல்லது நுழைச்சி.

## பண்பாட்டுச் சூழல்

புலவர் போற்றிய ஐவகை நிலம் என்ற பாகுபாடு இப்போது இல்லே. பொருளாதார மாறுதல்களாலும் அரசியல் விளேவுகளாலும் சமுதாயம் உருத் தெரியாமல் சிதைந்து அதன் பழைய இயல்புகளே இழந்து வருகிறது.

தெருக்கள், வீடுகள், சமுதாய மன்றங்கள் ஆகியவற்றின் அமைப்பு தமிழ் நாடெங்கும் ஒரே மாதிரியாக இருந்தது. ஒவ்வொரு கிராமமும் கோயிலேச் சுற்றியோ கோயில் அருகேயோ அமைந் திருந்தது. கோயில் குருக்களாகப் பெரும்பாலும் பிராமணரே பணி புரிந்ததால் அவர்களுடைய வீடுகள் உள்ள அக்கிரகாரம் என்ற பகுதி, கோயிலுக்கு அருகே இருந்தது. அவற்றுக்கு அருகே பிள்ளேமார், முதலியார்கள் ஆகியோரின் வீடுகள் இருந்தன. ஊர் நடுவே அமைந்த மேற்கண்ட வீதிகளே அடுத்து, வணிகர்கள் குடியிருந்தார்கள். தீண்டப்படாத மக்கள் ஊருக்கு வெளியே அவர்களுக்கென ஒதுக்கப்பட்ட பகுதியில் வாழ்ந்தார்கள்.

மதுரை போன்ற வரலாற்றுச் சிறப்புள்ள நகர்களில்கூட மக்கள் தொழில்வாரியாக, கூட்டம் கூட்டமாக வாழ்வதைப் பார்க்கிருேம்.

சான்ருக, நகை வணிகர் தெற்கு ஆவணி மூலவீதியில் உள்ளனர். இதே போல, கண்ணுடிக்காரத் தெரு, சுண்ணும்புக்காரத் தெரு, தொட்டியன் கிணற்றுச் சந்து என்பவை அந்தந்தத் தொழிலாளர்கள் தொகுப்பாக வாழ்ந்த பகுதிகளாகும். பழமையும் வைதிகமும் நீங்கி பகுத்தறிவு பரவி வருவதால் கிராமங்களின் அமைப்பும் நகரங்களின் அமைப்பும் வெகு வேகமாக மாறி வருகிறது. சில அக்கிரகாரங் களில் ஏனைய சாதியாரும் இப்போது குடியிருக்கிருர்கள். இந்துக்கள் தவிர ஏனைய மதங்களைச் சார்ந்தவர்கள் கிராமங்களின் புறப்பகுதி களிலோ, அல்லது அகப்பகுதிகளில் குறிப்பிட்ட ஓர் இடத்திலோ வாழ்ந்தனர். இதெல்லாம் கடந்த காலத்திய நிலை. இப்போது 'சேர்ந்து வாழ்வது' வழக்கமாகிவிட்டது. குறிப்பாக, திருவிழாக்கள் எல்லாச் சாதிகளையும் இணைக்கின்றன. திருவிழாவை நடத்துவதில் ஒவ்வொரு சாதிக்கும் குறிப்பிட்ட ஒரு கடமையும் பொறுப்பும் உண்டு.

பிரிட்டிஷ் ஆட்சி ஏற்பட்டது, இஸ்லாம் கிறிஸ்தவம் ஆகிய சமயங்கள் பரவியது, சமீப காலத்தில் பகுத்தறிவு இயக்கம் தோன்றி யது முதலிய சூழ்நிலைகளால் இந்துமதத் திருவிழாக்களில் அவற்றின் பழமைச் சிறப்பு குன்றியது. இந்து மதத்தைப் பலரும் தாக்கினர். தாக்குபவர்களின் எதிர்ப்பிலிருந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்வதே இந்து மதத்தினரின் பெரிய வேலையாகப் போய்விட்டது. இந்தப் பின்னணியில் அமெரிக்கப் பெருநகரான சிக்காகோவில் கூடிய உலக மதங்களின் பாராளுமன்றத்தில் சுவாமி விவேகா னந்தர் இந்து மதத்தை விளக்கி அரியதோர் உரை நிகழ்த்தி அதன் வாயிலாக இந்தியாவின் பெருமையும் பழஞ்சிறப்பும் கொடிகட்டிப் பறக்கச் செய்தார். அவருடைய சிக்காகோப் பயணம் வரலாற்றுச் சிறப்புடையது. அந்தப் பயணத்தை மேற்கொள்ளவேண்டும் என்ற எண்ணம், முக்கடலும் கூடி முழங்கும் கன்னியாகுமாரியில் சுவாமிகள் தவம் இருந்தபோதுதான் அவருக்குத் தோன்றிற்று. அந்தப் பயணத்திற்குரிய செலவுகளை இராமநாதபுரம் அரசரும் புகழுடன் விளங்கிய வள்ளலுமான பாஸ்கர சேதுபதி அவர்களே ஏற்றுக்கொண்டார். விவேகானந்தர் இந்தியாவுக்குத் திரும்பிய பின்னர், சென்னையில்தான் இராமகிருஷ்ண மடத்தை முதன் முதலாக நிறுவினர். அது இப்போது இந்தியாவெங்கும், உலகெங் கும், கிளைவிட்டு இராமகிருஷ்ணரும் விவேகானந்தரும் புகட்டிய அறிவுரைகளை நாளும் பரப்பி வருகிறது.

வியாபாரத்தில் ஏற்பட்ட திடீர்ப் பெருக்கத்தாலும் அரசாங்க ஆதரவாலும் சில சாதிகளில் செல்வம் பெருகி வழிகிறது. மேல் சாதியார் மட்டும் குடியிருக்கும் பகுதிகளில் யார் ஏழை, யாருக்குப் பணம் உடனடி தேவை, என்பவற்றை இவர்கள் அறிந்து, மிகக் கூடுதலான விலை கொடுத்து ஒரு வீட்டை விலைக்கு வாங்கி, மேல் சாதியினரின் கோட்டைக்குள் புகுந்துவிடுகின்றனர். இதனால் ஒரு சாதியார் மட்டும் வாழ்ந்து வந்த தெருவில், பலரும் சேர்ந்து வாழக்கூடிய சூழ்நிலை உருவாகிறது. படிப்படியாகிய அந்தத் தெருவில் புதிய சாதியினர் மேலும் புகுந்து அதை எல்லாச்சாதியின ருக்கும் உரியதாகச் செய்து விடுகின்றனர். முதலில் அங்கு படை யெடுத்தவர் கொடுத்த கூடுதலான விலை, அவருடைய சாதியின் மகமைப் பணத்திலிருந்து அவருக்கு ஈடு செய்யப்படுமென்று சொல்லப்படுகிறது.

## சமூக பொருளாதார நிலை

இந்தியாவின் ஏனைய பகுதிகளில் போலவே தமிழ்நாட்டிலும், மக்கள் சமுதாயத்தின் தேவைகளை அனுசரித்துத் தாங்களே பண்டங்களை உற்பத்தி செய்ய வேண்டும், என்பதே குறிக்கோளாக இருந்து வந்திருக்கிறது. வாரம் ஒரு கிழமையில் நடக்கும் சந்தை யிலும், குறிப்பிட்ட வியாபார நகரங்களில் அல்லது திருவிழாக் காலங்களில் கூடும் பெரிய சந்தைகளிலும், மக்கள் தங்களிடமுள்ள உபரிப் பொருள்களைக் கொடுத்துத் தங்களி ் இல்லாததும் தங்க ளுக்குத் தேவையானதுமான இன்றியமையாப் பொருள்களைப் பெற்றுக்கொண்டனர். இந்தப் பண்டமாற்று முறையே பெருவாரி யாக அமுலில் இருந்தது.

திருநெல்வேலி மாவட்டத்தின் எல்லைப்புறக் கிராமங்களில் கூடும் சந்தைக்கு வடக்கன்சேரிக் கிராமத்தினர் கொண்டுவரும் ஈராழி முண்டுகளை, மக்கள் அரிசி அல்லது உபரியாகத் தங்களிடமிருக்கும் பிற பொருள்களைக் கொடுத்து வாங்கிக்கொள்ளுவதை இன்றும் காணலாம். வரவர இந்தப் பண்டமாற்று முறை, பணப்புழக்கத் தால் கைவிடப்பட்டு வருகிறது. சிற்றூர்களிலும் கடைகள் வந்து விட்டன. கடைகளில் எல்லா வகையான பொருள்களும் விற்பனை யாகின்றன. ஆகையால் பண்டமாற்று முறை ஒழிந்துவிட்டது. விவசாயக் கருவிகள், கால்நடைகள் முதலியவற்றை விற்கவும்

வாங்கவும் சந்தைகள் உதவுகின்றன. அதனால் பெரும்பாலும் திருவிழாக்களை ஒட்டிச் சந்தைகள் கூடுகின்றன.

முன்பு அந்தந்தச் சாதியினரின் தொழிலுக்குத் தக்கவாறு, அவர்களுடைய பொருளாதார அமைப்பு இருந்தது. பிராமணர்கள், கோயில் பூசை முதலிய வேலைகளையும் பஞ்சாங்கம்-சோதிடம் பார்த்துச் சொல்லுவதையும் தொழிலாகக் கொண்டிருந்தார்கள். சமீப காலம்வரை அவர்கள் நிலையான வருவாய் தரும் உத்தியோகம் செய்பவர்களாக இல்லை. அரசர்கள் கொடுத்த நில மானியங்களிலிருந்து கிடைத்த வருமானத்தையே அவர்கள் எதிர் பார்த்து வாழ்ந்துவந்தனர். எளிய வாழ்க்கை, உயர்ந்த சிந்தனை என்ற கொள்கை உடையவர்களாக இருந்தனர்.

கோவையில் கவுண்டர்கள், செங்கற்பட்டிலும் பிற மாவட்டங் களிலும் முதலியார்கள், திருநெல்வேலி மாவட்டத்தில் பிள்ளைமார்— இவர்கள் வேளாளராக, பெரிய அளவில் வேளாண்மைத் தொழிலில் ஈடுபட்டிருந்தவர்கள். அவர்கள் வேளாண்மை வேலைகளை மேற் பார்த்து, தங்கள் உபரி விளைவுகளை விற்று-வருவாய் பெற்றனர். கிராமங்களில் வாணிபம் கோமுட்டிச் செட்டிகள் போன்ற வைசிய சாதியார் கையில் இருந்தது. சமீபகாலத்தில், தமிழ்நாடெங்கும், வியாபாரத் துறையில் முன்பு வைசியர்கள் வகித்த இடத்தை நாடார் சமூகத்தார் வகிக்கின்றனர்.

முன்பு கள் இறக்குதலில் ஈடுபட்டிருந்த சாணார்கள், சுதந்தரத் துக்குப் பிறகு, தங்களுடைய பேருழைப்பால் வணிகத் துறையில் பாராட்டுதலுக்கும் போற்றுதலுக்கும் உரிய நிலையை அடைந் துள்ளனர். விவசாய வேலைகளைப் பார்க்கும் முக்கிய தொழிலாளர் களாக தீண்டப்படாத மக்களே, இருந்து வந்துள்ளனர். இந்தச் சாதியார் தங்களுக்குக் கொடுக்கப்பட்ட வேலைகளைச் செய்து வயிறு வளர்த்து வந்தார்கள். ஒவ்வொரு கிராமத்திலும் வண்ணார்களும் நாவிதர்களும் இருந்தார்கள். இவர்கள் தாங்கள் ஊழியம் செய்யும் குடும்பங்கள் கொடுத்த உணவு, உடை முதலியவற்றைப் பெற்று, அவர்கள் ஆணைக்குக் கட்டுப்பட்டு நடந்தனர். செய்த வேலைக்கு ரொக்க ஊதியம் எதையும் அவர்கள் பெறவில்லை.

இந்தப் பொருளாதார முறை பிரிட்டிஷ் ஆட்சியின் பயனாக மாறுதல் அடைந்தது. எந்த வேலைக்கும் ரொக்கப் பணம் செலுத்த வேண்டும் என்ற நிலை உருவாயிற்று. பிராமணர்கள் தாங்கள் அர்ச்சனை செய்வதற்கும், நல்ல நாள் பார்த்துக் குறித்துக் கொடுப்

பதற்கும், எதிர்காலத்தை ஆராய்ந்து ஜாதகம் பார்ப்பதற்கும் சிறு கட்டணங்களை வசூலித்தார்கள்.

சுதந்தரம் வந்தபிறகு, சமுதாயத்தின் அடிமட்டத்தில் இருப்பவர்களிடம் சாதி அடிப்படையிலும், பணம், சித்தாந்தங்கள், அரசியல் கட்சிகள் ஆகியஅடிப்படைகளிலும் அரசியல் ஈடுபாடு பெரிய அளவில் காணப்படுகிறது. வயதானவர்கள்கூட, தங்களைவிட இளமையானவர்களுக்கு, அவர்கள் மேல்சாதியாராக இருந்த காரணத்திற்காக மதிப்புக் கொடுப்பது என்ற பழைய மரபு இப்போது நிலவவில்லை. சாதி வேறுபாடின்றி, எல்லோரும் சம உரிமை கேட்கின்றனர்.

நகரங்களில் வேலைகள் கிடைப்பதால், உடற்கட்டும் இளமையும் உள்ளவர்கள் பட்டினங்களுக்குச் சென்றுவிடுகின்றனர். கிராமங்களில் வயதானவர்களும் உடல்நலமில்லாதவர்களும் வேலை கிடைக்காதவர்களுமே உள்ளனர். கிராமங்களிலுள்ளவர்களில் ஓரளவு வசதி படைத்தவர்கள் அடிக்கடி அருகேயுள்ள நகரங்களுக்குச் சென்று உணவு விடுதிகளில் சாப்பிட்டுத் திரைப்படம் பார்த்துத் திரும்புகின்றனர்.

ஏராளமான சாலைகள் நாட்டுப்புறத்திலும் போடப்பட்டு, பட்டி தொட்டிகளுக்கெல்லாம் பஸ்கள் செல்லுகின்றன. இதனுல் கிராமங்களிலும் நகரங்களின் சாயலைக் காண்கிருேம். கிராமங்களிலும் இக்கால முறைப்படி புதிய பாணிகளில் வீடுகள் கட்டப்படுகின்றன. வசதியுள்ளவர்கள், நகரங்களிலுள்ளது போன்ற வீடுகளைக் கிராமத்தில் கட்டியிருக்கின்றனர். அவற்றிலும் நீராடும் அறை, கழிப்பு வசதிகள், படுக்கை அறைகள், குளிர் சாதனப் பெட்டி, வானொலிப் பெட்டி முதலியன உள்ளன. உறுதியாகக் கட்டப்பட்டதும் மூன் தலைமுறையினரின் தொடர்பு உடையதுமான பூர்வீகமான வசதியான வீடுகளை இடித்துத் தள்ளி அவற்றுக்குப் பதிலாகப் புதிய பாணியில் கவர்ச்சி மிக்கதும் எடுப்பான புறத்தோற்றமுடையதுமான புதுக் கட்டிடங்களைக் கட்டுவது நாகரிகமாகவும் கௌரமாகவும் கருதப்படுகிறது. சமுதாயத்தின் ஒவ்வொரு கட்டத்திலும் இந்தப் புதுமை மோகம் ஊடுருவி வருகிறது.

இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டங்களில் வறட்சியான பல பகுதிகள் உள்ளன. அங்குள்ள ஏழைகள், விவசாய வேலை செய்ய—குறிப்பாக நாற்று நடவும் கதிர் அறுவடை செய்யவும்—அருகேயுள்ள வளமான மாவட்டங்களுக்குச் சென்று மூன்று நான்கு மாதம் கூலி வேலை செய்து விடு திரும்புகின்றனர். இது தவிர, வெளிநாடு

களுக்குக் கடல் கடந்து சென்று அங்கு தோட்டத் தொழிலாளராகவும் சிறு கடைக்காரராகவும் லேவாதேவித் தொழில் நடத்துபவராகவும் நிலையாக அந்த நாடுகளிலேயே பலர் தங்கிவிடுகின்றனர். எங்கெங்கே சென்றாலும், அந்த நாட்டின் மண்ணைப் பொன்னாக்கிய சிறப்பு தமிழ்த் தொழிலாளருக்கு உண்டு.

வளம் நிறைந்த பகுதிகளுக்கு இவ்வாறு குடியேறுவது என்பது பாண்டியர் காலத்திலேயே நடைமுறையாக இருந்திருக்கிறது. அல்லி அரசாணிமாலையில் இதைப் பற்றி ஒரு பாடல் உண்டு. மதுரைப் பகுதியில் பருவ மழை தவறியதால் மக்கள் பட்ட இன்னல்களையும் அவர்கள் வேற்று நாடுகளுக்கு சென்றதையும் இப்பாடல் தெரிவிக்கிறது :

புகழேந்திப் புலவர் இயற்றிய

அல்லியரசாணிமாலை*

**பாண்டியன் வறுமை யடைந்தது**

பாண்டிய நாட்டார்கள் பரதேசம் போகிறார்கள்
மழையே கிடையாது மதுரை நகர் சீமையிலே
தூற்றல் கிடையாது தென்மதுரைச் சீமையிலே
துளிகள் விழுவதில்லை சொக்கர் மதுரையிலே
காய்ந்து உலர்ந்தனவே கனமதுரைப் பட்டணத்தில்
எரிந்து புகைகிறது ஈரங் கிடையாமல்
குடிக்கநீர் கிடையாது குளங்கள் மடுக்களெல்லாம்
காகங் குடிப்பதற்குங் கரண்டிசலங் கிடையாது
ஆறுகள் வறண்டன ஆற்றுமணற் சூடெழும்பி
ஏரிகள் வறண்டன ஏற்றக்கோ வாழமட்டும்
பூமிகள் சூடெழும்பி பொங்கிற்றே தணலாக
விளைவு கிடையாது வேந்தன் மதுரையிலே
களையும் கிடையாது கனமதுரைச் சீமையிலே
பொன்மதுரை நாட்டிலே புழுதி யடைந்ததுவே
சருகுபோ லுலர்ந்தனவே தழைத்த மரங்களெல்லாம்
பூமி யுலர்ந்ததே பூண்டு கிடையாமல்
பறவை கிடையாது பாண்டியன் தேசத்திலே
குடிவலசை வாங்கினார்கள் கொடிமதுரை யுள்ளவர்கள்

* வைஜயந்தி அச்சுக்கூடம், சென்னை. 1913. பக். 15-16

பஞ்சை பனுதியாய் பரதேசம் போகிருர்கள்
அன்னங்கிடையாது அழகுள்ள மதுரையிலே
மதுரையைச் சுற்றுமுள்ள வனங்கள் செடிகளெல்லாம்
காய்ந்துமிகத்தீய்ந்து கரும்புகைச்சல் கொண்டனவே
தங்கநிழல் கிடையாது தனிமதுரைச் சீமையிலே
ஊரிலே யுள்ளவர்கள் உறக்கங்கள் கொண்டார்கள்
பாழடைந்த முகமானுர் பாண்டிய நாட்டிலுள்ளோர்
அன்ன விசாரம் அதுவே பெரிதாச்சு
பன்னிரண்டு வருஷமாய்ப் பாரகருப் பாயிற்று
சரீரம் வெளுத்தார்கள் சல்லடைக்கண் ணுனுர்கள்
பெண்டுகள் புருஷர்கள் பிள்ளைகளொரு தேசம்
திக்குகள் கெட்டுத் திசைமாறிப் போனுர்கள்.

அளவு கடந்த வறுமையால் தமிழ் மக்களில் பல்லாயிரவர் பிரிட்டிஷ், பிரெஞ்சு குடியேற்ற நாடுகளுக்கு வெளியேறினர். இந்த வறுமை, மகாத்மா காந்தியடிகளையும் பாதித்தது. 1921-ம் ஆண்டு செப்டம்பர் திங்கள் இறுதியில் அடிகள் மதுரை மாவட்டத்தில் சுற்றுப்பயணம் செய்தார். நாட்டுப் புறத்து உழவர்களின் அளவு கடந்த வறுமை அவர் உள்ளத்தைத் தொட்டது. " அந்நிய நாட்டுத் துணியை மக்கள் கொளுத்திவிட்டனர். ஆனுல் அதற்குப் பதிலாகக் கதர்த் துணி வாங்கப் பணம் இல்லாமல் அவர்கள் தவிக்கிருர்கள். இனி அவர்கள் கோவணத்துணியுடன் மட்டும் வாழ்ந்து திருப்தி அடையட்டும். அவர்களுக்கு வழிகாட்டியாக, நானே இன்று முதல் என்னுடைய வேட்டியையும் தொப்பியையும் உள் சட்டையையும்கூட கைவிட்டு விடுகிறேன். ஒரு சிறு துணி மட்டுமே இனி என் ஆடையாக இருக்கும். தேவையானபோது உடலைக் குளிரிலிருந்து பாதுகாத்துக் கொள்ள, ஒரு துண்டு உபயோகிப்பேன் " என்று காந்தியடிகள் மதுரையில்தான் முடிவு செய்தார்.

## சுதந்தரத்துக்குப் பிறகு சில போக்குகள்

1947-இல் இந்தியா சுதந்தரம் பெற்ற பிறகு, தமிழ் நாட்டின் பொருளாதாரம், இலக்கியம், பண்பாடு ஆகிய துறைகளில் மறுமலர்ச்சி ஏற்பட்டிருக்கிறது.

பஞ்சாப், மஹாராஷ்டிரம், குஜராத் ஆகியவற்றுக்கு அடுத்தபடி தமிழ்நாடு தான் தொழில் வளம் சிறந்த மாநிலமாக விளங்குகிறது. திட்டமிட்டு முன்கூட்டியே மின்சாரம் உற்பத்தி செய்ததாலும், தொழில் நுட்ப அறிவு எளிதில் கிடைத்தாலும், அடுத்தடுத்து வந்த அமைச்சரவைகள் மேற்கொண்ட செம்மையான தொழிற் கொள்கை களாலும் இந்த வளர்ச்சி ஏற்பட்டது. பர்மா, இலங்கை முதலிய கடல்கடந்த நாடுகளிலிருந்து திறமையும் அனுபவமும் உடைய தமிழ்த்தொழிலாளர்களும் செல்வர்களான தொழில் முதலாளிகளும் தமிழ்நாட்டுக்குத் திரும்பிவந்தது இந்தத் தொழில் வளர்ச்சிக்கு உறுதுணையாயிற்று.

சென்னை நகரில் எண்ணெய்த் தூய்மியும், எடுத்துக்காட்டாக விளங்கும் தொழிற்பேட்டைகளும் ஏற்பட்டிருப்பது தமிழ்நாட்டின் தொழில் வளர்ச்சியில் கவனத்திற்குரியது. மோட்டார்த் தொழிலும் அதனுடன் இணைந்த துணைத் தொழில்களும் சென்னையில் இயங்கு வதால் இந்நகரம் இந்தியாவின் டெட்ராயிட் என்று பெருமையுடன் வர்ணிக்கப்படுகிறது. சென்னை, மேட்டூர், தூத்துக்குடி நகரங்களில் பெட்ரோலிய இரசாயனத் தொழிற்சாலைகள் ஏராளமாக உண்டாகி யிருக்கின்றன.

நெய்வேலியில் பழுப்பு நிலக்கரி எடுக்கப்படுவதால் மின்சாரமும், யூரியா உரமும், அடுப்புக்கரியாக உதவும் லீகோவும் உற்பத்தி யாகின்றன. எஃகு ஆலை, சேலத்தில் உருவாவதற்குரிய ஆரம்ப வேலைகள் தொடங்கப் பெற்றுள்ளன.

பம்ப் செட்கள் செய்வதிலும் வேறு சில பொறியியல் பொருள்களை உற்பத்தி செய்வதிலும் பதனப்படுத்தப்பட்ட தோலை ஏற்றுமதி செய் வதிலும் இந்தியாவில் தமிழ்நாடு முதலிடம் வகிக்கிறது. திரைப் படங்கள் சென்னையில் பெரும் அளவில் எடுக்கப்படுகின்றன. ஹிந்தி மொழிப்படங்கள் சென்னையில் நிறையத் தயாராகின்றன. எனவே சென்னைதான் இந்தியாவின் ஹாலிவுட்.

கோயம்புத்தூரும் அதற்கு அடுத்தபடியாக மதுரையும் ஜவுளி ஆலைத் தொழிலுக்குப் பெரிய கேந்திரங்களாக உள்ளன. ஆமதா பாதில் நெசவுப் பகுதியும் ஒவ்வொரு ஆலையிலும் உண்டு. ஆனால் தமிழ்நாட்டு ஆலைகள் பெரும்பாலும் வெறும் நூல் ஆலைகளே. இவை நூல் நெய்து, தறிகாரர்களுக்கு வழங்குவதற்காக ஏற்பட்டவை. சிமெண்டு, சர்க்கரை உற்பத்திகளிலும் தமிழ்நாடு பெரிய அளவில் முன்னேற்றம் கண்டிருக்கிறது. ஒரு சில காகித ஆலைகளும் உள்ளன.

வேளாண்மைத் துறையில் சிறிது சிறிதாக இயந்திரக் கலப்பை

களின் உபயோகம் அதிகரித்துள்ளது. இரசாயன உரத்தை உழவர்கள் தாராளமாக உபயோகிக்கிருர்கள். இவற்ருல் உணவுப் பொருள் உற்பத்தி பெருகியிருக்கிறது. உணவுப் பொருள்களுக்குப் பதிலாகப் பணப் பயிர்களான பருத்தி, மணிலாக்கொட்டை, கரும்பு ஆகியவற்றைப் பயிரிடும் மனப்பாமை பெருகிவருகின்றது. பஞ்சு, வனஸ்பதி, சர்க்கரை ஆலைகளின் தேவைகளை நிறைவேற்ற வேண்டியிருப்பதே இந்த மனநிலைக்கு வித்தாக அமைந்தது.

குடிசைத் தொழில்களில், காஞ்சிபுரத்தில் பட்டுச் சேலை நெசவும் மதுரையில் சுங்கடிச் சேலைகளை நெய்து சாயமிடுவதும் தனிச் சிறப்புடையன. மதுரைக்குத் தெற்கேயுள்ள வறண்ட பகுதிகளில், தீப்பெட்டித் தொழில் சிறந்து விளங்குகிறது. இந்தியாவின் மொத்த உற்பத்தியில் ஐந்தில் இரண்டு பங்கு இங்குதான் செய்யப்படுகிறது.

இந்திய மாநிலங்கள் மொழிவழியிலாக அமைக்கப்பட்டுள்ளன. இதனுல் இந்திய மொழிகள் யாவும் ஏற்றம் பெற்று வருகின்றன. மலேசியா, சிங்கப்பூர், பீஜீ, மொரிசுத் தீவு, தென் ஆப்பிரிக்கா ஆகிய நாடுகளில் லட்சக் கணக்கான மக்கள் தமிழ் மொழியைப் பேசுகிருர்கள். தமிழ் இலக்கியங்களை, யுனெஸ்கோ (ஐ. நா. கல்வி விஞ்ஞான—கலைக் கழகம்) ஐரோப்பிய மொழிகளில் மொழிபெயர்த்திருக்கிறது. கோலாலம்பூர், சென்னை, பாரிஸ், யாழ்ப்பாணம் ஆகிய நகரங்களில் உலகத் தமிழ் மாநாடுகள் கூடியிருக்கின்றன. இருபது நாடுகளின் ஆதரவுடன் உலகத் தமிழ் ஆராய்ச்சிக் கழகம் சென்னையில் இயங்கிவருகிறது. எனவே, தமிழ் மொழி உலகமொழியாக ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது என்று சொல்லலாம்.

சமயத் துறையிலும், ஓர் எழுச்சி ஏற்பட்டுள்ளது. பழைய கோயில்களுக்குத் திருப்பணி செய்வதும், புதிய கோயில்களைக் கட்டுவதும் பெரிய அளவில் திகழ்கின்றன. இந்தப் புனிதமான பணிகளை அரச வம்சங்கள் அல்லது பரம்பரையாக இவற்றில் ஈடுபாடு கொண்ட குறிப்பிட்ட ஓரிரு சாதிகள்தான் செய்வது என்ற நிலை இப்போது இல்லை. காலம் மாறிவிட்டது. இந்நாளில் திருப்பணி பலரால் செய்யப்படுகிறது; மக்கள் அனைவரும் அவற்றுக்கான செலவைச் சிறு சிறு நன்கொடைகள் மூலம் ஏற்கின்றனர். இந்துக்கள் மதம் மாறுவது என்பதே இப்போது கிடையாது. எல்லா மதத்தினரும் ஒற்றுமையாகவும் கூட்டுறவுடனும் தாராள மனப்பான்மையுடனும் கலந்து பழகுகின்றனர். ஒவ்வொரு மதத்துக்குள்ளும் நிலவிய உட்பூசல்களும் குறைந்துவருகின்றன. சைவ—வைணவ பேதங்கள்

நீங்கி சமரச மனப்பான்மை நிலவுகிறது. கத்தோலிக்க—பிராடஸ்டண்டு வேறுபாட்டின கடுமை குறைந்துவிட்டது. பிராடஸ்டண்டுகளின் பல வேறு பிரிவுகளும் இணைந்து தென்னிந்திய திருச்சபை உருவாகி இருக்கிறது.

பண்பாட்டுத் துறையிலும் பெரியதொரு விழிப்பு ஏற்பட்டிருக்கிறது. தமிழ்நாடகத்துறையில் புதிய மறுமலர்ச்சியையும் விறுவிறுப்பையும் காணுகிறோம். பழந்தமிழ் இசையைப் பேணவும் மேலும் வளர்க்கவும் மேற்கொண்டிருக்கும் இயக்கம் நிலைத்துவிட்டது. பொழுதுபோக்கு நிகழ்ச்சிகளில் பாமரர் இசையும், திரைப்படங்களில் கிராமிய நடனமும் இடம் பெற்றுவிட்டன.

நாட்டுப்பாடல்களை ஐரோப்பியர்கள்தான் முதலில் தொகுத்தார்கள். அவற்றை ஒலிப்பதிவும் செய்தார்கள். அவை தீண்டப் படாத இலக்கியங்களாகக் கருதப்பட்டு, மரபு வழிவந்த தமிழ்ப் புலவர்களால் புறக்கணிக்கப்பட்டன. இப்போது அவை இலக்கியங்களாக ஏற்றுக்கொள்ளப்பட்டு, பல்கலைக்கழகங்களில் முதுகலைப் பாடத் திட்டத்திலும் ஆராய்ச்சியிலும் இடம்பெற்றிருக்கின்றன.

மக்கள் தொகை ஈவுப்படி பார்த்தால், தமிழ்நாட்டில் இந்தியாவின் பிற பகுதிகளைப்போல இருமடங்கு திரைப்பட அரங்குகள் உள்ளன. இதனால், மக்களுடைய சிந்தனையிலும் அவர்கள் பயன்படுத்தும் பல்வேறு பொருள்களிலும் திரைப்படத் துறையின் செல்வாக்கு அளவுகடந்து காணப்படுகிறது.

உணவு என்பது முன்பு அரிசி உணவாக மட்டுமே இருந்தது. இப்போது தமிழர்கள் முன்காலத்தைவிடக் கூடுதலாகக் கோதுமையும் சாப்பிடுகிறார்கள். கேக்கு, கோதுமை ரொட்டி, முதலியவற்றையும் பலரும் சாப்பிடுகிறார்கள். செல்வர்களும் படித்தவர்களும் பிறந்த நாளன்று 'கேக்' வெட்டும் பழக்கத்தை மேற்கொண்டுள்ளார்கள். அது, ஒரு சடங்கு ஆகிவிட்டது. உண்பன நாழி, உடுப்பன இரண்டே என்பதெல்லாம் கடந்தகாலத்து நிகழ்ச்சி. கடுமையான கோடை காலத்தில்கூட இளைஞர்கள் டெரிலின் சட்டையும் பெண்கள் நைலான் சேலையும் அணிகிறார்கள்!

எல்லாவசதிகளையும் அனுபவிக்கவேண்டும், இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் சுற்றுப்பயணம் செய்யவேண்டும் என்ற அவா எல்லோர் உள்ளங்களிலும் உதித்திருக்கிறது.

வெள்ளைக்காரர் புகுத்திய மிசன்ாரம் தமிழ்நாட்டில் பட்டிதொட்டி களெல்லாம் பரவிவிட்டது. இதைப்பற்றிய இந்த நாட்டுப் பாடலை மதுரை மாவட்டம் திண்டுக்கல் வட்டாரத்தில் கேட்கலாம் :

நீலகிரி ஓரத்திலே நீட்டிவிட்டான் காந்தக் கம்பி
தொட்டால் பிடிக்குதடி துடிகாரன் போட்ட கம்பி
கோணூசிபோல கோயம்புத்தூர் ஜில்லா கம்பி
கொள்ளைப்பணம் செலவழிச்சு கொண்டுவந்தான் செம்பட்டிக்கே

# 2. கற்பனைக் கதைகளும் இதிகாசங்களும் புராணங்களும்

தமிழ் மக்களின் கற்பனைக் கதைகளும் இதிகாசங்களும் புராணங் களும்பல, மோஹஞ்சதாரோ, ஹரப்பா மற்றும் திராவிடத்திற்கு முற்பட்டநாகரிகங்கள், தமிழ்நாட்டில் பரவி வளர்ந்து உச்சநிலையை அடைந்துள்ள சைவ சமயம் ஆகியவற்றை ஆதாரமாகக்கொண்டு இவைமுளைவிட்டவை. அண்டம், இறைவியாகிய தாயால் உண்டாக்கப்பட்டு, விஷ்ணுவால் காப்பாற்றப்பட்டு இறுதியாக, பக்தர்கள் ஈடு இணையற்ற கடவுளாகப் போற்றும் சிவபெருமானுல் பூண்டோடு அழிக்கப்பட்டது என்று தமிழர்கள் கருதுகிறுர்கள்.

**உலகம்**

உலகம், கிரகங்கள், நட்சத்திரங்கள் ஆகியவற்றின் வடிவங்களை யெல்லாம், தமிழிலுள்ள மிகப்பழமையான இலக்கியமான தொல் காப்பியம் தெரிவிக்கிறது. ஆழ்கடல்களைப்பற்றி விவரமாகவும் சிறப்பாகவும் அறிந்திருந்தால்தானே, அவர்கள் காற்றையும் வானிலையையும் பொருட்படுத்தாது வியாபாரத்திற்காக கிரேக்கம், ரோம் முதலிய நீண்ட தொலைவுகளுக்கு நாவாய்களில் சென்றிருக்க இயலும்? வீரமும் துணிச்சலும் நிறைந்த இந்த இயல்பே, தமிழர்களை உலகின் சிறந்த கடலோடிகளுள் ஓர் இனமாக ஆக்கியிருக்கிறது. விடாமுயற்சியும் பெருந்தன்மையும் உடைய சாதி என்று ஐரோப்பியர்கள் எப்போதுமே தமிழர்களைப் பாராட்டியிருக்கின்றனர்.

"யாதும் ஊரே,
யாவரும் கேளிர்"

என்று பழந்தமிழ்ப் புலவர் ஒருவர் பாடினுர். தமிழரின் தத்துவங் களின் சாரம் இதுவே. படித்தவர்கள், யோகசக்தி உள்ளவர்கள், சாமி அல்லது பேய், பிசாசாய் ஆட்டிப் படைக்கப்படுவர்கள்,

ஆகியோர் உலகத்தை மாற்றும் ஆற்றல் பெற்றிருப்பதுபற்றிப் பல சுவையான கதைகள் வழங்குகின்றன. ஒரு சான்று தருவோம். ஔவையார், தமிழ்நாட்டின் தலைசிறந்த பெண்பாற் புலவர். குழந்தைகளுக்கு எக்காலத்தும் நண்பராகக் கருதப்படுபவர். தமிழ் முடிமன்னர் மூவருக்கும் இனியவராக இருந்து அவர்களை இணைத்து வைத்தவர். "எட்டாத ஏணி எய்தாலும் எட்டிப்போ" என்று ஔவையார் சொல்ல, வானம்கூட அதனுடைய எல்லைக்கு அப்பால் உயரச்சென்றது என்று மக்கள் நம்புகிறார்கள்.

### சூரியன்

மிகப் பழங்காலத்திலிருந்து தமிழ் மக்கள் சூரியனை வழிபட்டு வருகிறார்கள். "பலர் தொழு ஞாயிறு" என்று சூரியன் சிறப்பிக்கப் பட்டிருக்கிறது.

மேரு மலையைச் சுற்றி. ஏழு குதிரைகள் பூட்டிய ஒற்றைச் சக்கரத் தேரில் சூரியன் பவனிவருவதாகத் தமிழ் இலக்கியங்கள் கூறுகின்றன. சந்திர கிரகணத்தின்போது ஒரு பாம்பு, சந்திரனை விழுங்குவதற்கு உவமையாக சூரிய அஸ்தமனம் வர்ணிக்கப் பட்டிருக்கிறது.

காலையில் எழுந்தவுடன் பலர் சூரியனை வழிபடுகிறார்கள். தை மாதப் பிறப்பான பொங்கல் நாள் சூரிய நமஸ்காரத்திற்கு மிகவும் சிறப்பான நாள். அன்றுதான் சூரியன் வடக்கு நோக்கிய பயணத்தை மேற்கொள்ளுகிறது. இது உத்தராயணம் எனப்படும். வைதிகமான, முன்னோர் மரபில் நம்பிக்கையுள்ள, குடும்பங்களில் பொங்கல் நாளன்று அதிகாலையில், அதாவது சூரியன் உதயமாகும் நேரத்தில், வீட்டினுள் முற்றத்தில் அல்லது வீதியில் (வீட்டு வாயிலின் முன்பாகப்) பொங்கல் இடுவார்கள்.

சூரியனை வழிபடுவதற்கு ஏனைய இடங்களைவிட, கன்னியாகுமரி சாலச்சிறந்தது ; புனிதமானது இந்தியப் பெருங்கடல், அராபியக் கடல், வங்காளக் குடாக்கடல் மூன்றும் கூடுமிடத்தில் சூரிய உதயம், சூரிய அஸ்தமனம் ஆகியவை காணற்கு அரிய, இனிய காட்சிகளாக உள்ளன.

கடவுள் நம்பிக்கை உடையவர்களுக்கு, சூரிய நமஸ்காரம் ஒரு விரிவான சடங்கு ஆகும். கோயில்களில் சூரியனுடைய வடிவம் கல்லில் செதுக்கப்பட்டிருக்கிறது. இவற்றுள் காலத்தால் முந்தியது, மாமல்லபுரத்தில் தர்மராஜ ரதத்தில் உள்ளது. 11-ம் நூற்றாண்டில் ராஜேந்திரச் சோழன், அவன் திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில்

கங்கைகொண்ட சோழபுரத்தில் கட்டிய கலைநுட்பம் நிறைந்த ஒப்பற்ற கோயிலில், சூரிய யந்திரம் ஒன்றை அமைத்துள்ளான்.

குலோத்துங்க சோழன் தஞ்சை மாவட்டத்தில் சூரியனுக்கு ஒரு கோயில் கட்டியிருக்கிறான். இதில் சூரிய பகவானுக்கும் அவன் மனைவியராகிய உஷா, பிரதி உஷா ஆகியோர்க்கும் சேர்ந்து ஒரு கல் திருவுருவம் உள்ளது. இதிகாச புராணங்களின்படி, சூரியன் தன் கைகளில் தாமரை மலரை வைத்திருக்கிறான். அவன் மனைவி மார் தங்கள் கரங்களில் அல்லி மலரைத் தாங்குகிறார்கள். சூரிய பகவானுடைய வாகனமாகிய குதிரைக்கு, இக்கோயில் வாயிலில் ஒரு கல்லுருவம் வைக்கப்பட்டிருக்கிறது.

கன்னியாகுமரிக் கோயிலில் சூரியனுடைய முதல் ஒளி அம்மனின் மூக்குத்தியில் படுகிறது. ஆவுடையார்கோயில், திருப்பாதிரிப் புலியூர், கும்பகோணம் நாகராஜா கோயில் ஆகியவற்றில் நாள் தோறும் காலையில் சூரிய ஒளி இறைவன்மீது (மூலஸ்தானத்தில்) படுகிறது. வேறு பல கோயில்களில் ஆண்டுதோறும் குறிப்பிட்ட ஒவ்வொரு நாளில் கதிரவனின் கதிர்கள் சன்னிதியில் விழுகின்றன.

கோயில் அமைப்பில் சூரியனுக்கு முக்கியமான இடம் உண்டு. கருவறைக்கு அருகே உள்சுற்றின் தொடக்கத்தில் சூரியனுக்கு ஒரு சன்னிதி வைப்பது மரபு. அந்தச் சுற்றின் இறுதியில் சந்திரனுடைய சன்னிதி இருக்கும்.

கடவுளர் மனைகளைக் கண்டோம். மக்கள் மனைகளை இனிக் காண்போம். காற்றும் சூரிய வெளிச்சமும் உள்ளே வருவதற்கு வசதியாக, வீடுகள் கட்டப்படுகின்றன. திறந்த அல்லது இரும்புக் கம்பிகள் போட்ட முற்றங்களும் அமைக்கப்படுகின்றன. இவற்றின் வழியேயும் சூரிய ஒளி வருவதற்காக இந்த ஏற்பாடு செய்யப்பட் டிருக்கிறது. சூரிய ஒளி, கிணற்று நீரில் பட்டு கிணற்றைச் சுத்தமாக இருக்கவசதியாகக் கிணறுகள் கட்டப்படுகின்றன.

தமிழர்களுடைய ஆண்டு சூரியன் ஒரு வீட்டைவிட்டு மற்றொரு வீட்டுக்குச் செல்லுவதை அடிப்படையாக வைத்து ஒவ்வொரு மாதமும் கணக்கிடப்படுகிறது: தமிழர்களுக்கு ஒரு நாள் என்பது சூரிய உதயம் தொடங்கி மறுநாள் சூரிய உதயம் வரை உள்ள காலப்பகுதி ஆகும்.

பகலில் சூரிய வெளிச்சம் படுகிற திண்ணையில் ஒருவன் படுத் திருந்தால், சூரியனுடைய வெப்பம் அவன் உடலைத் தாக்கி அவன் கண்களில் எரிச்சல் ஏற்படும் என்று மக்கள் நம்புகிறார்கள். கரு உண்டான பிறகு, குழந்தை பிறக்கும் வரை பெண்கள் கிரகண

காலங்களில் சூரியனையோ சந்திரனையோ பார்க்கக்கூடாது. கிரகண காலத்தில் அவர்கள் கை விரலில் இரும்பு மோதிரம் அணிந்து கொள்ள வேண்டும். கிரகண காலத்தில், சிறுவர்கள் புகையால் மறைக்கப்பட்ட ஒருவகைக் கண்ணாடி வழியாகச் சூரியனைப் பார்க்கிறார்கள்.

கிரயப் பத்திரங்களில் 'சூரியனும் சந்திரனும் உள்ள அளவும் இந்தச் சொத்தை அனுபவித்துக் கொள்ளலாம்' என்று ஒரு வாசகம் எழுதுவது மரபு.

### சந்திரன்

நிலவைக் காதலுடனும் அழகின் இயல்புகள் பலவற்றுடனும் இணைத்துச் சொல்லுவது தமிழ்நாட்டு மரபு. இரவு அல்லது மாலை நேரத்தில் குழந்தைக்கு உணவு ஊட்டும்போது, சந்திரனைப்பார்க்கச் சொல்வது மரபு. 'நிலா நிலா ஓடி வா' என்ற பாடலைத் தாய்மார்கள் மகிழ்ச்சியுடன் பாடி நிலாவைக் காட்டுகிறார்கள்.

வளர்பிறையில் பிறக்கும் குழந்தைகள் அதிர்ஷ்டசாலிகளாகக் கருதப்பெறுகிறார்கள். ஒரு மனிதனின் வாழ்நாள் அவன் பிறந்தது முதல் ஏற்பட்ட முழு நிலா நாட்களை வைத்துக் கணக்கிடப்படு கிறது. 1008-வது முழு நிலாநாளில், சதாபிஷேகம் என்ற பிறந்தநாட் பெருமங்கலம் பெருஞ் சிறப்புடன் கொண்டாடப்படுகிறது. சிலர் இப்போது இதை 80 வயது முடிந்தவுடனேயே கொண்டாடி விடுகிறார்கள்.

சூரியன் அல்லது சந்திரனின் ஒளி நீண்ட நெடுநேரம் உடலில் படுவது, உடலுக்குக் கேடு விளைவிக்கும் என்ற கருத்தும் நிலவு கிறது.

திருமணங்கள் சூரிய சந்திராள் சாட்சியாக நடப்பதாக, குருக்கள் அறிவிக்கிறார். வானத்தில் உள்ள ஒரு நட்சத்திரத்தை மணப் பெண்ணுக்குக் காண்பித்து, 'அருந்ததி போல நீ உன் கணவனுடன் ஈருடலும் ஓர் உயிருமாய் இரு' என்று அறிவுறுத்தப்படுகிறது.

### பிரளயம் (கடல்கோள்)

ஒரு காலத்தில் ஒரு பெருவெள்ளம் ஏற்பட்டதனால் எஞ்சியிருந்த மக்களும் மரங்களும் உயிரினங்களும் ஒரு படகில் ஏற்றப்பட்டு சீர்காழியில் கோயில் கொண்டுள்ள இறைவனால் காப்பாற்றப்பட்ட தாகத் தமிழர்கள் நம்புகிறார்கள். இங்குள்ள இறைவனின் பெயர் தோணியப்பர். தோணி - படகு.

கும்பகோணத்தில் நிகழும் மகாமகப் பெருவிழா பிரளயத்தைக் குறிப்பிடவே நடைபெறுகிறது. தேரும் திருவிழாவும் என்ற அதிகாரத்தில் இதைப் பற்றி விரிவாகக் கூறுவோம்.

பிரளயத்துடன் தொடர்புபடுத்தப்படும் ஏனைய இடங்களானவன: மாமல்லபுரம் (செங்கற்பட்டு மாவட்டம்), காவிரிப் பூம்பட்டினம், வேதாரணியம், கோடிக்கரை (தஞ்சை), இராமேசுவரம், தனுஷ்கோடி (இராமநாதபுரம்), திருச்செந்தூர் (திருநெல்வேலி), கன்னியாகுமரி. பௌர்ணமி, அமாவாசை, மற்றும் குறிப்பிட்ட சில நாட்களில், குருக்களிடம் தர்ப்பணம் செய்து கொண்டு, இவ்விடங்களிலுள்ள கடல்களில் பயபக்தியுடன் மக்கள் புனித நீராடுகின்றனர்.

ஏற்கெனவே நாம் சொல்லியிருப்பதுபோல, தமிழ்நாட்டின் கீழ் (தென்) பகுதியை—பஃறுளி, குமரி ஆறுகள், பாண்டியர் தலைநகரான கபாடபுரம் எல்லாவற்றையும்—கடல் விழுங்கிவிட்டதாகத் தமிழ் இலக்கியங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.[1]

தேர்த் திருவிழாவின்போது சுசீந்திரம் கோயிலில் தேர் சிக்கிக் கொண்டால், இந்தியாவின் தென் கோடியில் ஒரு பிரளயம் (கடல்கோள்) ஏற்படும் என்ற பலத்த நம்பிக்கை கன்னியாகுமரி மாவட்ட மக்களிடையே நிலவிவருகிறது.

நிலத்துடனும் மக்களுடனும் கடல் ஓயாமல் போர் புரிந்து கொண்டு, ஓர் எதிரிபோல இருந்து வருகிறது. மூன்று சங்கங்களின் வரலாற்றிலும் மூன்று பிரளயங்களும், பாண்டியர் இரண்டு தடவை தங்கள் தலைநகரை மாற்றிய செய்திகளும் குறிக்கப்பட்டிருக்கின்றன. கடலால் விழுங்கப்பட்ட பாண்டியர் தலைநகரமான மதுரையின் நினைவாக, பாண்டியர் தங்களுடைய மூன்றுவது தலைநகருக்கும் மதுரை என்ற பெயரிட்டதாகச் சொல்லப்படுகிறது.

சேரர்களின் தலைநகரமாகக் கொல்லம் இருந்து வந்திருப்பதாக மரபுக்கதைகளும் வரலாறுகளும் தெரிவிக்கின்றன. குமரியின் தென் கரையில் கொல்லம் என்ற நகர் இருந்ததாயும், அதைக் கடல்

---

1. 1964-ம் ஆண்டு அளவில், இராமேசுவரம்-தனுஷ்கோடி இவற்றுக்கு அருகே சில நிலப்பகுதிகள் கடலால் விழுங்கப்பட்டன. இங்குள்ள முக்கியமான கட்டிடங்களைக் கடலின் சீற்றத்திலிருந்து காப்பாற்ற இடையிடையே பல முயற்சிகளை அரசாங்கத்தார் செய்த வண்ணமாக உள்ளனர். மாமல்லபுரத்துக் கடற்கரைக் கோயில் தடுப்புச்சுவர் கட்டி, கடல் அலைகளினின்றும் காப்பாற்றப்பட்டிருக்கிறது. திருச்செந்தூர் தரங்கம்பாடி கோயில்களைக் காக்கவும் இத்தகைய ஏற்பாடு நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.

கொண்ட பிறகு புதிய தலைநகரம் அப்பெயரால் உண்டாக்கப்பட்ட தாகவும் சொல்லப்படுகிறது.

சோழர் தலைநகரான புகார் என்ற காவிரிப்பூம்பட்டினம் கடல் கோளால் அழிந்தது என்றும், அங்கு குடியிருந்த வணிகச் சமூகங் கள் நீர்வளமில்லாத உள்நாட்டுப் பகுதிகளுக்குக் குடியேறினர் என்றும், சாதி வரலாறுகளில் சொல்லப்பட்டு இன்றளவும் பலராலும் நம்பப்பெற்று வருகிறது.

**மழை**

பயிர்கள் செழிக்கவும் மக்கள் நல்வாழ்வு வாழவும் இன்றியமை யாதது மழை. எனவே மழையை வருக, வருக என வரவேற்று மகிழ்வது இயல்பே. நாட்டுப்புறத்து மக்கள் மழை பெய்தது போதாது என்பதையோ அடுத்து எப்போது மழை பெய்யும் என் பதைப் பற்றியோதான் 12 மாதமும், பேசிக் கொண்டிருப்பார்கள். மழையைப் பற்றிய நம்பிக்கைகள், கதைகள் முதலியன எவ்வளவோ உண்டு. 'கற்புடைய பெண்டிர் வேண்டினால், பெய் எனப் பெய்யும் மழை' என்பது தமிழர் கருத்து. பக்தியும் புண்ணியமும் நிறைந்த வர்களுக்காக ஒவ்வொரு மாதமும் பயன் தரும் மழை மூன்று நாளும் (மும்மாரி), பாவம் செய்தவர்களுக்காக கேடு பயக்கும் பெருமழை மூன்று நாளும் பெய்யும் என்பது மற்றொரு நம்பிக்கை. மழைக் கடவுளரான வருண பகவானுக்கு யாகங்கள் செய்தால் தேவையான காலத்தில் தேவைப்பட்ட அளவு மழை பெய்யும் என்பதும் ஒரு நம்பிக்கை. கோயில்களில், சிவபெருமானுடைய வாகனமாகிய நந்தியை தண்ணீருக்குள் அழுத்தி, உடனே மழை பெய்விக்கச் செய்வதும் உண்டு.

தேவர்களின் கடவுளரான இந்திரனை மகிழ்விக்கத் திருவிழாக்கள் கொண்டாடப்படுகின்றன. காவிரிப்பூம்பட்டினத்தில், இயேசுநாதர் பிறந்த காலத்திலேயே, மழையை வரவழைக்க இந்திர விழா கொண்டாடப் பெற்றது. இக்காரணத்திற்காகவே மதுரையில் சித்திரை மாதத்தில் திருவிழா கொண்டாடப்படுகிறது. வர்ஷ ராகத்திலும் மேகராகக் குறிஞ்சியிலும் சில பாடல்களைப் பாடி மழையை வரவழைப்பதும் வழக்கம்.

தமிழர்களின் பருவங்கள் கார்காலத்துடன் தொடங்குகின்றன. கார்காலம் என்பது ஆவணி—புரட்டாசி. மேகம் மழைக்குணமாக இருக்கும் காலம் அது. மழையைப் பற்றிய நம்பிக்கைகள் பல. அவற்றுள் ஒரு சிலவற்றைச் சொல்லுவோம்:

கன்னியா ராசியில் செவ்வாய்க் கிரகம் இருந்தால் மழை பெய்யாது. 'கன்னிச் செவ்வாய் கடலும் வற்றும்' என்பது பழமொழி. ஒரு விருந்தினர் வரும்போது மழை பெய்தால், அவருடைய இனிய இயல்புகளையே மழைக்குக் காரணமாகக் கொள்வதும், 'மகான் வந்தார், மழை பெய்தது' என்று சொல்லுவதும், தமிழர் மரபு. சுக்கிரன் தெற்கு நோக்கிச் சென்றால் பருவமழை தவறும் என்று சங்க நூலாகிய பட்டினப்பாலை கூறும்.

சில மரங்களில் அட்டை ஏறினால், மழை பெய்யாது என்பதற்கு அது அறிகுறி என்று திருநெல்வேலி மாவட்டத்தார் நினைக்கிறார்கள். காக்கைகளும் கோழிகளும் இறக்கைகளை விரித்துக் குதித்தால், பெரு மழை கொட்டும் என்று, கன்னியாகுமரி மாவட்டத்து மக்கள் நீண்ட நெடுங்காலமாக நம்பி வருகிறார்கள். சாமித்தோப்பு என்னும் ஊரில், "கோயில் கொடிமரத்தில் கொடி ஏற்றப்படும்போது கொடி பறக்கும் திக்குக்கு ஏற்ப, நன்மையோ தீமையோ ஏற்படும். கொடி தெற்கு நோக்கிப் பறந்தால், கடல் மீன் அபரிமிதமாகப் பிடிபடும், ஆனால் மழை குறைவாக இருக்கும். அது வடக்கு நோக்கிப் பறந்தால் போதிய மழை பெய்யும், கவலைப்படத் தேவை இல்லை" என்பர்.

ஈசானிய மூலையில், அதாவது வடகிழக்கில், மின்னல் தோன்றினால் அல்லது இடி இடித்தால், தேவைக்குக் குறைவில்லாமல் மழை பெய்யும். ஒரு சாக்கின்மீது எறும்பு ஏறினால், மழை பெய்தே தீரும்.

ஒரே சமயத்தில் தென்கிழக்கிலும் (ஸ்ரீலங்கா மூலை) வடமேற்கிலும் (கோயம்புத்தூர்த் திக்கு) மின்னினால், மதுரைப் பகுதியில் மழை பெய்யும் என்று மதுரை மாவட்டத்தார் நினைக்கிறார்கள். மின்னல் தோன்றியவுடனே, நாட்டுபுற மக்கள் தங்கள் ஆடுமாடுகளைக் கொட்டங்களில் இறுகக் கட்டிவிடுவார்கள்.

1963-ல் மதுரையில் வைகைக் கரையிலுள்ள யானைக்கல், திக்கு மாற்றித் திருப்பிவைக்கப்பட்டது. ஒரு முக்கிய ஊர்வலத்தின் அலங்கார ஏற்பாடுகளை இணைத்து இந்த மாறுதலும் செய்யப்பட்டது. அடுத்து ஏழு ஆண்டுகளுக்குப் பருவ மழை தவறிவிட்டது. கல்யானை திக்கு மாற்றி வைக்கப்பட்டதாலேயே மழை பெய்யாது போயிற்று என்ற நம்பிக்கை பரவியது. மதுரை மக்கள் மீண்டும் கல்யானையை முன்பு இருந்த திக்கில் திருப்பிவைத்தனர். இவ்வாறு செய்ததும், பெருமழை பெய்தது. மதுரைக் கோயிலில் உள்ள கல்யானைக்குச் சிவபெருமான் கரும்பு கொடுத்த நிகழ்ச்சி திருவிளையாடற் புராணத்தில் சொல்லப்பட்டிருப்பது இங்கு நினைவு கூரத்தக்கது.

பெருமழை பெய்து இடியும் இடித்து மின்னலும் மின்னினுல், இயற்கையின் தீவினைகளிருந்து தப்ப, தமிழ்நாட்டுக் கத்தோலிக்கர் புனித பார்பராவை வழிபடுகின்றனர்.

பழையர் என்ற மலைவாழ்மக்கள் மழை வேண்டும்போது பாடும் பிரார்த்தனைப்பாடல் இது :

குடி. கும்மரத்துக்கு
சீக்கு சங்கடம் வராமே—எங்களைக்
கொண்டு பொருத்துக் காப்பாத்தனும்
நல்ல மழை பெய்யணும்
மணி போட்டா பொன்ணு விளையணும்

உலகம் தோன்றிய காலம் முதல் உழவர்கள் மழைக்காக இறை வனை வேண்டிக் கொண்டு வருகின்றனர். இதோ ஒரு பாட்டு :

வாகை மரத்துப் புஞ்சை
வட்டரச் சோளப் புஞ்சை
தங்கம் விளையும் புஞ்சை
தரிசாக் கிடக்குதடி
காட்டை உழுது போட்டேன்
கடலை போட பதம் பார்த்தேன்
வந்த மழை போகுதில்ல
வருணனே உனது செயல்?

## ஆறுகள்

பாமர மக்கள் ஆறுகளைத் தெய்வங்களாக மதித்து, காணிக்கை செலுத்தி வழிபடுகிருர்கள். தமிழ்நாட்..., பல நகரங்களும் முக்கிய மான கிராமங்களும் ஆற்றங்கரைமீதே உள்ளன. இறந்தவர் களுடைய உடலை எரித்த பிறகு, அஸ்திகள் ஆறுகளிலேயே கரைக் கப்படுகின்றன ; அவை  ᑕ வ லோகத்துக்குக் கொண்டுபோய்ச் சேர்க்கப்படும் என்பது நம்பிக்கை.

ஆறுகளின் முகத்துவாரங்களுள்ள துறைமுகங்கள் காலப் போக்கில் சர்வதேசப் புகழ்பெற்றன. தமிழரின் தொன்மையை ஆய முற்படும் அகழ்வாராய்ச்சியாளருக்கு, இவை பெரும் வரப்பிரசாதங்க ளாக அமைந்துள்ளன. காவிரிக் கரையில் காவிரிப்பூம்பட்டினம், பாலாற்றில் வாசுவ சமுத்திரம், கடிலத்தில் கடலூர், பெண்ணை யாற்றில் புதுச்சேரி, தேவநதிக் கரையில் நாகப்பட்டினம், தாமிர பரணிக் கரையில் கொற்கை ஆகியவை, தமிழர்கள் தம் துறைமுகங்

களை ஆறு கடலுடன் கலக்கும் இடத்திலேயே அமைத்ததற்குச் சான்றுகளாக உள்ளன.

ஆறுகளைத் தொடர்புபடுத்திப் பல திருவிழாக்கள் கொண்டாடப் படுகின்றன. இவற்றுள் ஒன்றான திருவையாற்று சப்த ஸ்தானத் திருவிழாவில் அருகேயுள்ள ஏழு கோயில்களின் இறையுருவங்கள் ஓரிடத்தில் கூடுகின்றன.

கங்கை ஆற்றின்பால் தமிழர்களுக்குத் தொன்றுதொட்டு ஓர் ஈடுபாடும் கவர்ச்சியும் இருந்து வந்திருக்கிறது. இது சங்க இலக்கியத்திலும் இடம் பெற்றிருக்கிறது. பக்தி நிறைந்த தமிழர்கள் காசி (வாரணாசி) யாத்திரை மேற்கொண்டு, பிரயாகையிலுள்ள சங்கமத்தில் புனித நீரில் நீராடி, தங்கள் குடும்பத்தில் அண்மையில் இறந்தவர்களுடைய சாம்பலையும் காசியில் கங்கை நதியில் கரைக்கின்றனர். முக்கியமான விழாக்களில் பயன்படுத்துவதற்காக, கங்கை நீரை ஒரு செம்பில் சேமித்துக் கொண்டுவந்து வீட்டில் பத்திரப்படுத்தி வைத்துக் கொள்ளுகின்றனர். செல்வர்கள் கங்கை முதலிய பல முக்கியமான ஆறுகளின் நீரை இந்தியா வெங்குமிருந்து வரவழைத்து, தங்களுடைய 61-வது, 81-வது பிறந்த நாள் மங்கல விழாக்களில் அபிஷேகம் செய்துகொள்ளுகிறார்கள். கங்கையில் நீராடும் வாய்ப்பும் வசதியும் பெறாதவர்கள் காவிரியில் ஆடலாம் என்று தேவாரம் கூறுகிறது: ' கங்கை ஆடில் என், காவிரி ஆடின் என்'. பெரும்பாணாற்றுப்படை, மதுரைக்காஞ்சி, பட்டினப்பாலை, புறநானூறு முதலிய நூல்களிலும் கங்கைப் பேராறு குறிக்கப்பட்டிருப்ப தால் தொன்று தொட்டு, கங்கையே இந்தியாவின் தேசிய ஆறு என்பது உறுதிப்படுகிறது.

காவிரிக்குப் புராணப் புகழும் உண்டு. பெண் குழந்தைகளுக்குக் காவிரி என்ற பெயரை இடும் மரபும் தமிழ்நாட்டில் இருந்துவருகிறது. புராண காலத்தில் வாழ்ந்த அகத்தியர் என்ற முனிவருடைய கமண்டலத்திலிருந்து காவிரி தோன்றியதாக நம்பிக்கை நிலவுகிறது. முனிவர் தெற்கே வந்திருந்தபோது மேனியலம்புவதற்காக உட்கார்ந்ததாயும் அப்போது ஒரு காகம் அவருடைய கமண்டலத்தை உருட்டிவிட்டதாயும் அதிலிருந்து பீறிட்ட நீர் காவிரியாகப் பெருக் கெடுத்ததாயும் சொல்லப்படுகிறது. கர்நாடக மாநிலத்தில் குடகுப் பகுதியில் காவிரி உற்பத்தியாகும் இடத்திலிருந்து, வங்காளக் குடாக் கடலில் தமிழ்நாட்டின் கரையில் அது கடலுடன் கலக்கும்வரை பல இடங்களில் நீராடும் கட்டங்கள் உள்ளன. தமிழ்நாட்டில் பக்தி யுள்ள இந்துக்கள் ஒவ்வொருவரும் தவறாமல் ஒரு முறையேனும்

காவிரியில் நீராடுவதைத் தங்கள் கடமையாகக் கடைப்பிடித்து வருகின்றனர்.

ஐப்பசி மாதப் பிறப்பின்போது, திருச்சிராப்பள்ளி மாவட்டத்திலுள்ள திருப்பராய்த்துறையில் அகண்ட காவிரியில், காவிரி—கொள்ளிடம் என இரு கிளைகளாகப் பிரியும் இடத்தில், நீராடுவது பெரியதொரு புண்ணியமாகக் கருதப்படுகிறது. ஐப்பசி மாதம் முழுவதும், முப்பது நாட்களும் காவிரிக் கரையெங்கும் மக்கள் திரள் திரளாகச் சென்று நீராடி இன்புறுகின்றனர். அதன் மூலம் உடல் தூய்மையும் உள்ளத் தூய்மையும் பெறுகின்றனர்.

மயிலாடுதுறை என்னும் மயூரத்தில் ஒரு கதை சொல்லப்படுகிறது. ஒருவன் முடவன். ஐப்பசி 29 நாளும் அவனால் காவிரியில் குளிக்க இயலாமல் போயிற்று. எனவே எப்படியாவது ஐப்பசி 30-ம் நாளிலாவது காவிரியில் நீராட மயூரத்திற்கு விரைந்தான். ஆனால் அவனால் அன்றுகூட வந்துசேர முடியவில்லை. கடவுள் அவனுடைய பக்தியை மெச்சி மறுநாள்—கார்த்திகைத் திங்கள் முதல் நாளில்—அவனை நீராடச் செய்து அவனுக்கு மோட்சம் கொடுத்தார். அன்று முதல் காவிரியில் மயூரத்தில் ஆடுவது முடவன் முழுக்கு என்ற பெயரில் கார்த்திகை முதல் நாளில் புனிதமாகக் கொண்டாடப் பட்டு வருகிறது.

'ஆறு இரண்டும் காவிரி அதன் நடுவே திருவரங்கம்' என்பது ஒரு நாட்டுப் பாடலின் பகுதி. இப்பாடல் காவிரியின் பெருமையையும் அது உண்டாக்கும் ஸ்ரீரங்கம் தீவின் தலச் சிறப்பையும் கூறுகிறது.

காவிரியில் குளிக்கும்போது, காவிரிக்கு காணிக்கையாக சிறு சங்கு, வெள்ளி அல்லது தங்கத்தில் மீன் வடிவத்தில் செய்யப்பட்ட தகடு, தேங்காய், கடுக்கன், கருமணி, காசு முதலியவற்றை ஆற்றுக்குள் போடுவது மரபு.

சுருங்கச் சொன்னால், காவிரி ஆறு என்பது ஓடுகிற தண்ணீர் மட்டும் அன்று. தமிழ் நாட்டு வரலாறு, நம்பிக்கைகள் மரபுகள் பாடல்கள் வாழ்வு ஆகிய அனைத்தும் காவிரியுடன் இணைந்துள்ளன. தமிழ் நாட்டின் தொன்மையான பண்பாட்டுக்கும் நாகரிகத்துக்கும் காவிரி ஓர் அடையாளமாக விளங்குகிறது. காவிரியில் நேற்று ஓடின நீர் இன்று இல்லை. இன்று வருவது புதிய நீர். பல நூற்றாண்டுகளில் காவிரியின் போக்கும் சில இடங்களில் திக்குமாறி உள்ளது. இருந்தாலும் காவிரி என்பது ஒரே ஆறுதான். நமது பாட்டன்மார்களும் முப்பாட்டன்மார்களும் இதில்தான் குளித்தார்கள்; இதைத்தான்

அனுபவித்தார்கள். நமது பேரப் பிள்ளைகளும் அவர்களுடைய பேரப்பிள்ளையும் இந்தக் காவிரியில்தான் குளித்துப் புண்ணியமும் புனிதமும் மகிழ்ச்சியும் அடையப் போகிறார்கள்.

### இறைவன்-இறைவியர்

வழி வழியாகத் தமிழ்நாட்டை ஆண்ட அரசர்கள் கோயில்களை விரிவுபடுத்தியும் வழிபாட்டு முறைகளை வகுத்தும் செம்மைப்படுத்தியும் உள்ளார்கள். தமிழ்நாட்டுக்குப் புதியவர்களாக வந்த பல்லவர்கூட, இங்கு நிகழ்ந்த வழிபாட்டு முறைகளைக்கண்டு முதலில் வியப்படைந்து பின்னர் அவற்றை ஏற்று ஊக்குவித்தனர். பழைய கோயில்களைப் பேணியும் விரிவுபடுத்தியும் புதிய கோயில்களைக் கட்டியும் பக்தியை வளர்த்தனர். பல்லவர்க்குப் பின்வந்த சோழர்கள், நான்கு வேதங்களையும் நன்கு பயின்ற பிராமணர்களுக்குச் ' சதுர்வேதி மங்கலங்கள் ' என வழங்கிய இருப்பிடங்களை ஏற்படுத்தினர். ஆனால் அதேசமயத்தில் ஆதி சைவர் என்ற சிவாச்சாரியார்களின் உரிமைகளையும் சோழர்கள் பாதுகாத்தார்கள். தலைமுறை தலைமுறையாக இவர்களே தமிழ்நாட்டுக் கோயில்களில் குருக்கள்மாராக இருந்திருப்பது பழைய கல்வெட்டுக்களிலும் செப்பேடுகளிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

சங்ககாலத்தில் ஐவகை நிலங்களுக்கும் உரிய ஐந்து தெய்வகளை மட்டுமே மக்கள் வழிபட்டு வந்தார்கள். குறிஞ்சி நிலத்துக் கடவுளாக முருகனையும், முல்லைநிலத்தில் விஷ்ணுவையும், பாலை நிலத்தில் துர்கை அல்லது காளியையும், மருத நிலத்தில் இந்திரனையும், நெய்தல் நிலத்தில் வருணனையும் தமிழர்கள் வழிபட்டார்கள். ஏற்கெனவே இருந்த இந்த வழிபாடு பல்லவர்கள் வந்த பிறகு மிக விரிவான சடங்காக நடத்தப்படலாயிற்று. பல்லவர் காலம் முதல் விஜயநகரப் பேரரசின் இறுதிக்காலம் வரை, ஆரியக் கடவுளர்—இறைவன், இறைவி—திருமேனிகள் கோயில்களில் பிரதிஷ்டை செய்யப்பட்ட வண்ணமாக இருந்தன. சிற்றூர்களில் உள்ள கோயில்களிலும் இந்த நிலை இருந்தது. ஏற்கெனவே அவற்றில் இருந்த திராவிட இறைவன் இறைவியர் உருவங்கள் புறக்கணிக்கப் பட்டன அல்லது அவை வெளிச் சுற்றுப் பிரகாரங்களில் வைக்கப் பட்டன, இதனால் **ஒண்டவந்த பிடாரி ஊர்ப் பிடாரியை ஓட்டிற்று** என்ற பழமொழி ஏற்பட்டது.

தமிழ்நாட்டில் வழிபடப்படும் பிராமணக் கடவுளர் விநாயகர், சிவன், விஷ்ணு, இன்னும் இவர்களுக்கு உரிய இறைவிகள் ஆவர்.

இவர்களுள் மிகவும் செல்வாக்குப் பெற்று எங்கும் பரவியிருப்பவர், குள்ளக் குள்ளனுயும் குண்டு வயிறனுயும் ஆனை முகனுயும் உள்ள விநாயகர். விநாயகர் சிலையை ஆற்றங்கரைகளிலும் ஏரிக்கரை களிலும் மரங்களின் அடியிலும் காணலாம். விநாயகர் கோயில் கட்டுவதில் ஒரு புதிய ஆர்வத்தையும் பலரிடம் பார்க்கிறோம். ஓர் இடத்தை அரசாங்கம் ஏதாவது ஒரு குறிப்பிட்ட செயலுக்காக எடுத்துக்கொள்வதையோ, அல்லது ஓர் இடத்தில் நெடுஞ்சாலை போடுவதைத் தடுப்பதற்காகவோ, திடீரென்று விநாயகர் கோயில்கள் கட்டப்படுகின்றன.

இறைவியை, அன்னையாகவும் உலகநாயகியாகவும் வழிபடும் மரபு மோஹஞ்ச தாரோ, ஹரப்பா காலத்திலிருந்து தொடர்ந்து நிலவி வருகிறது. எருமை என்ற இராட்சசனைக்கொன்ற துர்காதேவிதான் முக்கியமாக வழிபடப்படும் இறைவி ஆவாள். அடுத்தபடி அந்தக் கோயிலில் உள்ள இறைவிகளையும் கிராமங்களைக் காப்பாற்றும் கிராம தேவதைகளையும் மக்கள் பயபக்தியுடன் வழிபட்டு வருகின்றனர். இவ்வகையில் சில இறைவியர் பெயர்களைக் குறிப்பிடலாம்:

| தலம் | இறைவி |
|---|---|
| மயிலாப்பூர் | கற்பகாம்மாள் |
| காஞ்சிபுரம் | காமாட்சி |
| சிதம்பரம் | சிவகாமசுந்தரி |
| திருக்கடவூர் | அபிராமி |
| திருவிடைமருதூர் | முகாம்பிகை |
| மதுரை | மீனுட்சி |
| திருநெல்வேலி | காந்திமதி |
| கன்னியாகுமரி | குமரியம்மன் |

செல்வத்துக்குரிய இறைவியான லெட்சுமியைத் தமிழர்கள், திருமகள் என்ற பெயரால், விரும்பி வேண்டி பக்தி சிரத்தையுடன் வழிபட்டு அவளுடைய அருளுக்காகப் பிரார்த்தனை செய்கிருர்கள். பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை. எனவே, வேண்டும் வரங்களை, பொருள்களை வாரி வழங்கும் திருமகளின் பட்ங்களை வீடுகளில் கண்ணுடியில் மாட்டி, மேடைமீது இருத்தி, நாள்தோறும் வழி படுகின்றனர். அஷ்டலெட்சுமிகளை வழிபடுவதும் மரபு. திருமணச் சீர்வரிசைகளுடன் (கலைமகள் படத்துடன்) திருமகள் படமும் மணப் பெண்ணுக்கு வழங்கப்படும். பெண்குழந்தைக்கு லெட்சுமி என்று பெயரிடுவதும் வழக்கம். வேறு பெயரிட்டாலும்கூட, அந்தப்

பெயரின் இறுதிச் சொல்லாக 'லெட்சுமி'யைச் சேர்த்துக்கொள்ளுவர்.* வீடுகட்டிப் புதுமனை புகும்போது லெட்சுமி என்ற பெயருடைய ஒரு பெண்ணை அழைப்பது மரபு. வீடு லெட்சுமி கடாட்சம் நிறைந்திருக்கவேண்டும் என்ற ஆசையால் இவ்வாறு செய்வது வழக்கம்.

ஒரு புதுமனை புகுவிழா. வீட்டுக்கார அம்மையார், 'லெட்சுமி' என்ற வேலைக்காரப் பெண்ணை அந்த நாளில் வீட்டுக்கு வரச்சொல்லியிருந்தார். லெட்மி அன்று எதிர்பாராத விதமாகப் பாட்டியினுடைய ஊருக்குச் சொல்லவேண்டியதாயிற்று. அவள் தன் தங்கையை அனுப்பியிருந்தாள். வீட்டுக்கார அம்மையார், 'லெட்சுமி உள்ளே வா' என்று ஆவலோடு அழைத்தாள். "லெட்சுமி போய் விட்டது! நான் அவள் தங்கை" என்று வந்தவள் சொன்னாள். புதுமனை புகும் நாளில் "லெட்சுமி போய்விட்டது" என்ற சொற்கள் காதில் விழுந்தால் யார்தான் வருத்தப்படமாட்டார்கள்? அந்த வீடு ராசி இல்லாதது என்று எண்ணம் பரவிவிட்டது.

*சீதாலெட்சுமி, மகாலெட்சுமி, முத்துலெட்சுமி, சொர்ணலெட்சுமி முதலியன.

# 3. மதமும் மந்திரமும்

## சடங்குகள்

**பா**மர மக்களுடைய ஒவ்வொரு நாள் வாழ்வும் மதத்தோடு பின்னிப் பிணைந்தது. பிறந்த விநாடி முதல் இறக்கும் விநாடி வரை அவர்களுடைய வாழ்க்கை முழுவதும் ஏதாவது ஒரு சடங்கைச் செய்து திருப்தி அடைகிறார்கள். கடவுளரிடம் உள்ள அச்சமும், முன்னோர் வழக்கத்தை மீறாமல் நடந்துகொண்டால்தான் வாழ்க்கை வசதியானதாய் கவலையில்லாததாய் அமையும் என்ற நம்பிக்கையும் சேர்ந்து, இந்தச் சடங்குகளை விடாமல் செய்ய மக்களைத் தூண்டுகின்றன.

### மதத்தின் வாயிலாகத் தேசிய ஒருமைப்பாடு

இந்தியா என்ற பரந்த நிலப்பரப்பை ஒரே நாடாக ஆக்குவதற்கு இந்து மதம் பெரிதும் துணைபுரிந்திருக்கிறது. இந்துக்கள் இந்தியா வெங்கும் இருக்கிறார்கள். அவர்களுடைய புனிதமான தலங்களும் ஜோதிர் லிங்கங்களும் புகழ்பெற்ற திருவிழாக்களும் இமயம் முதல் குமரி வரை உள்ளன.

காசி இராமேசுவரம் என்று ஒரே சொல்லாகச் சொல்வது தமிழ் மரபு. அதைக் கேட்கும்போது, இந்த இரு ஊர்களும் ஒரே ஆற்றின் கரையில் எதிரும் எதிருமாக இருப்பது போல நினைக்கத் தோன்றும்! காசியாத்திரையை மேற்கொள்ளும் எந்த இந்துவும் இராமேசுவரத்திற்குப் போகத் தவறுவதில்லை. இராமேசுவரம் தமிழ்நாட்டில் இருப்பதால், தமிழர்கள் காசி என்னும் வாரணாசிக்கும் செல்ல வேண்டும் என்ற ஆசையால் உந்தப்பட்டிருக்கிறார்கள்.

காசிவிசுவநாதர் கோயிலில் தமிழ் நாட்டு வணிக சமூகத்தாரான செட்டிநாட்டு நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் பல ஏற்பாடுகள் செய்திருக்கிறார்கள். காலை 4 மணிக்கு திருவனந்தல், 11-30 மணிக்கு உச்சிக்காலம், இரவு 9 மணிக்கு சாயரட்சை ஆகிய பூசைகளும்

அபிஷேக அலங்காரங்களும் இவர்களுடைய செலவில் சிறப்பாகச் செய்யப்படுகின்றன. சிவபெருமான், அன்னபூரணித் தாயார், விசாலாட்சி அம்மன், மற்றும் வாரணுசியிலுள்ள ஏனைய கோயில் களிலும் இவர்களுடைய கட்டளைகள் உள்ளன.

வாரணுசிக்குச் செல்லுபவர்கள் கட்டாயம் பார்த்து இன்புறத்தக்க காட்சி விசுவநாதர் கோயிலில் நிகழும் மாலை ஆரத்தி அல்லது படா பூஜை. இது விரிவான சடங்காகவும், ஆடம்பரமாயும், மிகக் கவர்ச்சியாயும் தமிழ்நாட்டு மரபுப்படியும் செய்யப்படுகின்றது. தொன்றுதொட்ட பெருமை மிக்க புனித வாரணுசி நகரின் தெய்வீக வாழ்க்கையில் மிக முக்கியமான, எழில் கூடிய காட்சி என்று இதைக் கூறலாம்.

இந்த நிகழ்ச்சிகள் என்றென்றும் குறைவின்றி இனிது நடைபெறு வதற்காக, நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் கல்கத்தாவிலும், பீகார், உத்தரப் பிரதேச மாநிலங்களின் நகரங்கள் சிலவற்றிலும் மூலதனம் வைத்துப் பெரிய கட்டளைகளை ஏற்படுத்தியிருக்கிருர்கள். வாரணுசி யில் குடோலியா என்னும் பகுதியிலுள்ள நாட்டுக்கோட்டைச் சத்திரம் (ஹிந்தியில் 'நாட்கோட் சத்ரம் பவன்' என்பர்) வானு யர்ந்த கல்கட்டிடம்; அதை அறியாதார் எவரும் இல்லை. இந்த மாளிகையிலிருந்து நாள்தோறும் இருமுறை காலை 11 மணிக்கும் இரவு 8 மணிக்கும் கவின் மிக்க ஊர்வலம் ஒன்று விசுவநாதர் கோயிலுக்குப் புறப்படுகிறது. இதை 'சம்போ' என்பர். அபிஷேகத் திற்குத் தேவையான பால், தேன், பன்னீர், அலங்காரப் பொருள்கள், மலர்கள் ஆகியவை தமிழ் நாட்டு மங்கல இசைக் கருவியான நாதசுரம் முழங்க, எடுத்துச் செல்லப்படுகின்றன. அபிஷேகத்தின் போது தேவார இசைத்தட்டு விசுவநாதர் கோயிலில் ஒலிக்கிறது. இந்த ஊர்வலம் ஒரு நாள்கூட, ஒரு தடவைகூடத் தடைபடாமல் நடைபெற்று வந்திருக்கிறது. 1942-ம் ஆண்டில் "வெள்ளையனே வெளியேறு' இயக்கம் இந்திய நாட்டைப் பெருங் கலவரத்திற்குள் ளாக்கியது. வாரணுசி நகரும் அந்நாளில் அமைதி குன்றி கொந்த ளிப்பாக இருந்தது. ஊர்வலங்கள் தடைப்பட்டன. பலவிதமான கடுமையான சட்டங்கள் விதிக்கப்பட்டிருந்தன. அப்போதுங்கூட, சம்போ குறித்தபடி சென்ற வண்ணமாக இருந்தது, வாரணுசியின் வரலாற்றில் குறிப்பிடத்தக்கது

வாரணுசிக்குச் செல்லும் தமிழர்கள் இராமேசுவரத்தில் தங்கள் காசி யாத்திரையைத் தொடங்குவார்கள். இராமேசுவரத்தில் இராமநாத சுவாமி கோயிலில் உள்ள ஒரு கிணற்றிலிருந்து இறைத்த கோடி

தீர்த்தத்தைத் தங்களுடன் கொண்டுசென்று வாரணாசி விசுவநாத ருக்கு அந்தத் தீர்த்தத்தால் அபிஷேகம் செய்வித்து, பின் வடநாட்டி லிருந்து திரும்பி வரும்போது ஹரித்துவார் அல்லது பிரயாகையில் திரிவேணி சங்கமத்தில் கங்கை நீர் மொண்டு வந்து அதை இராமேசு வரத்தில் கோயில் கொண்டிருக்கும் இறைவன் இறைவியருக்கு அபிஷேகம் செய்வது, தொன்றுதொட்டு இன்றுவரை நிலவிவரும் பழக்கம்.

இராமேசுவரம் கடற்கரை மணலில் ஒரு கைப்பிடி அள்ளி அதைக் கங்கையில் திரிவேணி சங்கமத்தில் போடுவதும் வழக்கம். பீஹாரி லுள்ள கயை என்னும் தலத்தில் இறந்துபோன முன்னோர்களுக்கு பாசத்துடன் பிண்டம் (உணவு) போடுவதும் வழக்கமாகச் செய்யப் படும் சடங்கு ஆகும்.

தமிழ்நாட்டிலுள்ள திருப்பனந்தாள் மடம், ஒரு முக்கியமான சமய நிறுவனம். படிப்பும் பக்தியும் பண்பாடும் ஒருங்கே உடைய துறவி ஒருவர் இதன் தலைவர் ஆவார். இந்த மடத்தின் தலைமை அலுவல கம் வாரணாசியிலும் கிளைநிலையம் தஞ்சை மாவட்டம் திருப்பனந் தாளிலும் உள்ளன. பதினாறும் நூற்றாண்டில் வாழ்ந்த குமரகுருபரர் இந்த மடத்தை நிறுவினார் என்பர். தமிழ் அறிஞரும் துறவியுமான இம்மகான் வாரணாசியில் எண்ணற்ற அருட்செயல்களைச் செய்து அந்நகரை ஆண்ட மொகலாயப் பாதுஷாவையும் தன்னிடம் ஈடுபடச் செய்தார் என்பர்.

சங்கராச்சாரியார்கள் எனப்படுபவர்கள் ஒப்பற்ற தொன்மையும் புகழும் மிக்க பெரிய சமயச் சான்றோர்கள் ஆவார்கள். இந்த ஆன்றோர்களின் மடங்கள் இந்தியாவின் பல திக்குகளிலும் உள்ளன. மேற்கே துவாரகை, கிழக்கே பூரி, வடக்கே உத்தரபிரதேசத்தில் ஜோஷி, தெற்கே சிருங்கேரி, காஞ்சி நகரங்கள். இவற்றுள் புகழ் மிக்கது தமிழ்நாட்டில் காஞ்சிபுரத்தில் உள்ள காமகோடி பீடம். இந்த மடங்கள் எல்லாவற்றையும் பற்றி எத்தனையோ வரலாறுகளும் புராணங்களும் கதைகளும் உண்டு. இவை யாவும் சமய நம்பிக்கை யிலும், இந்தியாவின் ஒருமைப் பாட்டிலும் வேரூன்றியவை.

சங்கராச்சாரியார் மடம், வைணவர்களுடைய நான்குனேரி மடம் ஆகியவை தவிர, தமிழ்நாட்டில் இன்னும் சமயகுரவர் மடங்கள், சந்தானகுரவர் மடங்கள் ஆகிய பல திருமடங்கள் உள்ளன. அவற்றுள் முக்கியமானவை திருவாவடுதுறை, தருமபுரம், குன்றக்குடி, மதுரை ஆதீனங்களும், ஏற்கெனவே குறிப்பிடப்பெற்ற திருப்பனந் தாள் மடமும் ஆகும்.

தமிழ்நாட்டுத் திருமடங்கள் தாங்களே தங்களுடைய அன்றாட வழி பாட்டு முறைகளையும் கூட்டுப் பிரார்த்தனை முறையையும் வகுத்துக் கொண்டிருக்கின்றன. மடத்து வாழ்வில் முக்கியமான நாள் பட்டினப்பிரவேசம் என்பது. அன்று, மடத்தின் தலைவரான மகா சந்நிதானம், அந்த ஊருக்குள் பல்லக்கில் எழுந்தருளுவது கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும். அவர் எண்ணற்ற நகைகளையும் கைவிரல்கள் அனைத்திலும் ஒளிநிறைந்த வைர மோதிரங்களையும் அணிந்து அமர்ந்திருப்பார். மக்களும் புத்தாடைகள் உடுத்து வழி நெடுக நின்றிருந்து, அவரைக் கண்டதும் பலவாறாக வணங்கி அவருக்கு மரியாதை செலுத்துவார்கள். அந்த ஊர்வலத்தில் நாதசுர வித்துவானும் இசைப் புலவர்களும் கிராமியக் கலைஞர்களும் கலந்துகொண்டு தங்கள் தங்கள் கலைத்திறனை வெளிப்படுத்துவர். அவரவர் வீட்டு வாயிலிலும் மக்கள் புத்தாடை உடுத்தி, நீர் நிறைந்த வெள்ளிக் குடங்களையும் அவற்றின்மீது தேங்காயையும் மலர்களையும் வைத்து வரவேற்பர். இந்தச் சடங்குக்கு ‘பூரண கும்ப மரியாதை’ என்று பெயர். பல்லக்கு, தங்கள் வீட்டு வாயிலை அடைந்ததும், மகா சந்நிதானத்தின் பாதங்களைக் கும்பத்து நீர் கொண்டு கழுவி விடுவதும், பவுன், பணம், மலர்கள், பழங்கள் ஆகியவற்றைக் காணிக்கையாகச் செலுத்துவதும் வழக்கம்.

பல வகைக் கிராமியக் கலைகளைப் பரப்புவதிலும் அந்தக் கலைஞர்களை ஊக்குவிப்பதிலும் தமிழ்நாட்டு மடங்கள் பெரும்பங்கு கொண்டிருக்கின்றன. இன்னும் இந்தப் பணி தொடர்ந்து நடைபெறுகிறது. காஞ்சி காமகோடி பீடத்தின் தலைவர்களாகிய பெரியவர்களும் புதுப் பெரியவர்களும் தங்கள் நேர்பார்வையில் இடையிடையே ‘சதஸ்’ நடத்துகிறார்கள். நம்நாட்டிலும் வெளிநாட்டிலும் பக்தியும் புலமையும் மிக்க அறிஞர்கள் கலந்து கொள்ளும் இந்த அரிய விழாக்களையும் இவற்றில் நிகழும் மனத்தைக் கவரும் கலை நிகழ்ச்சிகளையும் காணக் ‘கொடுத்துவைக்கவேண்டும்’.

## கிறிஸ்துவர்களின் சடங்குகள்

தமிழ்நாட்டில் எல்லா மதத்தாரும் ஒற்றுமையாக வாழ்கின்றனர். இந்துக்கள் தங்கள் கடைகளிலும் தொழில்களிலும் பிற மதத்தாரை வேலையில் வைத்துக்கொள்வதையும், ஏனைய மதத்தினரும் இவ்வாறே மத வேறுபாடு காட்டாமல் பலருக்கும் வேலை கொடுப்பதையும் காணலாம்.

குறிப்பாக ஐரோப்பியப் பாதிரிமார்களின் அரிய பணியின் பயனுக, மூலைமுடுக்குகளிலுள்ள தமிழ்நாட்டுக் கிராமங்களில் வாழும் மக்கள் கூட ஓரளவு படித்துள்ளார்கள். உலகத் தொடர்புக்கு ஆங்கில மொழி பயன்படுவதையும் அவர்கள் நன்கு உணர்ந்திருக்கிருர்கள்.

கிறிஸ்துவ சமய நிறுவனங்கள் தூரம் தொலைவிலுள்ள சிற்றூர்களில் கூட மருத்துவ நிலையங்களைத் தொடங்கியிருக்கிருர்கள் என்பதை நன்றியுடன் சொல்லவேண்டும். கன்னியாகுமரி மாவட்டத்தில் நாகர்கோயிலில் காத்தரைன் பூத் மருத்துவ நிலையமும், நெய்யூரில் லண்டன் மிஷன் மருத்துவ நிலையமும், திருநெல்வேலி மாவட்டத்தில் தோனூர் மருத்துவ நிலையமும், இராமநாதபுர மாவட்டம் திருப்பத் தூரில் ' கண் ஆஸ்பத்திரி ' என வழங்கும் சுவீடிஷ் மிஷன் மருத்துவ மனையும், செங்கற்பட்டு மாவட்டம் திருமணியிலுள்ள பெல்ஜிய குஷ்டரோக மருத்துவமனையும், இன்னும் இவைபோன்ற ஏராளமான மருத்துவ மனைகளும், பெரும்பாலான மக்கள் கேள்வியும் பட்டிராத பகுதிகளில் புத்தம் புதிய கருவிகளுடன் சீரிய மருத்துவப்பணி புரிந்து வருகின்றன. இவற்றுக்கெல்லாம் சிகரம் வைத்தது போன்றது, வேலூரில் இயங்கி வரும் கிறிஸ்துவ மிஷன் மருத்துவமனை. மருத்துவ வசதி, மருத்துவக் கல்வி, மருத்துவத் துறையில் உயர் ஆராய்ச்சி, பல்லாயிரக்கணக்கான நோயாளிகளின் நோய் வரலாறு பற்றிய விரிவான அறிக்கைகளைப் பேணி வைத்திருப்பது ஆகிய பணிகளால் இந்த மருத்துவ நிலையம் உலகம் முழுவதும் பெயரும் பெரும் சிறப்பும் பெற்றிருக்கிறது; இந்தப் பெயருக்கும் புகழுக்கும் அது முற்றிலும் தகுதியுடையதாகும்.

கிறிஸ்துவப் பாதிரிமார் பலர் சைவ வைணவ சமய நூல்கள் உட்பட, தமிழ் இலக்கியங்கள் அனைத்தையும் கசடறக்கற்றனர். ஐரோப்பாவில் விவிலிய நூலைத் தமிழில் அச்சிட்டனர். வேறு எந்த ஆசிய மொழியிலும் தமிழுக்கு முற்பட்ட விவிலிய நூல் பதிப்புக் கிடையாது. இந்துக்களுடைய தேவாரம் போன்ற பாடல்களையும் பிரார்த்தனைக் கீர்த்தனைகளையும் பார்த்து அவைபோன்ற பாடல்களை யும் கிறிஸ்துவ வணக்கப் பாமாலைகளாக அவர்கள் பாடியுள்ளனர். இவையும் தமிழ் விவிலிய நூலும் சேர்ந்து தேவாலயங்களில் தமிழி லேயே வழிபாடு நடக்க வழி வகுத்தன. இதற்கு நேர்மாருக, இந்துக் களின் கோயில்களில் தமிழ் போதிய அளவு இடம்பெருதிருந்தது. அந்த நிலை அண்மையில்தான் மாறியிருக்கிறது.

இயேசுநாதரின் நேரடித் தொண்டரும், அவர் கண்ட மதத்தைப் பரப்புவதில் வெற்றிகண்ட பெருந்தூதருமான புனித தாமஸ்

தன்னுடைய தெய்விகப் பணிக்குத் தமிழ்நாட்டையே தேர்ந் தெடுத்தார். உலகத்தார் அனைவரும் புகழ் பாடும் சென்னைக் கடற்கரையில் சாந்தோம் பகுதியில் அவருடைய உடல் அடக்கம் செய்யப்பட்டிருக்கிறது. புனித தாமசின் வரலாறும் அவருடைய அருட் செயல்கள் பற்றிய கதைகளும் கிறிஸ்துவர்களின் மனங்களில் அழுத்தமாகப் பதிந்துள்ளன. அவருடைய பத்தொன்பதாம் நூற்றுண்டு பெரிய அளவில் கொண்டாடப்பெற்றது.

சென்னை அரண்மனைக்காரத் தெருவில் உள்ள புனித மேரி தேவா லயத்தில் ஒவ்வொரு செவ்வாய்க்கிழமையும் திரளான இந்துக்கள் வழிபடுகிறுர்கள். தஞ்சை மாவட்டத்தில் கடற்கரையிலுள்ள வேளாங்கண்ணி ஆரோக்கியமாதா கோயிலிலும், திருவிழா நாட்களி லும் சாதாரண நாட்களிலும் இந்துக்களைக் கூட்டம் கூட்டமாகக் காணலாம்.

இந்துக்களின் கோயில்களுக்குக் கிறிஸ்துவர்களும் இஸ்லாமியர் களும் அறக்கட்டளைகள் ஏற்படுத்தியிருக்கும் விநோதத்தைத் தமிழ் நாட்டில் காணலாம். ஐரோப்பியத் துரைமார்களான ஐ.சி.எஸ். அலுவலர்கள் மதுரை மீனுட்சியம்மனுக்கு வழங்கியுள்ள காணிக்கை நகைகளையும், பவானியில் அம்மனுக்குக் கொடுத்துள்ள பல்லக்கை யும், இன்னும் திருத்தணியில் மாபூப்கான் ஒரு மண்டபம் கட்டி அங்கு ஷெனுய் வாசிக்க ஏற்பாடு செய்திருப்பதையும், இதற்கு உதாரணங்களாகச் சுட்டிக் காட்டலாம். இந்துக்களும், மசூதிகள் தேவாலயங்களுக்கு மனமுவந்து தாராளமாக நன்கொடைகள் கொடுத்து வருகின்றனர்.

தமிழ்நாட்டின் தென் மாவட்டங்களில் மதம் மாற்றுவது பெரிய அளவில் நடைபெற்று வந்தது. ஆனுல் மதம் மாறினுலும், ஏற்கெனவே அவர்கள் இந்துக்களாக இருந்தபோது கடைப்பிடித்த பழக்கங்களைக் கிறிஸ்துவர் ஆனவர்கள் கைவிடவில்லை. இவ்வகை யில், அமாவாசை நாளன்று இலையில் கடவுளருக்குப் படையல் வழங்கும் பழக்கம் குறிப்பிடத்தக்கது. மதம் மாறிய இந்துக்கள், கிறிஸ்துவப் பாதிரிமார்களுக்கு அஞ்சி, அமாவாசையன்று உணவு உண்ட இலைகளை வெளியே கடாசி எறியாமல் தங்கள் வீட்டின் ஒரு பகுதியில் எரவானத்தில் மறைத்து வைத்திருப்பர்.

## இந்துக்களின் வழிபாட்டு முறைகள்

எல்லாச் சாதிகளிலும் பக்தியுள்ளவர்கள், வீட்டிலேயே ஒரு பூசை அறை அமைத்து, அதில் இறைவன் இறைவியர் படங்களை வைத்து,

நாள்தோறும் கும்பிடுகிருர்கள். சில வீடுகளில் தீட்சை பெற்றுக் கொண்டவர்கள் அல்லது உபதேசம் கேட்டவர்கள் ‘உடையவர் பூசை’ என்ற பெயரில் மிக விரிவான சடங்குகள் நடத்துவார்கள். அவற்றின் நுண்ணிய விவரங்கள் கூர்ந்து கவனிப்பதற்கு உரியன.

கோயில்களில் கலையழகு நிரம்பிய பலவகை விளக்குகள் தீப ஆராதனையின்போது பயன்படுத்தப்படுகின்றன. இவை இறை உருவங்கள் முன்பாகக் காண்பிக்கப்படுகின்ற பாணியிலும் கூடக் கலைச் சிறப்பைக் காணலாம். சிறந்த கைவினைஞர்கள் பரம்பரையாக உருவாக்கி வரும் வகை வகையான இந்த விளக்குகள் தமிழ் நாட்டின் பழமைக்கும் புதுமைக்கும் இடையே ஓர் இணைப்பாக விளங்குகின்றன. ஸ்ரீரங்கம் இராமேசுவரம் ஆகிய இரு கோயில்களையும் புதுப்பிக்கும் பணியில் யுனெஸ்கோ (ஐ. நா. கல்வி-விஞ்ஞான-பண்பாட்டுக் கழகம்) வும் பங்கு பெற்றுள்ளது. கோயில்கள் வாயிலாக நின்று நிலைத்துவரும் ஈடு இணையற்ற கட்டிடக்கலை, மரச் சிற்பக்கலை ஆகியவை உலகம் முழுவதுக்கும் பொதுவான சொத்துக்கள். அவற்றைப் பேணுவதில் உலக நிறுவனம் ஒன்று பொறுப்பேற்பது நியாயமானதும் பொருத்தமானதும் வரவேற்சத் தக்கதுமாகும்.

### ரதத்தை இழுப்பது

பக்தர்கள் தங்கள் முதுகில் ஊக்குகள் குத்தி அந்த ஊக்குகளுடன் இணைக்கப்பட்ட கயிற்றின் மூலம் சிறிய ரதம் அல்லது தேரை இழுப்பது ஒரு மரபு. பக்தியின் பொருட்டு மனிதர்கள் எவ்வளவு தூரம் உடல் தொந்தரவு வலி முதலியவற்றைத் தாங்கிக் கொண்டு தியாகம் செய்கிருர்கள் என்பதற்கு இது எடுத்துக்காட்டு. இந்தக் கோலத்தில், பொசுக்கும் வெயிலில் வியர்வை சொட்ட, பல மைல் தொலைவுக்கு நடந்து சென்று தேரை இழுப்பதும் செல்லும் வழியெல்லாம் இறைவனுடைய பெயரையே வாயாரச் சொல்லுவதும் வழக்கம். நாக்கை வெளியே இழுத்து அதன் நடுவில் வெள்ளியால் செய்த ஓர் ஊசியைக் குத்திக் கொள்வதும் உண்டு. அந்த ஊசி, முருகனின் ஆயுதமான வேலாயுதத்தின் சின்னம் ஆகும்.

வழி நெடுக, இவ்வாறு கடுந்தவம் மேற்கொண்டு முருகனிடம் ஈடுபட்டுச் செல்லுபவர்கள்மீது, மக்கள் குளிர்ந்த நீர், பன்னீர், சந்தனக் கலவை ஆகியவற்றை ஊற்றி வெப்பத்தின் கொடுமையை அவர்களுக்குத் தணிப்பார்கள். இந்தச் சடங்கு தெய்வப்பற்று மிக்க இந்துக்கள் சிலரின் கடுமையான வழிபாட்டு முறைகளைச் சித்திரிப்ப

தாக, பெரும்பாலான இந்துக்கள் தங்கள் இல்லங்களிலேயே அமைதியாகச் சில சடங்குகளைக் கடைப்பிடிக்கும் முறைக்கு முற்றும் மாறுபட்டதாக அமைந்துள்ளது.

சிறு ரதம் இழுக்கும் சடங்கின் இறுதிக் கட்டம், தீ மிதத்தல் என்பது. கடுமையான சூரிய வெப்பத்தில் வெந்து உருகி, நடு நாக்கில் குத்திக்கொள்ளப்பட்ட சிறிய வேலினாலும் முதுகில் குத்திக் கொள்ளப்பட்ட ஊக்கு (ஆணி) காரணமாயும் குற்றுயிரும் குலை உயிருமாக ஆன நிலையில், காலும் கையும் சோர்ந்து ஓய்வை எதிர்பார்க்கும் வேளையில், அவன் (பக்தன்) நெருப்பின் மீது நடக்கவேண்டும். பக்திப் பெருக்கில், அந்த நெருப்பிலும் கொதிப்பிலும் நடக்கும்போது, பஞ்சுமெத்தையில் கால் வைத்த உணர்ச்சிதான் அவர்களுக்கு ஏற்படும். பல நாட்களாக, மனத்தை அவ்வாறு கட்டுப்படுத்தியிருப்பார்கள். உடலும், பல தியாகங்களுக்குத் தயாராகிவிடும். இதன் பிறகு அவர்கள் இழுத்துவந்த தேரில் உள்ள பால், சந்தனம், திருநீறு முதலியன இறை உருவத்திற்கு அபிஷேகம் செய்யப்படும். அப்போது சன்னிதியில் நிற்கும் பக்தன், தான் பட்ட இன்னல்களை யெல்லாம் மறந்து இறை நினைவாகவே இருப்பான்.

இந்த நிகழ்ச்சியின்போது, சில பக்தர்கள் ஆணிகள் நீட்டிக்கொண்டிருக்கும் மரக் கட்டைகளையே காலணிகளாகப் பயன்படுத்துவதும் உண்டு. எந்த வலியும் அவர்களுக்குத் தோன்றாத ஒரு நிலையை—மனித வரையறைகளுக்கு அப்பாற்பட்ட கட்டத்தை—அவர்கள் அடைந்துவிடுகிறார்கள். நிகழ்ச்சிக்கு ஏறத்தாழ ஒரு மாதகாலம் முன்பிருந்தே இவர்கள் கட்டுப்பாட்டுடனும் விரதத்துடனும் இருந்து வருவார்கள்.

இன்னும், மலைவலம் வருதல்; வீதியில் மண்ணில் புரண்டவாறே கோயிலை வலம் வருதல் (அங்கப் பிரதட்சணம்) முதலியன செய்பவர்களும் உள்ளனர். மனிதனுடைய அகந்தையைக் குறைக்க ஏற்பட்ட பழக்கங்களே இவை யாவும்.

### பால்குடம்

பால்குடம் (பாற்குடம்) என்பது, பக்தர்கள் வேண்டுதலைக்கேற்ப, கடவுளருக்கு அபிஷேகம் செய்வதற்காக முறைப்படி, ஒரு குடத்தில் பால் நிரப்பி, அதைத் தலையில் தாங்கிக்கொண்டு, தம் வீட்டிலிருந்து கோயில் இருக்கும் ஊர் வரை, கோயில்வரை, நடந்தே சென்று அதைச் சேர்ப்பிப்பதாகும். தலையில் இருக்கும் குடத்தைக் கையால் பிடித்துக் கொண்டு செல்லுவது வழக்கம் இல்லை. பால்குடம்

கொண்டு செல்லுபவர்கள் தலைமீது உள்ள குடத்தைப்பற்றிய நினைவே இல்லாமல் பக்திப் பெருக்கால் ஓடுவதும் உண்டு. ஆனால், ஒரு சொட்டுப் பால்கூடச் சிந்துவது கிடையாது.

**சந்தனக் குடம்**

பால்குடம் எடுத்துச் செல்லுவதுபோன்ற மற்றொரு சடங்கு சந்தனக் குடம். இந்தச் சடங்குகள் யாவும் தனித்தனியாகவோ அல்லது கூட்டமாகவோ செய்யப்படுகின்றன. இந்த ஊர்வலத்தில், பிரார்த்தனை செய்பவரின் உறவினரும் நண்பர்குழாமும் குருக்கள்மாரும் இசைக்கருவிகளை வாசிப்பவர்களும் வேடிக்கை பார்ப்பவர்களும் சேர்ந்துகொள்ளுவர்.

இவ்வாறே பூத்தட்டுத் தூக்கிச் செல்லுவது என்ற மரபும் உண்டு.

**தேங்காய் உடைத்தல்**

தமிழ்நாட்டில் விநாயக வணக்கம் மிகவும் பரவியிருக்கிறது. ஒரு கெடுதல் நேரக்கூடியதைத் தடுக்கவோ அல்லது ஏதாவது வேண்டிக் கொள்வதற்கோ அல்லது பிரார்த்தனை நிறைவேறியதற்கு நன்றி செலுத்துவதற்கோ விநாயகரை நினைப்பார்கள். தேங்காய்களை, துண்டு துண்டாகச் சிதறும்படி, சூறை போடுவதுதான் விநாயகருக்கு மிகவும் விருப்பமான காணிக்கை. மனிதன் ஆன்மீக விடுதலை பெறுவதற்கு இடையூறாக அவனிடம் குடிகொண்டுள்ள முப்பெரும் தீய சக்திகளை அழிப்பதற்காகவே தேங்காய் சூறை போடப்படுகிறது அரிசி மாவைப் பந்துபோல உருட்டிச் செய்யப்படும் இனிப்பு உணவான மோதகம் அல்லது கொழுக்கட்டையை விநாயகருக்குப் படைத்து, குழந்தைகளுக்கு வழங்குவதும் வழக்கம்.

**ஆன்மீகப் பெருமக்களை வழிபடுதல்**

வணக்கத்திற்குரிய பெருமக்கள் பிறந்த இடங்களும் அவர்கள் வாழ்க்கையோடு தொடர்புடைய இடங்களும் புனிதமாகக் கருதப் படுகின்றன. அந்த இடங்களில் ஒரு கோயில், அல்லது ஒரு மேடை அல்லது நினைவு மண்டபம் நிறுவப்படுகிறது. கரூர் அருகே காவிரிக் கரையில் நேரூரில் உள்ள ஒரு மரம், சதாசிவ பிரம்மேந்திர சுவாமிகள் முக்தி அடைந்த இடமாக, புனிதமாகக் கருதப்படுகிறது. இவ்வாறே தென் ஆர்க்காடு மாவட்டத்தில் அப்பர் பெருமான் பிறந்த பதியாகிய திருவாமூரும், பகவான் ரமண மஹரிஷிகள் பிறந்த பதியான திருச்சுழியும் அவர் ஆசிரமம் கண்ட திருவண்ணாமலையும், ஸ்ரீ இராமா

நுஜருடன் தொடர்புடைய ஸ்ரீ பெரும்பூதூரும், வள்ளலாருடன் தொடர்புடைய வடலூரும் இறையுணர்வு உள்ள மக்களால் புனித மான தலங்களாக மதிக்கப்படுகின்றன.

தவம் மேற்கொள்ளும் கடுந்துறவிகள் நினைவாக, சாலைவழிகளில் கற்கள் பிரதிஷ்டை செய்யப்படுகின்றன. அந்த முனிகளுடைய வாழ்த்துப் (ஆசீர்வாதம்) பெற, முனியன், முனுசாமி, முனியாண்டி என்ற பெயர்கள் குழந்தைகட்கு இடப்பெறுகின்றன. காரைக்குடி யில் முனீஸ்வரன் கோயில் ஒன்று உளது.

கவிஞர்களும் அறிஞர்களும் சான்றோர்களும் அவர்கள் பெயரால் நிறுவப்படும் நினைவுச்சின்னங்களால் என்றும் மக்கள் நினைவில் உள்ளனர். மயிலாப்பூரில் திருவள்ளுவர் பெயரால் ஒரு கோயிலும் இராமநாதபுர மாவட்டத்தில் நாட்டரசன் கோட்டையில் கவிச் சக்கரவர்த்தி கம்பனின் சமாதிக் கோயிலும் குறிப்பிடத்தக்கன. கம்பன் சமாதி அருகே உள்ள மண்ணைக் குழந்தைகளின் நெற்றியில் பூசினால், அவர்கள் சரசுவதி கடாட்சம் பெற்று விளங்குவார்கள் என்ற நம்பிக்கை நிலவி வருகிறது. பள்ளியில் வைப்பதற்குமுன், இவ்வாறு இந்த மண்ணைச் சிறுவர் நெற்றிகளில் பூசுவது வழக்கம்.

### முன்னோர் வழிபாடு

பல குடும்பங்களில் முன்னோர்களை ஆண்டுக்கு ஒரு நாள் நினைத்து வழிபடுகின்றனர். அவர்கள் பயன்படுத்திய பொருள் களைப் பேணி வைத்திருந்து அவற்றுக்கும் தனி மதிப்புக் கொடுப்பது வழக்கமாக உளது.

யாத்திரை செல்பவர்கள் மறந்துவிடாமல் வழியிலுள்ள சைவ அல்லது வைணவ நாயன்மார்கள் முதலிய பெரியோர்கள் அவதரித்த அல்லது முக்தி அடைந்த பதிகளுக்கும் சென்று வருகின்றனர். இவ்வாறே அவர்களால் பாடப்பெற்ற (தேவாரம், திருவாசகம், திருப்புகழ், பிரபந்தம் முதலியன பெற்ற) கோயில்களை வழிபடுவதும் வழக்கமாக உளது. இத்தகைய கோயில்கள் கடற்கரைகளிலும் தீவுகளிலும் மலைகளின் மீதும், ஆற்றங்கரை களிலும் இன்றும் எளிதில் செல்ல இயலாத உள்நாட்டுப் பகுதி களிலும் இருக்கின்றன. தமிழ்ப் பாடல்கள் பெற்ற கோயில்கள் தமிழ்நாட்டில் மட்டுமன்றி கேரளம், கர்நாடகம், ஆந்திரப் பிரதேசம் உத்தரப் பிரதேசம், மஹாராஷ்டிரம் ஆகிய இந்திய மாநிலங்களிலும் ஸ்ரீலங்கா, நேபாளம் ஆகிய வெளிநாடுகளிலும் உள்ளன. எனவே

ஆன்மீகப் பெருமக்களை வழிபடுவது என்ற தமிழர் மரபு தேசியத்தை யும் சர்வ தேசியத்தையும் அடிப்படையாகக் கொண்டது. ஆனால்,

" தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி "

என்ற தமிழ் வாசகத்தை மேற்போக்காகப் படிப்பவர்களுக்கு குறுகிய பிராந்தியப் பற்று தமிழர்களிடம் இருப்பதுபோலத் தோன்றலாம். இது தவறான எண்ணம் ஆகும்.

**கருவிகளை வழிபடுதல்**

நவராத்திரி விழாவின் கடைசி நாள் கலைமகள் விழா (சரஸ்வதி பூஜை). இது புரட்டாசித் திங்களில் நிகழும். அன்று, புத்தகங்கள் படிப்புடன் தொடர்புடைய ஏனைய பொருள்கள், மற்றும், தொழிலில் பயன்படும் இயந்திரக் கருவிகள், பட்டறைப் பொருள்கள், உழவுக் கருவிகள், தட்டச்சுக் கருவிகள் முதலிய எல்லாவற்றையும் வழி படுவது மரபு. அவற்றுக்குச் சந்தனம் பூசுவதும் அவற்றின் முன்னிலையில் சூடம் ஏற்றி வழிபடுவதும் உண்டு.

**பேய்-பிசாசு வழிபாடு**

பேய் பிசாசுகளால் கேடு நேராதிருப்பதற்சாக பாமர மக்கள் அவற்றுக்கு வணக்கம் செலுத்துகின்றனர். பேய் பிசாசுகளின் கடவுளராக உள்ள தெய்வங்களையும் மக்கள் வழிபடுகிறார்கள். அந்தக் கடவுளர் தலையிட்டுப் பேய் பிசாசுகள் தங்களைத் துன்புறுத்து வதைத் தடுப்பார்கள் என்று நம்பி இவ்வாறு செய்கிறார்கள். கொலைக்கு பலியானவர்; அல்லது தற்கொலை செய்துகொண்டவர்; அல்லது பிறரால் இம்சிக்கப்பட்டு அல்லது சித்திரவதை செய்து இறந்தவர்-இவர்களுடைய உயிர்களுக்கு, இறந்த பின்னரும் பிறருக்குக் கேடு விளைக்கும் ஆற்றல் உண்டு என்பர். இவர்கள் மரங்களில் வாழ்வதாகவும் அங்குமிங்கும் திரிவதாகவும் மக்கள் நம்புகிறார்கள். எனவே அம்மன் கோயில்களுக்கு அருகே வீடு கட்டும்போது, பேய் பிசாசுகளின் நடமாட்டத்துக்காக காலி இடமாக ஒரு பாதை விட்டுவைத்து எஞ்சிய இடத்தில் மட்டும் வீடு கட்டுவது நடைமுறை வழக்கம். சில சமயம் பேய் பிசாசுகள் இளைஞர்களையோ, வயது அடையும் பருவப் பெண்ணையோ பிடித்துக்கொள்வதும் உண்டு. அந்த இளைஞன் அல்லது பெண்

செய்யும் செயல்கள் அனைத்தையும் பேய் அல்லது பிசாசின் செயல் என்று சொல்லுவார்கள்.

பேய் பிசாசுகளின் வருகையால் கால் நடைகளுக்குச் சாவு நேரும் என்பர். அந்தப் பேய்களின் கோபத்தைத் தணிக்க ரத்தம் சிந்தவேண்டும் என்பதற்காக, உயிர்ப் பலி கொடுப்பதும் வழக்கம்.

பேய் பிசாசு வழிபடும் இடங்கள் பேய்க் கோயில்கள் எனப்படும்: இவை சமாதிகள்போல, அல்லது சரிவான கோபுரங்கள் போல, பெரும்பாலும் ஒரு மரத்திற்கு அருகே அமைந்திருக்கும். அந்த மரத்தில்தான் அந்தப் பேய் வாழ்வதாகச் சொல்லுவார்கள்.

இந்தக் கோயில்களில் யார் வேண்டுமானாலும் பூசாரி ஆகிவிட முடியும். திடீரென்று உணர்ச்சி வசப்பட்டு, பிசாசு வேஷம் போட்டோ, பேயாட்டம் ஆடியோ, வந்திருப்பவர்களுக்குத் திருநீறு வழங்கிவிடலாம். அவர்களுக்குப் பலவாறு கட்டளையிட்டும் விடலாம். அங்கு கூடியிருப்பவர்கள் அனைவரும் பயபக்தியுடன் அவனை வழிபடுவர். அவன் தற்காலிகக் கடவுள் ஆகிவிடுவான்!

### குருக்கள் வழிபாடு

குருக்கள், சிவாச்சாரியர், ஆதிசைவர் அல்லது ஓதுவார்கள் கோயில் பூசாரிகளாகத் தமிழ் இலக்கியங்களில் சொல்லப்பட்டிருக் கிறார்கள். பரம்பரை பரம்பரையாக வந்த இந்தப் பூசாரிகள் கோயில் மரபு, வழிபாட்டுச் சடங்குகள், கலை, இலக்கியம் ஆகியவற்றில் புலமை நிரம்பியவர்கள். இவர்களுக்கு வம்ச பரம்பரையாக ஏற்பட்ட உரிமைகளும் கடமைகளும் பொறுப்புகளும் உண்டு. நாள்தோறும் மும்முறை பூசை நடக்கும்போது இறைவன் திருவுருவத்தைத் தொடும் உரிமை இவர்களுக்குரிய உரிமைகளுள் முதன்மையானது. இதனால் இவர்களுக்கு முப்போதும் திருமேனி தீண்டுவார் என்ற பெயர் உண்டு.

### வீர வணக்கம்

போர்வீரர்களும் வரலாற்று நாயகர்களும் மக்கள் மனத்தில் நிலைத்திருக்கிறார்கள். நினைவுச் சின்னங்களான கோட்டை கொத் தளங்கள் மாளிகைகள் ஒரு புறமிருக்க, அவற்றை விடவும் சிறந்த முறையில், எழுதா இலக்கியங்களான நாட்டுப்பாடல்களும் அவர்கள் புகழ்பாடுகின்றன. இவ்வகைப் பாடல்களில் சிறந்தது தென் ஆர்க்காடு மாவட்டத்துச் செஞ்சியை ஆண்ட தேசிங்கு ராஜனைப் பற்றியது. இவன் முஸ்லிம் இளவரசன் ஒருவனை எதிர்த்துப்

போராடிய வீரன், இரு கோட்டைகளைக் கட்டியவன். இவன் காலம் 17-ம் நூற்றுண்டு. இவ்வாறே சுதந்தரப் போராட்டத்தின் முன்னேடிகளில் ஒருவரான கட்டபொம்மன் நினைவாக **பாஞ்சாலங் குறிச்சி வீரபாண்டியக் கட்டப்பொம்மன் கதைகள்** வழங்கி வருகின்றன.

புராணங்களில் சொல்லப்பட்டிருக்கும் வீரர்களுக்கும் வழிபாடு உண்டு. பாண்டியர்களுக்குக் கப்பம் கட்டிய சிற்றரசனுன மதுரை வீரன், போராட்டங்களில் பலருடைய உயிரைக் காப்பாற்றினுன் என்பர். மதுரையில் அவன் ஒரு சிறு கடவுளாகவே இன்றும் வழிபடப்படுகிருன். அவன் காலத்திய நிகழ்ச்சிகள் மதுரைவீரன் திருவிழாக்களில் வில்லுப்பாட்டாகப் பாடப்படுகின்றன.

### மரங்களை வழிபடல்

மதத்தின் அடிப்படை உயிர்களை மதிப்பது. உயிரினங்களும் மரம் செடி வகைகளும் தெய்வத்தன்மை உடையனவாகக் கருதப் படுகின்றன. மரங்களை வழிபடுவது தினசரி காணத்தக்க காட்சி. மரங்களை வழிபட்ட நிகழ்ச்சிகளை இலக்கியங்கள் கூறுகின்றன. படருவதற்குக் கொழுகம்பு இன்றித் தவித்த முல்லைச்செடிக்குத் தன் தேரை ஈந்தவன் பாரி மன்னன் : இந் நிகழ்ச்சி இன்றும் இராமநாத புர மாவட்டத்தில் ஆண்டுதோறும் பாரி விழாவில் ஒரு காட்சியாகக் காட்டப்படுகிறது.

அமாவாசை நாள் திங்கட்கிழமையில் வந்தால் அப்போது அரச மரத்தையும் அதனருகே பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ள நாகக் கற்களையும் 108 தடவை அல்லது 108, 216, 324, 432 என்ற எண்ணிக்கைகளில் வலம் வந்து அந்த மரத்தை வழிபட்டு, மகப்பேறு பெறவோ, உடல்நலம் பெறவோ பிரார்த்திக்கும் வழக்கமும் பரவி யிருக்கிறது. இராமேச்சுரத்தில் நாகப் பிரதிஷ்டை செய்வது மிகவும் சிறப்பாகவும் உடனடியாகப் பலன் தரக்கூடியதாகவும் கருதப் படுகிறது.

அரச மரம் புனிதமாகக் கருதப்படுவதால், அதன் வாதுகளையோ பிற பகுதிகளையோ பாமர மக்கள் விறகாகப் பயன்படுத்துவதில்லை. தொழில் முறையில் அரச மரத்தை ஏலத்தில் எடுத்துவிட்டால் அதைக் கோயில் மடப்பள்ளிக்கு அன்பளிப்பாகக் கொடுத்துவிடு வார்கள். சிறு கட்டைகளை யாகம் முதலிய புனிதச் செயல்களில் அடுப்பு மூட்டப் பயன்படுத்துவர்.

மரங்களின் நிழலில்தான் கோயில்கள் முதலில் ஏற்பட்டன. தமிழ் மரபுப்படி ஒவ்வொரு கோயிலுக்கும் சிறப்பாக ஒரு மரம் உண்டு. இதை ஸ்தல விருட்சம் என்பர். இவ்வாறு மாமரம், புன்னைமரம், அரச மரம், கடம்ப மரம் முதலிய பலவகை மரங்கள் ஏற்றுக்கொள்ளப் பட்டிருக்கின்றன.

சில கோயில்களில் பழமையான புனித மரங்களின் பழுதுபட்ட கிளைகளும், பட்டுப்போன வாதுகளும் அடிப்பகுதிகளும், பேணிப் பாதுகாக்கப் பட்டு வருகின்றன. மயிலாப்பூர் திருவள்ளுவர் கோயிலில் இருந்த மிகப் பெரிய இலுப்பை மரம் பட்டுப்போய்விட்டது. செப்புத் தகடு போட்டு அதைப் போர்த்தியும் போற்றியும் வைத்திருக்கின்றனர். இவ்வாறே ஏனைய பல கோயில்களில் பழமையான மரங்களின் எஞ்சிய பகுதிகளுக்கு வெள்ளிக்கவசமோ பிற உலோகங்களாலான தகடுகளோ போடப்பெற்றுள்ளன.

தென்னையை, தென்னம்பிள்ளை என்று சொல்லுவதும் அதை, 'குழந்தை' போலப் பாசத்துடன் வளர்ப்பதும் மரபு. தென்னம் பிள்ளையை வளர விடாது வெட்டுவது, தான் பெற்ற குழந்தையைக் கொன்றுவிடுவதற்கு ஒப்பானதாகக் கருதப்படுகிறது.

**உயிரின வழிபாடு**

**பசு :** உயிரினங்களில், பெரிதும் வழிபடப்பெறுவது பசு. வெள்ளிக் கிழமைகளில் பசுவைக் குளிப்பாட்டி, அதன் நெற்றி, முதுகு, வால் எல்லாவற்றுக்கும் குங்குமம் இடுவர். பசு கன்று போடப்போகும் போது, திருமணமான பெண்களும் திருமண வயதை அடைந்த பெண்களும் மிக்க மரியாதையுடன் பசுவை மும்முறை வலம் வருவர். இதனால் குழந்தைச் செல்வம் என்ற பேறு பெறலாம் என்ற நம்பிக்கை மக்களிடம் நிலவுகிறது. பசு, தெய்வத் தன்மை உடைய உயிரினமாகக் கருதப்படுகிறது.

**நாகம் :** நாக வழிபாடு உண்டு. நாகத்தைக் கொன்றால், கொன்றவனுக்குப் பல தீமைகள் நேரும் என்பர். தன் வம்புக்கு வராதவர்களை நாகம் தீண்டுவதில்லை, என்பது மக்களுடைய நம்பிக்கை.

அரச மரங்களுக்கு அருகே நாகம் போன்ற கற்கள் பிரதிஷ்டை செய்யப்படுவதை முன்னரே குறிப்பிட்டோம். பாம்புப் புற்றுக்களில் பால் ஊற்றி, முட்டைகளையும் உடைப்பார்கள். இந்தக் காணிக்கைகளால் மகப்பேறு விரைவாக நிகழும், கருச்சிதைவு ஏற்படாது, குறைமாதப் பிரசவத்தைத் தடுக்கலாம் என்பன மக்களின் நம்பிக்கைகள்.

அரச மரத்துடன் வேம்பு அல்லது நெல்லி மரம் இணைந்திருந் தால் அவற்றை வழிபடும் பெண்கள் மலட்டுத் தன்மையை இழந்து விடுவார்கள் என்றும், அவற்றைச் சுற்றி வருவதால் உடல்நலம் ஏற்படுவதாயும், மருத்துவர்கள் கூறுகிறார்கள். நாகப்பட்டினம், நாகர்கோயில், நாகமலை என்பன நாகத்தின் பெயரால் ஏற்பட்ட ஊர்கள்.

கருவுற்றிருக்கும் பெண் அக்காலத்தில் நாகத்தைக் கண்டால், அவள் பெற்றெடுக்கும் குழந்தைக்கு நாகத்தின் பெயர் இடப்படும். சான்று: நாகசாமி, நாகராஜன், நாகப்பன், நாகரத்தினம், நாகலிங்கம், நாகநாதன், நாகம்மாள், நாகலெட்சுமி.

நாகப்புற்று உள்ள இடங்களில் பெண்கள் பால் ஊற்றி, பழங்கள், பூக்கள் முதலியன வைத்து, சூடம் ஏற்றி இன்ன பிற இந்துமதச் சம்பிரதாயப்படி சடங்குகள் செய்து வழிபடுவார்கள். அப்போது அவர்கள் பாடும் பாடல் இது:

புற்றுப் புற்று நாகரே
பூமி இடம் கொண்டவரே
மணிப் பிரம்பு போல
வால் அழகு நாகரே
சிறு சுளகு போல
பட மெடுக்கும் நாகரே
குண்டு முத்துப் போல
கண்ணழகு நாகரே
பச்சரிசி போல
பல்லழகு நாகரே
பள்ளர் மகன் பள்ளன்
தேவேந்திர குடும்பன்
கொட்டி மண்வெட்டி எடுத்து
குளத்தருகே போனான்
இருபுறமும் பாதம் ஒடுக்கி
வழி விடுவாய் நாகரே

**காளைமாடு**

தமிழர்களின் தலையாய தொழில் வேளாண்மை. அவர்களுடைய வாழ்வும் வளமும் வேளாண்மையைப் பொறுத்தன. எனவே அவர்கள், காளைமாட்டை 'செல்வத்தின் சின்ன'மாக நினைக்கிறார்கள்.

ஏரில் பூட்டவும் வண்டி ஓட்டவும் உதவுவது காளைமாடு. அதன் சாணம், வயலுக்கு வலுவான உரமாக உதவுகிறது. புராணங்கள், காளைமாட்டை சிவபெருமானின் ரிஷப வாகனமாக வருணித்திருக்கின்றன. எனவே உழவர்கள், கோயில்களுக்குக் காளைமாட்டை அன்பளிப்பாக வழங்குகிறார்கள். இவ்வாறு விடப்பட்ட கோயில் மாடுகள் கேள்வி கேட்பார் இல்லாமல் எங்கும் சுற்றித்திரியவும் எதையும் சாப்பிடவும் உரிமை பெற்றுள்ளன. முன்பு, இவை சினைபோடவும் பயன்படுத்தப்பட்டன. ஜல்லிக்கட்டு எனப்படும் மஞ்சி விரட்டுக்களில் கோயில் மாடுகளுக்குப் பாக்குவைத்து அழைத்து, அவற்றுக்குச் சிறப்பாக மரியாதை செய்வது வழக்கம்; இந்தப் பந்தயங்களில் பிடிகாரர்கள் கோயில்மாட்டைப் பிடிப்பது கிடையாது.

### எருமை

நீலகிரியிலுள்ள 'டோடா' இனத்தவர் (தோதவர்) எருமையை வழிபடுகின்றனர். எருமையை வழிபட்டால் அடுத்த உலகில் வசதியாக வாழ வழிபிறக்கும் என்பது அவர்களுடைய நம்பிக்கை. தமிழ் இலக்கியங்களில், நீர்வளம் நிறைந்த மருதநிலத்துக்கு உரிய சிறப்பான உயிரினமாகவும், வளத்தின் எடுத்துக்காட்டாகவும், எருமை பாராட்டப் பட்டிருக்கிறது.

### யானை

யானை, உருவத்தால் மிகப்பெரிது. அது அரசர்களுடன் வைத்து எண்ணத்தக்கது. விநாயகப்பெருமானே யானைமுகத்தான். இக் காரணங்களால், கோயில் விழாவில் யானைக்குத் தனி இடம் உண்டு. யானையை வைத்துத் தீனிபோடும் செலவும் அதைப் பாதுகாக்கும் பொறுப்பும் இருந்துங்கூட, கோயிலுக்கு யாராவது யானையை நன்கொடை கொடுத்தால் மறுக்காமல் ஏற்றுக்கொள்ளும் பழக்கம் கோயில்களில் நிலவி வருகிறது. யானைகள் கோயில் திருவிழாக்களில் ஊர்வலத்தின் முன்னோடியாகப் பீடு நடையுடன்செல்லுகின்றன. நாள்தோறும் அபிஷேகத் தண்ணீர் மொண்டுவர, சில கோயில்களில் யானைகள் தெப்பக்குளத்துக்கோ ஆற்றங்கரைக்கோ செல்லுவதை அதிகாலையில் காணலாம். இவ்வாறு யானை சொல்லும்போதெல்லாம், மக்கள் யானையை வழிபடுவதும் அதன் தும்பிக்கையில் சிறு நாணயங்களை (காசுகளை) வைப்பதும் மரபு.

**காகம்**

வைதீகமாக உள்ளவர்கள் அல்லது ஆசாரங்களைக் கடைப்பிடிப் பவர்கள் தாங்கள் சாப்பிடுவதற்கு முன் காகத்துக்கு ஒரு வாய்ச் சோறு படைப்பார்கள். ஏதாவது ஒரு மேடைமீது சோற்றைவைத்து நெடுநேரம் கா, கா என்று உரத்த குரலில் அழைப்பவர்களும் உண்டு. காகத்துக்குச் சோறு இடுவது, இறந்துபோன ஆன்மாக்களுக்கு மகிழ்ச்சிதரும், என்பர். காகம் சனி பகவானுடைய வாகனமாக இருப்பதால் குறிப்பாக, சனிக்கிழமைகளில் காகங்களுக்குச் சோறு படைக்கும் பழக்கம் பரவியிருக்கிறது.

**கருடன்**

கருடன், விஷ்ணுவின் வாகனம். எந்த இடத்தையாவது கருடன் வட்டமிட்டால் அந்த இடம் புனிதமாகிவிடுகிறது. சில சமயம் கும்பாபிஷேகம் நடைபெறும்போது கருடன் கோபுரத்தை வட்ட மிடுவது உண்டு. அண்ணுமலைப் பல்கலைக்கழகம் கண்ட பெரு வள்ளல் ராஜா சர் அண்ணுமலைச் செட்டியார் முதல் தடவையாக இன்றைய அண்ணுமலைநகரமான திருவேட்களத்திற்குச் சென்ற போது, அந்த இடத்தைக் கருடன் வட்டமிட்டதாகச் சொல்லு வார்கள்.

## உள்ளூர்த் தெய்வங்கள்

பெரும்பாலும் மக்கள் தெய்வபக்தி உள்ளவர்களாகவும் கடவு ளுக்குப் பயந்தவர்களாகவும் உள்ளனர். ஆரியக் கடவுளர் தவிர, வேறு பல சிறு தெய்வங்கள், அம்மன்கள் ஆகியவற்றுக்கும் அவர்கள் அஞ்சுகின்றனர். அவற்றுக்கும் பயபக்தியுடன் வழிபாடு செய் கின்றனர்.

**அய்யனுர்**

அய்யனுர் என்பது கிராம தேவதை. திருட்டு, தொத்துநோய், பேய், பூதங்கள், புயற்காற்று, வெள்ளம் முதலிய இயற்கையின் சீற்றங்களிலிருந்து காப்பது கிராம தேவதையே என்றும், குழந்தை இல்லாதவருக்குக் குழந்தைப்பேறு அந்தத் தெய்வத்தின் அருளால் கிட்டும் என்றும், மக்கள் நம்புகிருர்கள். கிராம தேவதை பற்றிய

மற்ற நம்பிக்கைகளாவன: தீராத நோய்களிலிருந்து அது விடுவிக்கும். கிராமம் முழுவதற்கும் செல்வச் செழிப்பினை வழங்கும்.

ஒவ்வொரு கிராமத்திலும் அய்யனாருக்கு ஒரு கோயில் உண்டு. பண்படுத்தப்படாத கரடுமுரடான கல் உருவமாகவோ, ஒழுங்கமைதி இல்லாத களிமண் திருவுருவமாகவோ அந்தத் தெய்வம் வடிக்கப் பட்டிருக்கும். பல ஏரிகள், கண்மாய்கள் ஆகியவற்றின் கரையில் அந்தந்த நீர்நிலைகளின் பெயரைத்தாங்கிய அய்யனார் திருவுருவங்கள் உண்டு. அய்யனாருடைய அருளைப்பெற, சிறப்புக் கொடுத்தல், தீ மிதித்தல், சந்தனக் குடம் முதலிய விழாக்களை எடுப்பார்கள்.

ஏதாவது ஒரு பொருள் காணாமற்போனால், சிறு காசுகளை முடிந்து வைத்து, அந்தப்பொருள் மீண்டதும் முடிச்சிலுள்ள காசுகளை அய்யனாருடைய உண்டியல் பெட்டியில் போடுவது மரபு. நீண்ட நாளாக உள்ள வழக்குகள் அய்யனார் முன்னிலையில் தீர்க்கப் படுகின்றன. குற்றவாளிகளையும் பொய் சொல்லுபவர்களையும் அய்யனார் தண்டிப்பார் என்று மக்கள் அஞ்சுகின்றனர்.

கண் முதலிய உடல் உறுப்புக்களை வெள்ளியில் செய்து அய்யனார் கோயிலுக்குக் காணிக்கை கொடுப்பது மரபு. அய்யனார் கோயில் முற்றத்தில் புரவி (மண் குதிரை) செய்து வைப்பதும் ஒருவகைப் பிரார்த்தனை முறை. பழங்காலப் போர்களில் வெற்றிபெற, குதிரைப் படைகளே உதவின. ஆகையால் குதிரைகளை வழிபடும் பழக்கம் பரவியிருக்கலாம். குதிரைப் படைத் தளபதியின் பிரதிநிதியாக அய்யனார் கருதப்படுகிறார்.

**சுடலைமாட சுவாமி**

சுடலைமாட சுவாமி மற்றொரு முக்கியமான உள்ளூர்த் தெய்வம். இவருடைய கோயில், நெல் வயல்களினூடே உயர்ந்த தளத்தில் கட்டப்பட்டிருக்கும். கோனார், மறவர், சாம்பவர் போன்ற சில சாதியினர் சுடலைமாடனை வழிபடுகின்றனர். திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் புதுக்குளம் கிராமத்தில் உள்ள சுடலைமாடன் கோயில் குறிப்பிடத்தக்கது. சுற்றிலும் செங்கற்சுவர்கள் அமைந்த இக் கோயில், பத்து ஆண் கடவுளர் உருவங்களும் பதினொரு பெண் கடவுளர் உருவங்களும் உடையது. முக்கியமான சன்னிதி, சுடலை மாடன் அல்லது சாத்தனுக்கு உரியது. நான்கு பக்கங்களிலும் சாய்வான முறையில் அமைந்து, கோபுரம்போல இரண்டு மீட்டர் உயரத்திற்கு இந்தக் கோயில் இருக்கும். திருவிழாக்களின்போது வெள்ளாடு, செம்மறி ஆடு, கோழி முதலியன பலி கொடுக்கப்

படுகின்றன. திருநெல்வேலி நகரின் முக்கிய வீதி ஒன்று, சுடலை மாடன் கோயிலின் பெயரைத்தாங்கியுளது.

திருநெல்வேலி மாவட்டத்தில் மூலைக்கரைப்பட்டியிலுள்ள பரமசிவசாமி கோயில் பிரபலமானது. இவ்வூரில் ஒவ்வொரு வீட்டிலும் இத்தெய்வத்தின் பெயரை ஒரு பையனுக்காவது இடுவர்.

கடலூர் துறைமுகப் பகுதிக்கு அருகேயுள்ள பச்சையம்மன் கோயில், கிராமச் சூழலும் நவநாகரிகமும் இணைந்தது. கிராம தேவதையான அய்யனருக்கும் காளிக்கும் சன்னிதிகள் உடையது. கோயிலின் தலைமைத் தெய்வமான பார்வதி, தவக்கோலத்தில் காதல் அம்மன் முதலிய தோழியர் புடைசூழ, வீற்றிருக்கிறார். முருகக் கடவுள் தமிழ்நாட்டில் மணந்துகொண்ட குறத்தியின் பெயரே காதல் அம்மன்.

நல்ல மழையும் குழந்தைச் செல்வமும் அருளும் தெய்வம், செல்லியம்மன்.

மதுரை மாநகரில் வக்கீல் புதுத்தெருவுக்கு அருகேயுள்ள செல்லத்தம்மன் கோயிலில் ஆண்டுதோறும் ஒரு குறிப்பிட்ட நாளில் ஏராளமான காணிக்கைகள் கொடுக்கப்படுகின்றன. கருவுற்ற கறுப்பு நிறச் செம்மறி ஆடும் அதனுடைய மூன்று வயதுக் குட்டியும் கூரிய கத்தியால் குத்தப்பட்டு கோயிலைச் சுற்றி வலமாகக் கொண்டு வரப் பெற்றபின் கொல்லப்படுகின்றன. பூசாரி, சில சடங்குகளைச் செய்து, அரிசியையும் காய்கறிகளையும் உயரத்தில் வீசுகிறார். வானோர்கள் அவற்றை உண்பதாக ஐதீகம். கருவுற்ற பெண்களும் கன்னிப் பெண்களும் புதிதாகத் திருமணமானவர்களும் கோயிலுக்குள் அன்று செல்லக்கூடாது. இதைப்பற்றி, முறைப்படி முன்னதாக எச்சரிக்கை செய்யப்படுகிறது.

கோயம்புத்தூர், சேலம் மாவட்டங்களில் ஹரிஜனங்களின் குடியிருப்புக்களில் வீரமாத்தி கோயில் காணப்படுகிறது. இவற்றை, பூசை அறைகள் அல்லது சிறு கோயில்கள் என்பதே பொருந்தும். கணவன் இறந்ததும் தங்களுடைய உயிரையும் முடித்துக்கொள்ளும் பெண்களின் நினைவாக, இக்கோயில்கள் எழுப்பப்பட்டுள்ளன. வீரமாத்தி என்பது வீரமும் கற்பும் நிறைந்தவளான வீரமாபத்தினி என்ற சொற்றொடரின் மரூஉ.

### அங்காள ஈஸ்வரி

அங்காள ஈஸ்வரி அம்மன் அல்லது அங்காள பரமேஸ்வரி பய பக்தியுடன் வழிபடப்படும் ஒரு தெய்வம். அன்றாட பூசையை

சைவ ஓதுவார் ஒருவர் செய்கிருர். இத் தெய்வத்திற்கு உரிய திருவிழா மாசி படுக்கை அல்லது மகாசிவராத்திரி. அப்போது மக்கள் இரவு முழுவதும் கண்விழித்திருந்து இந்தத் தெய்வத்துக்கு நடைபெறும் அபிஷேகம் முதலிவற்றைக் கண்டு வழிபடுவர். அங்காள பரமேசுவரிக்குச் சென்னையில் சைதாப்பேட்டைப் பகுதியிலும் இராமநாதபுர மாவட்டத்தில் திருவாடானைக்கு அருகே மணிகண்டி என்னும் ஊரிலும் இன்னும் ஏராளமான இடங்களிலும் கோயில்கள் உள்ளன.

பேய் முதலியவற்ருல் ஆட்கொள்ளப்பட்டவர்களும் ஒரே சமயத்தில் பல செயல்களைச் செய்யவல்ல அஷ்டாவதானி, சதாவதானி ஆகியோர்களும் வழிபடப்படுகின்றனர். தமிழ் அறிஞர்கள் உருவாக்கியுள்ள சைவசித்தாந்த சாத்திரங்கள் சிவபெருமானை மனிதனுகவும் ஆசிரியனுகவும் காட்டுகின்றன.

**வெயிலுகந்த அம்மன்**

இந்த அம்மன் ஒளியின் இறைவி. வெயிலுகந்த அம்மன் கோயில்கள் விருதுநகரிலும் திருப்பரங்குன்றத்திலும் உள்ளன. மழையை நிறுத்தி, நீர் கொண்டுவிட்டதால் அழுகிப் போய்விடக் கூடிய பயிர்களைக் காக்க, சூரிய வெப்பம் அவற்றின்மீது படுவதற்கு வழி செய்யும்படி இந்த அம்மனை வேண்டுவது வழக்கம். மழை பெய்யவேண்டுமென்று பிரார்த்திப்பதற்கு உரியது மற்ருெரு தேவதை. அதன் பெயர் மாரியம்மன்.

**மாரியம்மன்**

உடல் நலம் தரும் இறைவி மாரியம்மன். அம்மை, காலரா, போன்ற தொத்து நோய்களிலிருந்து மக்களைக் காப்பாற்றுபவள் இவளே. கீழ்க்கண்ட ஊர்களிலுள்ள மாரியம்மன் கோயில்கள் புகழ்பெற்றவை: சமயபுரம் (திருச்சி மாவட்டம்), கொன்னையூர் அல்லது கொப்பனுபட்டி (புதுக்கோட்டை மாவட்டம்), கண்ணுத்தாள் கோயில், நாட்டரசன்கோட்டை (இராமநாதபுர மாவட்டம்), பெரியபாளையம் (செங்கற்பட்டு மாவட்டம்), உப்பிலிய பாளையம், பொள்ளாச்சி (இரண்டும் கோயம்புத்தூர் மாவட்டம்), இவற்றில் சில, சிலப்பதிகாரக் கதையின் தலைவியான கண்ணகியுடன் தொடர்புடையன. கேப்பையை வடித்து மாரியம்மனுக்குப் படைப்பது மரபு. கண்பார்வையைக் கெடுக்கவும் மீண்டும் கண்பார்வையைக் கொடுக்கவும் வல்லவள் மாரியம்மன். கண் நோயாளிகள் மாரியம்

மனுக்கு வெள்ளியால் கண் செய்து வழங்குவர். அவள் ஆயிரம் கண்ணுடையாள் என்று போற்றப்படுகிருள். ஊரில் அம்மை பரவி விட்டால், மாரியம்மனின் அருளை வேண்டுவர். உடனே மாரியம்ம னுக்குப் பாலும் இளநீரும் ஊதுபத்தி முதலியனவும் வெள்ளியில் செய்த சிறு பொருள்களும் ஆடுமாடுகளும் பணமும் வழங்குமாறு பூசாரி கட்டளையிடுவான். அவனுடைய வாக்கை அம்பிகையின் வாக்காகவே ஏற்று, எல்லாச் சடங்குகளும் செய்து, குறைவைக்காமல் கேட்ட காணிக்கைகளைச் செலுத்துவார்கள்.

பெரிய அம்மை அல்லது சின்ன அம்மை, முக்குளிப்பான், சிச் சிலுப்பை முதலியவற்றுக்கு வைத்தியம் செய்வது மரபு அல்லாதது மட்டுமன்று, மரபுக்கு முற்றிலும் முரண்பட்டதும் ஆகும். இந்த நோய்கள் மாரியம்மன் வருகை, எனவே இவற்றைக் காலம் என்னும் மருந்துதான் குணப்படுத்தும். அதுவரை, மாரியம்மனின் புகழ்பாடி, அவளுடைய அருளைப் பெறவேண்டும். யாராவது பெரிய அம்மை யால் இறந்துவிட்டால், இறந்துவிட்டதாகத் தெரிவிக்கும் வழக்கம் இல்லை. அம்மை பார்த்துக் குளிர்ந்துவிட்டது என்று சொல்லுவது தான் மரபு.

தீ மிதித்தல் என்பது மாரியம்மன் கோயில்களில் பெரிய அளவில் நிகழும். இதை, மலர்களின் மீது நடப்பது என்ற பொருளில், பூக்குளித் தல் என்றும் சொல்லுவர். உடல் நிறையத் திருநீறு பூசிய ஆடவர்கள், கக்கும் நெருப்பின்மீது மூன்று நான்கு மீட்டர் தூரத்தைப் பல தடவை கடந்து செல்லுவார்கள். அவர்களுடைய உறுதிப்பாட்டால் நெருப்பின் சூடு அவர்களைத் தாக்குவதில்லை.

பெண்கள் தீக்குளிப்பது கிடையாது. அதற்குப்பதிலாக, அவர்கள் தங்கள் தலையை சேலைமுனையால் (முன்தானையால்) போர்த்தி, அதன்மீது ஒரு கரண்டி அளவு தணல் அல்லது கொதிசாம்பலைத் தாங்கிக்கொள்வர். அவர்கள் அந்தச் சூட்டின் கடுமையால் அல்லற்படுவதும் இல்லை, சேலைத்துணி தீப்பற்றிக் கொள்ளுவதும் கிடையாது.

பெண்டிர் தங்கள் தலைமீதும் பெண் குழந்தைகள் தங்கள் உள்ளங் கைகளிலும் அக்கினிச் சட்டியை ஏந்திச் செல்லுவது மாரியம்மன் கோயில்களில் நிகழும் மற்றெரு பிரார்த்தனைவகை. இத்திருவிழா வுக்கு 21 நாட்களுக்கு முன்னிருந்து, பிரார்த்தனைக்காரர்கள் பல விரதங்களை மேற்கொள்ளவேண்டும். அவையாவன—ஒரு வேளை தான் சாப்பிடவேண்டும், தரையில்தான் படுக்கவேண்டும். சிற்றின்பம் அனுபவிக்கலாகாது. பிறகு, அவர்களுக்கு ஆன்மீக

உணர்ச்சி ஏற்பட்டால், அக்கினிக்குடம் அல்லது அக்கினிச் சட்டி தூக்கிச் செல்லவேண்டும். இந்தத் திருவிழா, கடுமையான கோடை காலத்தில் அக்கினி நட்சத்திரத்தில்வரும். இத்திருவிழாவுக்கு, விருதுநகர் புகழ்பெற்றது.

அக்கினிநட்சத்திரம் என்பது சித்திரை மாதம் அவிட்ட நட்சத்திரத்திலிருந்து விசாக நட்சத்திரம் வரை 21 நாட்களைக் குறிக்கும். இக்காலப் பகுதியே மிகவும் வெப்பமானது.

மாரியம்மனை வழிபடும் மற்றொருமுறை, மங்கல வாத்தியங்கள் ஒலிக்க, நெடுந்தூரத்துக்குப் பூத்தட்டு அல்லது பூக்கூடை தூக்கிச் செல்லுவது. கூட்டம் கூட்டமாகப் பலர் சேர்ந்து செல்லுவார்கள்.

கோயில் திருவிழா தொடங்கிவிட்டதை அறிவிக்க, கொடி ஏற்றப் படும். அன்று முளைப்பாரி கொட்டுதல் என்று ஒரு நிகழ்ச்சி உண்டு. கிராமத்திலுள்ள ஒவ்வொரு குடும்பத்தாரும் குறிப்பிட்ட ஓரிடத்தில் ஒரு குடத்தில் நெல், தானியங்கள் பயறு வகைகள் ஆகியவற்றை விதைப்பார்கள். எட்டாம் நாள் அந்தக் குடங்களைக் கோயிலுக்குக் கொண்டு வருவார்கள். அடுத்த மூன்று நாட்களும் பெண்கள்பலர் சேர்ந்து மாரியம்மன் புகழைக் கும்மியடித்துப் பாடுவார்கள். பிறகு வணக்க ஒடுக்கமாய்ப் பானைகளை வலம் வருவர். திருவிழாவின் இறுதியில், அருகேயுள்ள குளம் அல்லது ஆற்றில் பானைகளை மூழ்கடித்து விடுவர்.

பச்சரிசியுடன் வெல்லத்தைக் கலந்து மாவிளக்கு ஏற்றி, கோயில் வாயிலில் அதை எரிய வைப்பதில் பெண்கள் மகிழ்ச்சி அடைகின்றனர். இறுதியாக, கடவுளின் பிரசாதமாகக் கருதி, இந்த மாவிளக்கை உண்பர்.

காலரா, அம்மை, முதலிய நோய்களைத் தடுக்கவும், அந்த நோய்வாய்ப்பட்டவர்கள் உடல்நலம் பெற்றதற்காக மாரியம்மனுக்கு நன்றி கூறவும், திருவிழா நாட்களில் சிலர் தங்கள் உடலில் கரும் புள்ளி செம்புள்ளி குத்திக்கொள்ளுகின்றனர்.

தொத்து நோய்கள் பரவினால், கோவை மாவட்டத்துப் பெண்கள் இளநீரும் கருப்புக்கட்டியும் வைத்து உப்பிலியபாளையம் மாரியம்மனுக்குப் படைப்பார்கள்,

### கடவுளரின் உணவுச் சுவை

ஒவ்வொரு கடவுளுக்கும் விருப்பமான குறிப்பிட்ட உணவு வகைகள் உண்டு என்பது மக்களுடைய நம்பிக்கை. தமிழ்நாட்டின் பெரிய கோயில்கள் ஒவ்வொன்றும் ஓர் உணவுக்குப் புகழ்பெற்றவை.

சான்று: பஞ்சாமிர்தத்துக்குப் பழநி, பிட்டுக்குத் திருச்செந்தூர், அர்த்தசாமப்பூசையில் வழங்கும் பாலுக்கு ஸ்ரீரங்கம், திருக்கண் அமுதுக்குத் திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோயில், வங்கார தோசைக்கு ஆழ்வார் திருநகரி (வங்கார தோசை என்பது அரிசி, பயறு வகைகள், தேங்காய் முதலியன சேர்த்தது. தனித்த ஒரு நளபாக முறைப்படி படைக்கப்படுவது. இது பொன் நிறமாக இருக்கும்.) உப்பு இல்லாத அரிசிப் பொங்கலுக்கு உப்பிலியப்பன் கோயில், காஞ்சிபுரம் இட்டிலிக்குக் காஞ்சிபுரம் அருள்மிகு வரத ராஜப் பெருமாள் கோயில், திருவாதிரைக் களிக்குத் தில்லை நடராசர் கோயில்.

### நம்பிக்கைகளும் சகுனங்களும் சாத்திரங்களும்

பிறப்பு முதல் இறப்புவரை மனிதனின் ஒவ்வொரு நாள் வாழ்விலும் ஒவ்வொரு சிறு செயலிலும்கூட, எத்தனையோ நம்பிக்கைகள் சகுனங்கள் சாத்திரங்கள் மனிதனை ஆட்டிப் படைக்கின்றன. மெத்தப் படித்த மேதாவிகளும் பெருஞ் செல்வர்களும் அதிகாரத்தின் உச்சியில் உட்கார்ந்திருப்பவர்களும் சில சமயம் இவற்றை அலட்சியப்படுத்துவார்கள் ; பிறகு அடுத்தடுத்து அவர்களுக்கு ஏதாவது தொல்லைகள் ஏற்படும். அவற்றுக்கு அறிவின் அடிப்படையில் ஆராய்ந்து காரணம் காட்ட முடியாது. கடைசியாக, அவர்களும் பாமரர்கள் போல இந்த நம்பிக்கைகளுக்கும் சகுனங்களுக்கும் சாத்திரங்களுக்கும் அடிமை ஆகிவிடுவார்கள். அப்போது அவர்கள் இந்தச் சடங்குகளில் காட்டும் வேகம், பாமரர்களின் ஈடுபாட்டைப்போலப் பன்மடங்காக மிளிரும்.

### குழந்தைகள் பிறப்பது பற்றிய நம்பிக்கைகள்

இவ்வகை நம்பிக்கைகள் ஏராளமாக உள்ளன. குழந்தை நடுப்பகலிலோ நள்ளிரவிலோ பிறக்கக்கூடாது. சித்திரை நட்சத்திரத்தில் குழந்தை பிறப்பதையும் மக்கள் வரவேற்பதில்லை. ஏன் எனில், எமனுடைய பிரதிநிதியும் ஊழியனும் ஆகிய சித்திரகுப்தனின் நட்சத்திரம் சித்திரை என்பர்.

சுவாதி நட்சத்திரத்தில் பிறப்பது ஆண் பிள்ளைக்கும் சரி, பெண் பிள்ளைக்கும் சரி, கெடுதல் என்பர். மூல நட்சத்திரத்தில் ஆண் பிள்ளை பிறப்பது நல்லது. ஆனால் இந்த நட்சத்திரத்தில் ஒரு பெண் குழந்தை பிறந்துவிட்டால், வீடு கண்ணீரும் கம்பலையுமாக இருக்கும். ஆண் மூலம் அரசாளும், பெண்மூலம் நிர்மூலம் என்பது பழமொழி.

ஊர் ஓரமாக நிலம் இருப்பது நல்லது. அடிக்கடி போய்க் கவனித்துக்கொள்ள வசதியாக இருக்கும். அதுபோல உத்தராட நட்சத்திரத்தில் பிறந்த குழந்தையும் நல்லது என்பர். ஊர் ஓரத்தில் ஒரு நிலமும் உத்தராட நட்சத்திரத்தில் பிள்ளையும் போல, என்பது ஆன்றோர் வாக்கு.

பரணியில் பிறப்பவன் தரணி ஆள்வான் என்பது மக்களுடைய நம்பிக்கை. ஆனால், கேட்டை நட்சத்திரத்தில் ஒருவன் பிறந்திருக்கிறான் என்பதைக் கேட்கவும் சகிக்கமாட்டார்கள். சித்திரை நட்சத்திரத்தில் ஒரு பையன் பிறந்தால், அவனுடைய தந்தை பிச்சைக்காரன் ஆகிவிடுவான் என்று பயப்படுவார்கள். ரோகிணியில் குழந்தை பிறந்தால் அது அவனுடைய மாமனுக்கு ஏற்படப் போகும் கெடுதலுக்கு அறிகுறி என்பர். அவிட்டத்தில் பிறந்தவள் தவிட்டுப் பானையைத் தொட்டாலும் தங்கம் இருக்கும் என்பது ஒரு நம்பிக்கை. பூராடம் பெண்களுக்கு நல்லதன்று என்பதை, 'அவளும் அனாதை பிறந்ததும் பூராடத்தில்' என்ற பழமொழியால் உணரலாம்.

பெண் குழந்தைகள் ஒற்றைப்படையாகப் பிறக்கவேண்டும். அதாவது முதல் குழந்தை, மூன்றாவது குழந்தை, ஐந்தாவது குழந்தைகள் பெண்ணாகப் பிறப்பது வரவேற்கத்தக்கது. நான்காவது பெண்ணால் குடும்பத்துக்குக் கேடு விளையும். ஐந்தாவது பெண்ணால் ஐசுவரியம் கிடைக்கும் என்பர். ஐந்தாவது குழந்தையாக ஒரு பையன் பிறந்தால் வீட்டிலுள்ள செல்வம் அனைத்தையும் அவன் அழித்துவிடுவானாம். ஆறாவது பெண்ணால் குடும்பம் செல்வத்தில் திளைக்கலாம், அல்லது வறுமையிலும் வாடக்கூடும். ஏழாவது பெண் பிச்சை எடுக்கப்போனாலும்கூட, அவளுக்கு ஒருவரும் பிச்சை போட மாட்டார்கள். எட்டாவது பெண் எட்டிப் பார்த்த இடமெல்லாம் குட்டிச்சுவர். பத்தாவதாகப் பெண் பிறந்தால், பணம் பஞ்சு போலப் பறந்துவிடும். இந்த நம்பிக்கைகளால், திருமணம் பேசும்போது, பெண் அல்லது பையன் எத்தனாவது குழந்தை என்று துருவித் துருவி விசாரிப்பார்கள். நாட்டுப்புறத்தில், இதை இன்றும் காணலாம்.

இரட்டைக் குழந்தைகள்—இரண்டும் ஆணாகப் பிறந்தால்—குடும்பத்துக்குப் பெருத்த யோகத்தைத் தருவார்கள் என்பர். உடனே வீடு சிரிப்பும் விளையாட்டுமாக இருக்கும். இரண்டும் பெண் குழந்தைகளாகப் பிறப்பதால் கெடுதல் இல்லை. ஆனால்

பையனும் பெண்ணுமாகச் சேர்ந்து இரட்டைக் குழந்தைகளைப் பெற்றெடுப்பது நேரவிருக்கும் கெடுதலுக்கு முன்னோடி என்பர்.

### குழந்தைகளைப் பற்றி

சிறு குழந்தைகளுக்குக் கண்ணாடியைக் காட்டக்கூடாது. அவர்கள் ஊமையாகி விடுவார்களாம்.

குழந்தையைக் கையில் வைத்துக்கொண்டு பல் தேய்க்கக்கூடாது. வளரும் குழந்தை தேய்ந்துவிடுமாம்.

முதல் தடவையாகக் குழந்தையின் பல் விழும்போது, அந்தப் பல்லை—வளத்தின் சின்னமாகிய—பசுவின் சாணத்தில் வைத்து உருண்டையாக உருட்டி அந்த உருண்டையை ஒரு கூரைமீது எறிவர். இவ்வாறு செய்தால் குழந்தையின் பல் வளர்ச்சி வேகப் பட்டு அது விரைந்து பல்போடும் என்பர்.

சிலர் பொறாமைக் குணம் உடையவர்களாக இருப்பார்கள். அவர்களுடைய கண் பட்டதால்தான் குழந்தைக்கு நோய் அல்லது விபத்து நேர்ந்ததாகத் தாய்மார் கருதுவார்கள். அடுத்த தடவை அவன் தங்கள் வீட்டுக்கு வரும்போது, அவன் பின்னாலேயே நிழல் போல ஒருவர் பின்தொடருவார். அவனுடைய கால்பட்ட இடத்தில் ஒரு கைப்பிடி மண்ணை அள்ளி, குழந்தையின் தலையைச் சுற்றி அந்த மண்ணை வலதுபுறமாக மூன்று சுற்றிச்சுற்றி, தீங்கு நேராத வாறு காத்துக்கொள்வர். அந்த மண் உடனே அடுப்பில் போட்டு எரிக்கப்படும். பிறந்த உடனே குழந்தைக்கு மூச்சுத் திணறினால், சூடான ஊசி கொண்டு குழந்தையின் நெற்றியில் சூடு போடு வார்கள்.

முதல் இரண்டு குழந்தைகள் இறந்துவிட்டால், மூன்றாவதாகப் பிறக்கும் குழந்தையைக் காப்பாற்ற, பெற்றோர் பல முயற்சிகளை மேற்கொள்வார்கள். மூக்கின் இடது பாதியில் துவாரம் போட்டு அத்துவாரத்தின் வழியே தங்கக் கம்பி ஒன்றை இணைப்பார்கள். இவ்வாறு கம்பி நுழைக்கப்படுவதால் குழந்தையின் பொலிவும் அழகும் கெட்டுவிடும். பொல்லாதவர்களின் கண்படுவதினின்றும் குழந்தையைக் காப்பாற்ற இது ஒரு சூழ்ச்சி. குழந்தைக்குப் பெயரிடும்போது பணிவாக, தாழ்வான முறையில் பெயர் வைப்பார்கள். சான்று: குப்பன், குப்புசாமி, குப்பம்மாள், பக்கிரி, பிச்சை. பெயர் எப்படி இருந்தாலும் இருக்கட்டும், இறைவன் இட்ட பிச்சையான அக்குழந்தை நீண்ட வாழ்நாளுடன் இருக்கட்டும், என்பதே பெற்றோரின் ஆசை.

### கருவுற்ற பெண்ணைப் பற்றி

கரு உற்பத்தியான பிறகு, ஒரு பெண்ணை (அவள் பிள்ளை பெறும் வரை) போட்டோப் படம் எடுக்கக்கூடாது என்பர். அவள் விரும்பும் உணவு வகைகளையும் ஏனைய பொருள்களையும் மறுப்புக் கூருமல் வாங்கிக் கொடுப்பதும் மரபு. அவளுடைய வேண்டுகோள் களை நிறைவேற்ருவிடில், கருவில் உள்ள குழந்தைக்கு காதில் ஏதாவது குறைபாடு இருக்கும், அல்லது நோய் ஏற்படலாம் என்று சொல்லுவார்கள்.

கருவுற்றிருப்பவள்மீது தேரை விழுந்தால் குழந்தைக்கு ஏதாவது நோய் நொடி உண்டாகக்கூடும். குழந்தை உண்டானது முதல் அது பிறக்கும்வரை, வயிற்றுப்பிள்ளைக்காரி எந்தவிதமான தையல் வேலைகளிலும் ஈடுபடலாகாது. அதாவது அவள் ஊசி நூலைத் தொடக்கூடாது. கருவுற்றபோது அவளைத் தேள் கடித்தால், வயிற்றுக்குள்ளிருக்கும் குழந்தை தேள் கடியிலிருந்து விடுதலை பெற்று விடுகிறது. ஒரு பறவை வீட்டுக்குள் கூடு கட்டினுல், பிள்ளைப்பேறு எளிதாகவும் கவலையில்லாமலும் நிகழும் என்பதற்கு அது அறிகுறி.

### மறுபிறப்புப் பற்றி

முன்பிறப்புப் பற்றியும் அந்தப் பிறப்பில் எதுவாக இருந்தார்கள் என்னென்ன செய்தார்கள் என்பதைப் பற்றியும் சில சோதிடர்கள் விவரம் சொல்லுகிருர்கள். மக்களில் சிலர் இவ்வகைச் சோதிடத்தை விரும்பிக் கேட்கின்றனர். பலி கொடுக்கும் சடங்கின் எஞ்சிய பகுதியாகத்தான் தெய்வங்களுக்கு முன்ஞல் தேங்காயை உடைக் கிருர்கள் என்றும், சிவப்பு நீரையும் மஞ்சளையும் கலந்து ஆரத்தி செய்து அதை எடுப்பது தீவினையைப் போக்குவதற்கு இரத்தம் சிந்துவதற்குப் பதிலாக மேற்கொள்ளப்படும் சடங்கு என்றும் சொல்லுகிருர்கள்.

### பிரயாணத்தைப் பற்றி

கால் (உள்ளங்கால்) அரிப்பது பயணம் ஒன்று ஏற்படும் என்பதற் கான முன்னறிவிப்பு. முக்கியமான அலுவலாகப் புறப்படும்போது கருடன் வட்டமிடுவது நன்மையின் சின்னம். புறப்படும்போது நல்ல வார்த்தை காதில் விழ நேர்ந்தால், எடுத்த காரியம் இனிது நிறைவேறும் என்று மக்கள் நம்புகிருர்கள். நல்ல சொற்களைக் கேட்பது விருச்சி எனப்படும். சான்று :—முக்கியமான ஒரு பணி

யாகப் புறப்படும் வேளையில், 'என் பசு இன்று பாத்திரம் நிறையப் பால் கறந்தது' என்று முன்பின் அறிமுகம் இல்லாதவன் சொல்லிக் கொண்டுபோனால், அது மிகச் சிறந்த சகுனம். அதனால், மேற் கொண்ட செயலின் வெற்றி உறுதி, என்பர்.

பயணமாகப் புறப்பட்டவுடன் மலர்கள், மணமானவள், நிறை குடம், ஆகியவற்றைக் காண்பது நன்று. கருடனைப் பார்ப்பது, நாய் அல்லது அணில் பயணமாய்ப் போகிறவனுடைய வலது புறத்திலிருந்து இடதுபுறமாகச் செல்லுவது, ஆகியவை வெற்றிக்கு அடையாளங்கள். பசு, கிளி, மயில், கோழி, மான், புலி, எருமை ஆகியவை எதிர்ப்படுவதும் நன்மையே. ஆனால் இவை அவனு டைய இடதுபுறத்திலிருந்து வலப்பக்கமாகச் செல்லவேண்டும்.

நல்ல சகுனங்களில் மேலும் சிலவற்றைக் கூறுவோம். குடை, கொடி, சாமரம், கரும்பு, இறைச்சி, பால், தயிர், தேன், காளைமாடு, பசு, யானை, குதிரை, தாசி, பழங்கள் இவை எதிர்ப்பக்கமாக இருந்து பயணமாகச் செல்லுபவனை நோக்கி வரவேண்டும். புறப்படும் வேளையில் கேட்பதற்கு நல்ல சகுனங்கள் என்ற தலைப்பில் சொல்லக் கூடியன: மணி அடிக்கும் ஒலி, பிரங்கிச் சப்தம், கழுதை கனைத்தல், கருடன் கத்துவது, வேதம்—புராணம், தெய்வீகப் பாக்கள், பாசுரங்கள் ஆகியவை ஓதுவது.

கெட்ட சகுனங்கள் :—(1) பாம்பு, பூனை, துறவி, ஒற்றைப் பிராமணன், நாவிதன், கைம்பெண், வாணியன் ஆகியோர் எதிரே வருவது, (2) மங்கலமில்லாத ஒலி கேட்பது, (3) கால் இடறல் அல்லது கீழே விழுவது, (4) கதவு நிலையின் உச்சிபட்டு தலை தட்டப்படுதல், (5) போகாதே என்று எங்கேயோ இருந்து ஒரு குரல் காதில் விழுவது, (6) அளவுகடந்த அல்லது எதிர்பாராத மழை, தூற்றல் நிகழ்தல்—இவை யாவும் கெட்ட சகுனங்கள். இவை எதிர்ப்பட்டால் உடனே வீடு திரும்பி, தண்ணீர் குடித்து, சற்று தங்கி, பிறகு மீண்டும் புறப்படுவது வழக்கம்.

பயணமாகப் புறப்படுபவர்கள் எண்ணெய், அழுக்குத் துணி ஆகியவற்றை எடுத்துச் செல்லக்கூடாது. பயணத்திற்கு இன்னும் எவ்வளவோ தடைகள் உண்டு. மனைவி, வீட்டுக்கு விலக்காக இருக்கும்போது, கணவன் பயணம் புறப்படலாகாது. சூலம் என்ற தடையும் உண்டு. செவ்வாய், புதன் வடக்கே சூலம். இந்தக் கிழமைகளில் வடக்கே புறப்படக் கூடாது. இவ்வாறே வியாழன் தெற்கே சூலம். திங்கள், சனி கிழக்கே சூலம். வெள்ளி, ஞாயிறு மேற்கே சூலம். எல்லாச் சடங்குகளுக்கும் விதிவிலக்கு இருப்பது

போல, சூலத்துக்கும் விலக்கு உண்டு. பரிகாரமாக, இறைவனுக்குத் தயிர் வழங்கிவிட்டு மாலையில் புறப்படலாம். பெரும்பாலான மக்கள் சூலம் பார்த்துத்தான் புறப்படுகிறார்கள். இதனால், வியாழக்கிழமை களில் சென்னையிலிருந்து தெற்கே செல்லும் இரயில்களிலும், புதன், வியாழன் இரு நாட்களிலும் அதிகாலையில் தெற்கே இருந்து சென்னைக்கு வந்துசேரும் இரயில்களிலும், கூட்டம் இருப்பதில்லை.

மங்கலமில்லாத மற்றொரு காலப்பகுதி ராகு காலம் என்பது. இதன் கால அளவு ஒன்றரை மணி நேரம். திங்கட்கிழமைகளில் காலை 7-30 முதல் 9 வரை ராகு காலம். ஞாயிற்றுக்கிழமைகளில் மாலை 4-30 முதல் 6 வரை ராகு காலம். இவ்வாறாக ஒவ்வொரு நாளிலும் குறிப்பிட்ட நேரங்கள் ராகு காலம். இதை மனனம் செய்துகொள்ள எளிதான வாய்பாடுகள் அல்லது சூத்திரங்கள் தமிழிலும் ஆங்கிலத் திலும் உள்ளன. முக்கியமான எந்தச் செயலையும் மக்கள் ராகு காலத்தில் தொடங்குவதில்லை.

மதுரை மாவட்டத்தில் சில மலைச்சாதியார் திங்கட்கிழமைகளில் சூரியோதயத்துக்கு முன்பும், செவ்வாய்க்கிழமைகளில் நடுப் பகலுக்குப் பிறகும், புதன்கிழமைகளில் அந்திமாலைக்குப் பின்னரும், வியாழக்கிழமைகளில் சிற்றுண்டி நேரத்திற்குப் பிறகும், வெள்ளி சனிக்கிழமைகளில் சூரியோதயத்திற்குப் பின்னரும், பயணம் புறப் படுவதில்லை.

### எண்களைப் பற்றி

எண்களைப்பற்றி எத்தனையோ கொள்கைகள் நிலவுகின்றன. ஒன்று என்பதற்குப் பதிலாக நாட்டுப்புற மக்கள் முதல், முதலாவது என்பார்கள். ஒன்றாம் தேதி என்று சொல்லும் மரபு கிடையாது. முதல் தேதி என்றே சொல்லுவார்கள். நெல் அளக்கும்போது ஒவ்வொரு படியையும் குறிக்க ஓர் எண்ணைச் சொன்னாலும், முதல் படி அளந்ததும் லாபம் என்பார்கள், அல்லது உள்ளூர்த் தெய்வத் தின் பெயரைச் சொல்லுவார்கள்.

எந்த முயற்சியிலும் எடுத்த எடுப்பிலேயே வெற்றி கிடைக்கா விட்டால், மூன்றாம் முயற்சியிலேயே வெற்றி கிட்டும் என்று மக்கள் நினைக்கிறார்கள்.

3 என்பது நல்ல இலக்கம் அன்று என்ற ஓர் எண்ணம் நிலவு வதால், மூன்று பேராகச் செல்லுவதைக்கூட மக்கள் தவிர்க்கிறார்கள். சிலர் ஏழு என்று சொல்லாமல் 6ம் 1ம் என்று சொல்லுவார்கள். ஏழு, தேள் என்ற ஓசைகளின் ஒற்றுமையே இதற்குக் காரணம்.

எட்டு என்பதன் ஓசையில் தட்டு(ப்பாடு) என்ற ஒலி தொனிப்பதால் நாட்டுப்புற மக்கள் படி அளக்கும்போது எட்டு என்று மட்டும் சொல்லாமல் எட்டுப்படி என்று சொல்லுவார்கள்.

பொதுவாக, மக்கள் ஒற்றைப்படை எண்களையே விரும்புகிறார்கள். நன்கொடை வழங்கும்போது, முதலில் மொத்தமாக ஒரு தொகையை நினைத்தபிறகு அதனோடு ஒரு சிறு தொகையைக் கூட்டிக்கொண்டு ரூ. 1,001, ரூ. 5,005, ரூ. 5,00,001 என்று அறிவிப்பார்கள்.

கார் வாங்கும்போது, போலீசில் அதற்கு உரிய எண்ணைப் பெறவும், தொலைபேசிக்கு எண்ணைப் பெறவும், தங்கள் ராசி என்று கருதும் எண் கிடைக்கும்வரை மக்கள் பொறுமையாகக் காத்திருக்கிறார்கள்.

### கிழமைகளைப் பற்றி

திருமணச் சடங்குகள் முடிந்துவிட்டாலும், பிறந்த வீட்டிலிருந்து புகுந்த வீட்டிற்கு எந்தப் பெண்ணையும் வெள்ளிக்கிழமை அழைத்துச் செல்லுவதில்லை. அவளுடைய பயணம் மறுநாள்வரை ஒத்திப் போடப்படுகிறது. பெரும்பாலோர், வெள்ளிக்கிழமை கொடுக்க வேண்டிய பணங்களை மறுநாள்தான் கொடுப்பார்கள். அது வறுமையின் அறிகுறி என்பர். பிச்சைக்காரர்களுக்கு மட்டுமே வெள்ளிக்கிழமை பணம் கொடுப்பார்கள். சொத்துக்களை வெள்ளிக் கிழமைகளில் விற்பதும் கிடையாது.

செவ்வாய்க்கிழமையைத் தமிழர்கள் மங்கலநாளாகக் கருதுவதில்லை. செவ்வாயோ வெறுவாயோ என்பர். புதன்கிழமையை மக்கள் பெரிதும் விரும்புகிறார்கள். பொன் கிடைத்தாலும் புதன் கிடைக்காது என்பது ஒரு நம்பிக்கை.

புதிதாக வரும் விருந்தினருக்கு வியாழக்கிழமை உபசாரம் செய்வதில்லை. கள்ள வியாழன் நட்பை முறிக்கும் என்பர். முக்கியமான அலுவலாக ஞாயிற்றுக்கிழமை புறப்படக்கூடாது. ஞாயிற்றுக் கிழமைப் பயணம் நாய் போல் அலைச்சல் என்று சொல்லுவார்கள்.

### மாதங்களைப் பற்றி

ஆனியும் பங்குனியும் புதுமனை புகுவதற்கும், மூத்த (தலைக்) குழந்தையின் திருமணத்துக்கும், கூடாத மாதங்கள். ஆனி அடி வைக்காதே, கூனி குடி புகாதே என்பர். ஆடியும் மார்கழியும் திருமணங்களுக்கு உகந்தவை அல்ல.

### மரணத்தைப் பற்றி

நீண்டநாள் நோயால் அல்லற்படும் வயோதிகர்களுக்கு அமாவாசை ஒரு கண்டமாகக் கருதப்படும். அது கனத்த நாள்; எமன் கூடுதலாக வேலை செய்யும் நாள், என்பர். வாத நோய் பிடித்தவர்கள் முதலில் வாதம் தாக்கியதிலிருந்து சரியாக மூன்று நாள் அல்லது மூன்று மாதம் அல்லது மூன்று ஆண்டுகள் துன்பப் பட்டு இறப்பார்கள் என்பது ஒரு நம்பிக்கை. கோயில் தேர் நகர்ந்து வருவதாகவோ அல்லது வீட்டை உடைத்துக் கொள்ளையடிப்ப தாகவோ கனவுகண்டால், நெருங்கிய உறவினர் ஒருவர் விரைவில் இறந்துவிடுவார், என்பது இன்னொரு நம்பிக்கை. இறந்தவர்களின் உடல்களை அடக்கம் செய்வது அல்லது எரிப்பது முதலிய சடங்கு களைக் குளிகை காலத்தில் செய்வதில்லை. இரவு 11 மணிக்குமேல் காலை 4 மணிவரை, பிணத்தை மயானத்துக்கு எடுத்துச் செல்லுவதும் இல்லை.

### திக்குகளைப் பற்றி

வீட்டிலோ அலுவலகத்திலோ வேலை பார்க்க உதவும் மேசை வடகிழக்கு அல்லது தென்மேற்கு மூலையில் போடப்படும். வேறு மூலைகளில் மேசை இருந்தால், எதிரிகள் ஓயாமல் தொல்லை கொடுப் பார்கள் என்பது ஐதிகம். கிணறுகளையும் இந்தத் திக்குகளில்தான் வெட்டுவது வழக்கம். வடக்கே தலையும் தெற்கே காலும் வைத்துப் படுத்து உறங்குவதும் வழக்கமில்லை. காரணம், இவை மரணத்துக் குரிய கடவுளின் திக்குகள். கட்டிடங்கள், சந்நிதிகள் இருக்கும் திக்குகள் பற்றியும் நம்பிக்கைகள் வழிவழியாக இருந்து வருகின்றன. நடராசர் சந்நிதி தெற்கு நோக்கித்தான் இருக்கும். ஆனுல், நடராசரின் பார்வை அந்தத் தெருவையே அழிக்கவல்லது. ஆகையால் நடராசருக்கு எதிரில் வேறு ஒரு சந்நிதியை வைப்பர். கிணறு அல்லது சுவர் அமைப்பதும் மரபு.

புதிதாக வைத்த வாழைத் தோட்டத்தில் வாழை முதல் தடவை யாக எந்தத் திக்கில் ஈன வேண்டும் என்பது பற்றியும் மரபுகள் உண்டு. வடக்கே ஈனுவது கெடுதல். பிற திக்குகளில் ஈனுவது நலம் பயக்கும்.

### திருமணத்தைப் பற்றி

தஞ்சை மாவட்டத்தில் திருமணஞ்சேரி என்னும் சிற்றூரிலுள்ள கல்யாண சுந்தரரின் விக்கிரகத்துக்கு அபிஷேகம் செய்வித்தால்

விரைவில் திருமணம் கைகூடும் என்பது ஒரு நம்பிக்கை. அந்த இறைவனுக்கு அணிவிக்கப்பட்ட மாலையை மணப்பருவத்திலுள்ள இளைஞன் அணிந்து கொண்டால் ஏழு வாரங்களுக்குள் அவனுக்குத் திருமணம் நடந்துவிடுமாம். இவ்வாறே வேறு சில கோயில்களைப் பற்றியும் சொல்கிறார்கள். மதுராந்தகம் கோதண்டராமர் கோயிலில் அர்ச்சனை செய்தால், உடனே திருமணம் நடந்து விடுமாம்.

எண்ணெய் தேய்த்துக் குளித்துவிட்டு ஒரு திருமண வீட்டுக்குச் செல்லக்கூடாது, என்ற பழக்கம் சில சாதிகளில் உண்டு. இறந்த நிகழ்ச்சி திருமண நிகழ்ச்சி, ஆகிய இரண்டிற்கும் ஒரே நாளில் செல்லுவது மரபுக்கு மாறுபட்டது. இன்றியமையாது அவ்வாறு செல்ல நேர்ந்தால், குளித்துப் புத்தாடை உடுத்தி, இறை வழிபாட்டுக்குப் பிறகு, இன்ப நிகழ்ச்சிக்குச் செல்லுவார்கள்.

தாங்கள் விரும்பும் காதலியை மணப்பதற்காக எண்ணெய் வகைகளுடன் கலந்த சில மந்திரப் பொருள்களை அவளுடைய முகப் பூச்சுப் பெட்டிக்குள் அவளுக்குத் தெரியாமல் வைத்து விடுவார்கள். இப்பொருள் மந்திரம் போல வேலை செய்து, அவளை இவர்பால் ஈர்த்துவிடுமாம்.

### இருட்டில் செய்யத்தகாதன

சூரிய அஸ்தமனத்திற்குப் பிறகு செய்யக்கூடாத பட்டியல் மிக நீண்டது. தலை மயிர் வெட்டக்கூடாது. நகம் வெட்டக் கூடாது. வண்ணானிடம் அழுக்குத் துணிகளைப் போடக்கூடாது. பாம்பு, நாவிதன் போன்ற சொற்களை இருட்டில் சொல்லக்கூடாது. ஊசி, உப்பு, மோர், பொதுவாக வெள்ளை நிறப் பொருள்கள் எதையுமே இரவில் கொடுக்கக்கூடாது. இவ்வாறே அஸ்தமனத்திற்குப் பிறகு நெருப்பு, தீப்பெட்டி முதலியவற்றைக் கொடுப்பதையும் தவிர்க்க வேண்டும்; பக்கத்து வீட்டிலிருந்து எரிந்து கொண்டிருக்கும் விறகுக் கட்டையை வாங்கிக் கொள்வதே நடைமுறை. சில குடும்பத்தார் தங்கள் வீட்டில் நெருப்பு அணைவதேயில்லை என்பர். ஓயாது விருந்து படைக்கும் வசதியும் வாய்ப்பும் அவர்களுக்கு இருப்பதை இவ்வாறு பெருமையுடன் கூறிக்கொள்வர்.

### விடிந்ததும் காணத் தக்கவை

முகம் பார்க்கும் கண்ணாடி, நிறைகுடம், கொடி, விளக்கு, இரண்டு மீன்கள், மஞ்சள்-இவை மங்கலப் பொருள்கள். காலையில் கண் விழித்ததும் இவற்றில் ஒன்றைப்பார்ப்பது நன்று. தாமரை, தங்கம்,

அரசன், விளக்கு, சூரியன், நெருப்பு, கடல், கோயில், கோபுரம், மழை, மேகத்தோடு கூடிய மலை, கன்றுடன் கூடிய பசு, தன்னுடைய வலது கை, மனைவியின் முகம், பைத்தியக்காரன், கருங்குரங்கு, யானை, மிருதங்கம் ஆகியவற்றைக் காண்பதும் நன்மைதரும்.

### கனவுகளைப் பற்றி

அதிகாலையில் காணும் கனவுகள் பலிக்கும். திருமணத்தைப்பற்றிக் கனவு காண்பது நல்லது. ஒவ்வொரு கனவும் அதற்கு நேர் மாறான பலனைத்தரும் என்று கன்னியாகுமரி மாவட்டத்து மக்கள் சொல்கிறார்கள்.

### தொழில், வியாபாரம் பற்றி

காலையில் முதலில் கிடைக்கும் பணத்தைப் பயபக்தியுடன் ஏற்றுக் கொள்வது மரபு. கடைக்காரர்கள் அதைக் கண்ணில் ஒற்றிக் கொண்டு, பிறகு கடவுளை வழிபட்டவாறே அதைப் பணப்பெட்டியில் வைப்பார்கள். அலுவலகத்திலும் கடையிலும் உறங்குவது மரபுக்கு ஒவ்வாதது.

இல்லை என்று சொல்வதைத் தவிர்ப்பது வழக்கம். கடைக்காரனிடம் உப்பு இருக்கிறதா என்று நாம் கேட்க, அவனிடம் அது இல்லாவிட்டால் பருப்பு இருக்கிறது என்று அவன் பதில் சொல்வான். குடும்பப் பெண்கள் தங்களிடம் தீர்ந்துபோன ஒரு பொருளை அடுத்த வீட்டுக்காரி வந்து கேட்டால் என்னிடம் நிறைய இருக்கிறது என்று பதில் சொல்லுவார்கள்.

பலசரக்குக் கடைகளில் கடை திறந்தவுடன் எண்ணெய் விற்க மாட்டார்கள். வேறு ஏதாவது சில பொருள்களை விற்ற பிறகுதான் எண்ணெய் விற்பனையைத் தொடங்குவர்.

### கடவுளர், கோயில்கள் பற்றி

கடவுளர் அருளை எதிர்பார்த்து, மக்கள் கோயில்களுக்கு ஏதாவது செய்வதாக உறுதி எடுத்துக்கொள்கின்றனர். குழந்தைப் பேறு பெற விழைபவர்கள், இறைவா! உன் கருணையால் எனக்குக் குழந்தை பிறந்ததும் குழந்தையின் தலைமுடியைக் காணிக்கையாக முதலில் உனக்குச் செலுத்துகிறேன், என்று வேண்டிக் கொள்கின்றனர். அல்லது அந்தக் கோயிலில் நன்றிக் கடனாகச் சிறு தொட்டில் ஒன்றைத் தொங்கவிடுவார்கள்.

ஒரு குழந்தையின் உடல்நலம் குன்றியிருந்தால், பெற்ளேரும் பாட்டனும், பாட்டியும், குழந்தை நலமடைய வேண்டுமென்று அவரவருக்கு ஈடுபாடுள்ள தெய்வங்களை வேண்டிக் கொள்வர். வெள்ளி அல்லது தங்கத்தில் ஏதாவது ஒரு பொருளைச் செய்து வைப்பதாகவும் உறுதி கூறுகின்றனர். உடலில் எந்த உறுப்பு நோய்வாய்ப்பட்டிருக்கிறதோ அதைப்போலச் செய்து வைப்பதாகப் பிரார்த்திப்பதும் உண்டு.

ஏற்கெனவே நாம் கூறியுள்ளபடி, வயதானவர்கள் கிரிவலம் வருவதும் உண்டு. கோயிலின் வெளிப்புறத்தில் மண் தரையில் பல சுற்றுகள் சுற்றுவர் (புரளுவர்). காலால் நடக்காது, உடல் முழுவதும் மண்ணில் படுமாறு படுத்து, உடலை உருட்டிக் கோயிலை வலம் வருவது வழக்கம். திருவண்ணுமலையில் மலையைச்சுற்றி 13 கி. மீ. தொலைவு வருவதும் பலர் ஏற்கும் நன்றிக் கடன். தமிழர் பலர், திருப்பதிக்குச் சென்று அங்கு மலை மீது இவ்வாறு அங்கப் பிரதட்சணம் செய்வர். சென்னையிலிருந்து திருப்பதிக்குக் கால் நடையாகச் சென்று தேவஸ்தானத்திற்கு வழங்குவதற்காக மிகப் பெரிய குடையைச் சுமந்து செல்பவர்களும், இத்தகைய குடைகளை நன்கொடையாக வழங்குபவர்களும் உள்ளனர்.

புதிய கார் வாங்கியதும் பெரும்பாலோர் முதலில் கோயிலுக்குத் தான் செல்லுவார்கள். புதிய பசு வாங்கினுல் முதல் நாள் கறந்த பாலை, கோயில் அபிஷேகத்திற்கும் முதலில் எடுத்த வெண்ணெய்யி லிருந்து காய்ச்சின நெய்யைக் கோயிலில் நெய் தீபம் போடவும் கொடுத்தனுப்புவார்கள்.

ஏதாவது சிக்கல் ஏற்பட்டு உடனே முடிவு எடுக்க வேண்டிய இக்கட்டு உண்டானுல் நாட்டுப்புற மக்கள் பிரச்சினையை அலசி ஆராயாமல் கோயிலில் பூக்கட்டி வைத்துப் பார்ப்பார்கள். அது கயிற்றினுல் இன்ன திக்கில் அசைந்தால் இவ்வாறு முடிவு எடுப்பது, என்று எண்ணிக்கொள்வர்.

கோயிலில் அர்ச்சனை செய்ய, தேங்காயை அர்ச்சகர் உடைக்கும் போது, அது சரிபாதியாக உடைபட வேண்டும், குறுக்கும் நெடுக்கு மாக உடைவதோ அழுகியிருப்பதோ அர்ச்சனை செய்து கொள்பவர் களுக்குத் தீமை பயக்கும். விநாயகருக்கு ஒரு கோயில் கட்டினுல், பழைய கோயில் ஒன்றிலிருந்து விநாயகர் உருவத்தைத் திருடி வந்து அதை முறைப்படி அமைத்து, கோயில் கட்ட வேண்டும் என்ற நம்பிக்கையும் பரவலாக நிலவி வருகிறது.

இரு குடும்பங்களுள் ஒற்றுமை குறைந்து அவர்களுக்குள் சண்டை சச்சரவுகள் முற்றி விட்டால், மீண்டும் இறைவனுடைய சம்மதம் கேட்டுத்தான் அவர்கள் கூடுவர். இரு குடும்பத்தாரும் பணம் எடுத்து அதை அந்த இறைவனுக்குக் காணிக்கை செலுத்திய பிறகு, இரு சாராரும் சேர்ந்து கோயிலுக்குச் சென்று வழிபட்ட பிறகே இணைப்பு அமுலுக்கு வரும். இறைவன் சம்மதமின்றி, பிரிந்தவர்கள் தாங்களாகவே கூடினால், கூட்டு தற்காலிகமாகப் போய்விடும் என்ற அச்சம் இரு சாராருக்கும் ஏற்படுகிறது.

கோயில் தேர், அச்சுமுறிந்தால் அல்லது தேருக்கு ஏதாவது விபத்து நேர்ந்தால் அந்த வட்டார முழுமைக்கும் கெட்ட காலம் காத்திருப்பதாகக் கவலைப்படுவார்கள். கோயில் கோபுரத்தைவிட உயரமான வீடு கட்டினால், அந்த வீட்டில் வாழ்பவர்கள் இறைவனுடைய கோபத்துக்கு ஆளாவார்கள் என்பது மற்றொரு நம்பிக்கை.

தும்ம நேர்ந்தால் சிவா, ராமா, கிருஷ்ணா என்று சொல்லுவது மரபு. கொட்டாவி விட்டால், பக்கத்தில் இருப்பவர்கள் கொட்டாவி விட்டவரின் வாயருகே தம் கையை நீட்டி இடதுபுறமும் வலதுபுறமுமாகச் சுண்டுவது வழக்கம். தீவினை விளைக்கும் சக்திகளை விரட்டுவதற்காக இந்த முறை கையாளப்படுகிறது.

பூசனிக்காயும் தோட்டத்தில் விளைந்த பிற காய்கறிகளும் முதலில் கோயில் மடைப்பள்ளிக்கு அனுப்பப்படும்.

திருச்சிராப்பள்ளி மாவட்டம் தென்பற நாட்டில், பெண் பார்க்கப் போகும்போது, வழியில் மூங்கில் அல்லது விறகு அல்லது ஏதாவது ஒரு பூச்சியைப் பார்த்தால், அல்லது மானின் ஒலி கேட்டால், பெண் பார்க்கச் செல்லுபவர்கள் மேலும் செல்லாது உடனே அந்த முயற்சியைக் கைவிட்டு, வீடு திரும்ப வேண்டும் என்ற பழக்கம் இன்றும் கடைப்பிடிக்கப்படுகிறது.

**ஏனைய நம்பிக்கைகள்**

வயது வரவர, பெண் குழந்தைகள் வீட்டு வேலைகளைப் பழகிக் கொள்கிறார்கள். வீட்டைச் சுத்தமாக வைத்துக்கொள்ளும் முறையைக் கற்றுக்கொள்ளுகிறார்கள். பாத்திரங்களைத் தேய்க்கத் தெரிந்துகொள்ளுகிறார்கள். வீட்டுத் தரையைப் பெருக்கிச் சுத்தம் செய்யும்போது, குப்பை செத்தை கூளம் எல்லாவற்றையும் சேகரித்து வீட்டுக்கு வெளியே கொட்டிவிட வேண்டுமென்று தாய், தன் மகளுக்கு அறிவுறுத்துகிறாள். அந்த அறிவுரையை மீறி, குப்பையை வீட்டிலேயே ஒரு மூலையில் குவித்து வைத்தால், அவள் ஒரு நல்ல

நாள் பெரிய நாளில் (திருவிழா, திருமணம் முதலிய நாட்களில்) வீட்டுக்கு விலக்காக இருக்க நேர்ந்து மங்கல நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளும் பேற்றை இழப்பாள் என்பதும் ஒரு நம்பிக்கை. குப்பையை மூலையில் வைத்தால், நீயும் மூலையில் ஒதுக்கப்படுவாய் என்பர். வீட்டு மூலைகளில் தூசி சேருவது, கடனுக்கும் கவலைக்கும் அறிகுறி.

உடைந்த கண்ணாடியில் முகம் பார்க்கக்கூடாது. உள்ளங்கை அரித்தால் வருவாய் கிடைக்கும். அக்கினி நட்சத்திரத்தில் மழை பெய்தால் அடுத்த ஆண்டில் வளம் கொழிக்கும். அமாவாசைக்கு நான்காம் நாளில் சந்திரனைப் பார்த்தால் நினைவாற்றல் பாதிக்கப் படும். வருஷப்பிறப்பு அன்று கண்டபடி செலவழிப்பதும், யாருட னாவது சண்டை போடுவதும் கூடாது. இத்தகைய நிகழ்ச்சிகள் அன்று நிகழுமாயின் ஆண்டு முழுவதும் தொடர்ந்து நிகழ்ந்து சொல்லொணாத் தொல்லைகள் உண்டாகும்.

நகத்தைக் கடிப்பது, தண்ணீரை வீணாக்குவது, கால் ஆட்டுவது, வீட்டுக்குள் ஆமை புகுவது ஆகியவை வரப்போகும் வறுமைக்கு அறிகுறி, அல்லது எச்சரிக்கை. கால்களை ஒன்றுக்கொன்று குறுக்காக வைத்துக்கொள்வதும், கைகளை முழங்கால் அருகே கட்டிக் கொண்டிருப்பதும், பிணத்தின் அடையாளங்கள்.

சலவை செய்யாத (கோடித்) துணிகளை மூலையில் மஞ்சள் பொடி தடவிய பிறகே உடுத்த வேண்டும். கேடு நேர்வதைத் தடுப்பதற் காகவே இவ்வாறு செய்வது மரபு. விலை உயர்ந்த கோடிப்புடவை முதலியன, கட்டிய அன்றே கிழிந்தோ சேதப்பட்டோ போனால், மஞ்சள் தடவாததை அதற்குக் காரணமாகக் கொள்ளுவார்கள். புதிதாக வாங்கும் பசு அல்லது குதிரையின் ராசி, அதை வாங்கு பவனின் உடல்நிலை அல்லது தொழிலை நல்ல விதமாகவோ அல்லது கெட்ட விதமாகவோ மாற்றும் ஆற்றலை உடையது.

சூரியன் மறைந்ததும் மாலைப்பொழுதில் விளக்கை (மின்சார விளக்கு உட்பட) எரிய விடும்போது இரு கரம் கூப்பி வழிபடுவது மரபு. இருள் நீங்கி ஒளி தருவதற்காக இறைவனுக்கு இவ்வாறு நன்றி கூறுகின்றனர். இதுபோலவே, அதிகாலையில் சூரிய வழிபாட்டுடன் வாழ்க்கை தொடங்குகிறது.

பதிவு செய்யும் ஆவணங்களில் எழுத்துப் பிழைகள் ஏற்பட்டால், அவற்றை அடிப்பது அல்லது திருத்துவது கிடையாது. அதற்குப் பதிலாக, திருத்தங்களை, தனியே கடைசி வரியில் எழுதுவது மரபு. எழுதியதை அடிப்பதால் துரதிர்ஷ்டம் நேரலாம். ஆகையால்

எழுதியதை அடிக்கக் கூடாது என்றும், ஆவணத்தில் மை கொட்டுவது நல்ல சகுனம் என்றும் சொல்லுவார்கள்.

இடது கையால் எதையும் கொடுப்பதும் வாங்கிக் கொள்வதும் மற்ருெரு சாராரை அவமதிப்பதாகும்.

திருட்டு நடந்துவிட்டால் திருடனைக் கண்டுபிடிக்க, அவனுடைய நிறம் உயரம் முதலியவற்றைத் தெரிந்து கொள்ளவும் அவன் எந்தத் திக்கிலிருந்து வருகிருன் என்பதை ஊகிக்கவும் சில முறைகளை நாட்டுப்புற மக்கள் கையாண்டு வருகிருர்கள். தேவாங்கு என்ற உயிரினத்தின் எலும்புத்தூள்கள், இறந்துபோன ஒரு பெண்ணின் தலைக்கூடு, பச்சைநிறச் சூடம் இம் மூன்றும் சேர்ந்த ஒரு கலவையை வெற்றிலையில் தடவி, திருடனைப்பற்றிய செய்திகளைத் தெரிந்து கொள்ள முயலுகிருர்கள்.

## மந்திரமும் மருந்தும்

### மந்திரம்

தெருச்சந்திகளில் மந்திரவாதிகள் கூட்டம் சேர்த்துப் பல தந்திர வித்தைகளைக் காட்டுகிருர்கள். சில நோய்களையும் உடனே குணப் படுத்துகின்றனர். கயிறு கட்டி, அதில் விளையாட்டுக்காட்டுவது, மந்திரத்தில் மாங்காய் வரவழைப்பது, ஒருவனுடைய தொண்டையை வெட்டிய பிறகும் அவனைப்பேசச் செய்வது, நீண்ட காகிதச்சுருள் களை விழுங்கி எச்சில் துப்பிக்காட்டுவது, வெறுங்கையிலிருந்து பூக்களையும் தேங்காய்களையும் வரவழைப்பது, ஆகிய செயல்களை அவர்கள் காட்டுகிருர்கள். இவை கண்கட்டி வித்தை எனப்படும்.

### மருந்து

ஐரோப்பியர் வருவதற்குப் பல நூற்ருண்டுகளுக்கு முன்பே, தமிழ் நாட்டிலும் இந்தியாவின் ஏனைய பகுதிகளிலும் மருத்துவக்கலை பெருவளர்ச்சி பெற்றிருந்தது. இந்த அறிவு நூல்கள் செய்யுள் வடிவத்தில் ஓலைச்சுவடிகளில் எழுதிவைக்கப்பெற்று, தஞ்சாவூர் சரஸ்வதி மகால் என்னும் ஒப்பற்ற நூல்நிலையத்தில் பேணிவைக்கப் பட்டுள்ளன.

சித்த மருத்துவம் என்னும் மருத்துவமுறை, தமிழ்நாடு பெற்றுள்ள அரிய செல்வங்களில் ஒன்று. சித்தர்கள் எனப்படுவோர் பெரு மக்கள், அட்டமாசித்திகளை அடைந்தவர்கள், தேவகணத்துள் ஒரு சாரார், கடுந்துறவிகள், இறையருள் பெற்றவர்கள், ஞானிகள்.

சித்தர்கள் 18 பேர் என்பது ஒரு கருத்து. திருமூலர், இராமதேவர், கும்பமுனி, இடைக்காடர், தன்வந்திரி, வால்மீகி, கமலமுனி, போகர், மச்சமுனி, கொங்கணர், பதஞ்சலி, நந்திதேவர், போதகுரு, பாம்பாட்டி, சட்டைமுனி, சுந்தரானந்த தேவர், குதம்பைச் சித்தர், கோரக்கர் என்பவர் பதினெண் சித்தர்களாகக் கருதப்படுகிருர்கள்.

சித்தர்கள் பல நூறு பேர். அவர்கள் 18 அறிவுக்கலைகளை வளர்த்தனர். எனவே அவர்கள் பதினெட்டுவகையினர் என்பது அண்மையில் ஏற்றம்பெற்றுவரும் கருத்து. தமிழ் மரபுப்படி, சித்தர்கள் மருத்துவநிபுணர்களாகவும் தத்துவ சாஸ்திரங்களில் வல்லுநராயும், உடற்கூறு, இரசாயனம் முதலிய துறைகளில் நுண்மாண் நுழைபுலம் பெற்றவர்களாகவும், விரிவான சுற்றுப்பயணம் செய்து அனுபவம் பெற்ற அருளாளர்களாகவும், உயர்ந்த சிந்தனையாலும் எளிய வாழ்க்கைமுறையாலும் புகழ்பெற்றவர்களுமாக இருந்தனர். இரசவாதம் செய்வது அதாவது சாதாரண உலோகத்தைப் பொன்னுக மாற்றும் ஆற்றலையும் அவர்கள் பெற்றிருந்தனராம்.

சித்தர்கள் தங்களுக்கென்று பல அறிவுநூல்களைச் சுவடிகளாக எழுதி வைத்திருந்தனராம். அவை அவர்களுக்கு மட்டும் புரியக் கூடியவாறு, ஒரு பரிபாஷையில், குறியீடுகளால், எழுதப்பட்டிருந்தன. வயதானவர்களிடம் இளமை குலுங்கச் செய்வதற்கு அவர்களிடம் 64 வகை அரிதார நஞ்சு கலந்த பொருள்கள் (உள்ளியங்கள்) இருந்தனவாம். அவற்றை உண்டவர்கள், என்றும் பதினறு பிராயத்தினராக வாழ இயலுமாம்.

சித்தர்களால் குணப்படுத்த முடியாத நோய் எதுவும் இல்லை என்று பாமரமக்கள் உறுதியாக நம்புகிருர்கள். இறந்தவர்களை, உயிருள்ளவர்களின் உடலுக்குள் சற்று நேரத்திற்குப் புகச்செய்து சில கருத்துக்கள் அல்லது செய்திகளைத் தெரிவிக்க வைப்பது உட்பட, சித்தர்களுக்கு எண்ணற்ற ஆற்றல்கள் உண்டு என்பது பொதுவான நம்பிக்கை.

சித்தர்கள், முக்கால ஞானிகள், அதாவது நடந்ததும் நடப்பதும் இனி நடக்க இருப்பதும் அவர்களுக்குத் தெரியும். நினைத்தமாத்திரத்தில் சாகவும் வாழவும் அவர்களால் இயலும். அவர்கள் பொது மக்களிடையே திரிவார்கள், ஆனுலும் அவர்களை அடையாளம் கண்டுகொள்ளமுடியாது. சில மூலிகைகளைச் சாப்பிட்டு மயங்கிய அல்லது மெய்மறந்து தூங்கிய நிலையில் இருக்கும் ஆற்றலையும் அவர்கள் பெற்றிருந்தார்கள். கமண ஓடி என்ற பொருளைத் தயாரித்து அதன் மூலமாகக் காற்றில் பறக்கும் சக்தியையும் சித்தர்கள் பெற்றிருந்ததாக நம்பப்படுகிறது.

சேலம் மாவட்டத்தில் கஞ்சமலையில் சித்தர் சிலர் வாழ்ந்ததற்கும் சில உலோகங்களை அவர்கள் தங்கமாக மாற்றியதற்கும் ஆதாரங்கள் உள்ளன. சேலம் எஃகு ஆலை நிறுவப்பட்டுவரும் இடத்திற்கு அருகேயுள்ள ஒரு சிற்றூரின் பெயர் ஏழு மாத்தூர், அதாவது ஏழு பங்கு உள்ள கிராமம். சித்தர்கள் செய்த தங்கத்தில் ஏழு பங்கு தங்கம் இருந்ததாயும், தங்கச்சுரங்கங்களில் வெட்டியெடுக்கப்பட்ட தங்கத்தில் பத்துப்பங்கு தங்கம் இருந்ததாயும், நிபுணர்கள் இரு தங்கத்தையும் உரைத்துப் பார்த்துச் சான்றிதழ் வழங்கியதாக இவ்வூர்க் கோயில் கல்வெட்டுத் தெரிவிக்கிறது.

தெய்வ நம்பிக்கை இல்லாதவர்களைத் தேள் கடிக்கச் செய்யும் ஆற்றல் பெற்ற சித்தர்கள் இன்றும் தமிழ்நாட்டில் உள்ளனர். இவர்கள், வெறுங் கையிலிருந்து திருநீறு, தேங்காய், நாணயம் முதலியவற்றை வரவழைக்கின்றனர். கை விரலிலுள்ள மோதிரம் மாயமாய் மறைந்துபோகச் செய்கின்றனர். மூடப்பட்ட அல்லது கரம் குவித்துச் சேர்க்கப்பட்ட உள்ளங்கைக்குள் மலர்களை வர வழைக்கிறார்கள். குறிப்பிட்டு நாம் சொல்லும் ஆண்டில் வெளியான அமெரிக்க டாலர் நாணயத்தை ஒரு நொடிப் பொழுதில் நம் கண் முன்னே காட்டுகிறார்கள். தங்களுக்குத் தெரியாத மொழிகளில் ஆன்மீக விஷயங்கள் பற்றி உடனே கட்டுரைகளைத் தட்டச்சில் நம் கண் முன்னே வரவழைக்கிறார்கள். நீண்ட நெடுங்காலம் இத்தகைய நிகழ்ச்சிகளை நேரில் பார்த்தவர்கள் இவையெல்லாம் நம்பிக்கையைப் பொருத்தன என்கின்றனர். ‘நம்பினவருக்குக் கல்கண்டு, நம்பாத வருக்குக் கல்குண்டு.’

உப்பளங்களில் வேனிற் காலத்தில் கிடைக்கும் ஒரு பொருளைக் கொண்டு சில சித்தர்கள் மருந்துகளைச் செய்கிறார்கள். ஆனால் பெரும்பாலும் மூலிகைகளையும் உலோகங்களையும் கொண்டே மருந்து கள் செய்வது சித்தர்களின் மருந்து ஆக்கமுறை மூலிகைகள் அவர்க ளுடன் பேசும் என்றும், அவர்களும் மூலிகைகளுடன் பேசுவார்கள் என்றும் சொல்லப்படுகிறது. அவர்கள், உலோகங்களைப் பொடி யாக்கித் தூள் மருந்துகள் செய்கின்றனர். ஆற்றல் மிக்க மாத்திரை கள் அல்லது மருந்துக் கட்டிகளையும் அவற்றைக் கொண்டு செய்கிறார்கள்.

பதினெண் சித்தர்களில் முதல் இருவர் நந்தி தேவரும் அகஸ்திய ரும் ஆவர். இவர்கள் ஒவ்வொரு மூலிகையையும் சோதித்துப் பார்த்து, அவற்றின் சக்தி அல்லது ஆற்றலை, தன்மைகளை, பயன்களை, அறிந்தனர் என்பர். ‘ஆயிரம் வேரைக் கொன்றவன் அரை

வைத்தியன்' என்ற பழமொழி இதனால் ஏற்பட்டது. மூலிகை களால் நோய்களைக் குணப்படுத்த இயலும் என்பது உறுதிப்பட்ட பின்னர், உயர்ந்த மலைகளிலும் மக்கள் எளிதில் செல்ல முடியாத, அதாவது மனிதர் கால் படாத, பிற இடங்களிலும் சித்தர்கள் மூலிகைகளைப் பயிர் செய்தார்கள்.

தமிழ் நாட்டில் பல இடங்களில் மூலிகைகள் நிறைந்து விளங்கு கின்றன. இவற்றில் சில மூலிகைகள் கிழவர்களைக் குமரர்கள் ஆக்க வல்லன. சேலத்துக்கு அருகே இளம்பிள்ளை என்னும் பெயரில் ஒரு சிற்றூர் இருக்கிறது. ஒரு நாள், வயது நிறைந்த ஒரு ஞானியும் வயதான அவருடைய சீடர் ஒருவரும் காட்டில் தங்கியிருந்தனர். சீடனை உணவு சமைக்கச் சொல்லிவிட்டு, ஞானி தியானத்தில் ஆழ்ந்துவிட்டார். கொதித்துக்கொண்டிருந்த அரிசியை ஒரு குச்சி கொண்டு சீடன் கிளறிவிட்டான் உடனே அந்த உணவு கறுப்பு நிறமாக மாறிவிட்டது. அவனுக்கு இது புரியாத புதிராக இருந்தது. ஞானி கோபப்படுவாரே என்ற அச்சமும் அவனை வாட்டியது. ஆகையால் அவனே அந்த உணவைச் சாப்பிட்டான். சாப்பிட்ட பிறகு, திடீரென்று ஆற்றலும் விறுவிறுப்பும் சுறுசுறுப்பும் நிறைந்த இளைஞனாக அவன் மாறிவிட்டான். பின்னர் ஞானியும் அதே உணவை உண்டு இளமை முறுக்குப் பெற்றார். இதுவே, இவ்வூருக்கு 'இளம்பிள்ளை' என்ற பெயர் ஏற்பட்ட வரலாறு ஆகும். இன்றுங் கூட, சில செல்வர்கள் வயது மூப்பாவதன் இடையூறுகளினின்றும் விடுதலை பெற, தங்க பஸ்பம் சாப்பிடுவதாகத் தெரிகிறது.

வெளிப் பூச்சுக்கு—அதாவது உடலில் தேய்த்துக்கொள்வதற் காக—பிரத்தியேகமான தைலங்களையும் சித்தர்கள் செய்கிறார்கள். இந்தத் தைலத்துடன் கரிசலங்கண்ணி என்ற மூலிகைச் சாற்றைக் கலந்து உடலில் தேய்த்துக்கொண்டு அடிக்கடி குளித்தால் தோல் சம்பந்தப்பட்ட நோய்கள் குணமாகிவிடும். ஜலதோஷம் அல்லது தடிமனைப் போக்க இரண்டு அல்லது மூன்று துளி விளக் கெண்ணெயை மூக்குக்குள் விடலாம். ஆஸ்துமா என்னும் இளைப்பு நோயையும் மூலிகைகள் குணப்படுத்துகின்றன. நொறுங்கிய எலும்புகளை ஒன்று சேர்க்கும் ஆற்றலில், தலைமுறை தலைமுறையாகச் சில குடும்பங்கள் சிறந்துவிளங்குகின்றன. இவ்வகையில் காரைக் குடிப் பகுதியில் துளாவூர் நாட்டு வைத்தியர்கள் சிறந்து விளங்கு கின்றனர். திருச்சிராப்பள்ளியில் பாலக்கரைப் பகுதியும் கோயம் புத்தூரில் தெலுங்குப் பாளையமும், சென்னை நகருக்கு அருகே

ஆந்திரப் பிரதேசத்திலுள்ள புத்தூரும் இவ்வகையில் குறிப்பிடத் தக்கவை.

நோய்களைக் குணப்படுத்த, யந்திரங்களை உபயோகிக்கும் பழக்கம் தமிழ்நாட்டில் பரவியிருக்கிறது. யந்திரத் தகடுகளில் மாந்திரீகமான சில வரைபடங்கள் பொறிக்கப்படுகின்றன. யந்திரம் அடங்கிய ஒரு தாயத்து கையில் அல்லது கழுத்தைச் சுற்றி அணிந்துகொள்ளப்படுகிறது. தாயத்திற்குத் தெய்வீக சக்தியை ஊட்டுவதற்காகச் சிறப்பான பிரார்த்தனைகள் செய்யப்படுகின்றன. அதன் பிறகு தீமையிலிருந்து தாயத்து அணிந்தவனைக் காப்பாற்றும் ஆற்றலையும் அவனுக்கு உடல்நலத்தையும் செல்வத்தையும் வழங்கும் சக்தியையும் அந்தத் தாயத்து, பெற்று விடுவதாகக் கருதப் படுகிறது.

மூல நோயையும் சொறி சிரங்கையும் சித்தர்கள் குணப்படுத்தி யிருக்கிறார்கள். போகர் என்ற தமிழ் தன்வந்திரி, நோய்களை நீக்கு வதற்குப் பலவகையான இரசாயனப் பொருள்களை உபயோகித்த தாயும் அவை மிகவும் சக்திவாய்ந்தன என்றும் சொல்லப்படுகிறது. மதுரை மாவட்டத்தில் பழனியில் சித்தர் மருந்துகள் செய்யப்படு கின்றன. போகர், நவபாஷணங்களால் அமைத்த பழநி யாண்டவர் திருவுருவத்திற்குச் செய்யப்படும் அபிஷேகப் பொருள் களின் சக்தியே இந்த மருந்துகளின் ஆற்றலுக்குக் காரணம் என்பர். பழநி மலைக்கோயிலில் காலையில் பழநியாண்டவர் திருமேனியிலிருந்து எடுக்கப்படும் இராக்கால சந்தனம், பல நோய்களையும் குணப் படுத்தக் கண் கண்ட மருந்து ஆகும். தங்கப்பொடி, வெள்ளி முதலிய உலோகங்கள், முத்து பவளம் முதலியவற்றின் கூறுகள், மூலிகைகளின் சாறுகள், ஆகியவற்றைக் கொண்டும் இந்த மருந்து களைத் தயாரிக்கிறார்கள். மூலிகைகளிலிருந்து பிழியப்படும் மர்மத் தைலத்தை இரவில் படுப்பதற்குமுன் உடம்பில் தேய்த்துக்கொண்டு காலையில் எழுந்ததும் வெந்நீரில் குளித்தால், நோய் நீக்கத்திற்கான அறிகுறிகள் உடனே தெரிகின்றனவாம்.

பலவகையான உடற்கோளாறுகளுக்கு நல்லெண்ணெய்யை மிளகாய், மஞ்சளுடன் சேர்த்துக் காய்ச்சி அதை உடம்பில் தேய்த்துக்கொண்டு, வெந்நீரில் குளிப்பது வழக்கம். சாதிக் காயைக் காய வைத்துத் தூளாக்கி வாழைப்பழத்துடன் சாப்பிட்டால் வயிற்றுப் போக்கு நின்றுவிடும். சாதாரண வயிற்றுப் போக்குக்கு, சிறிது தேனை உட்கொள்ளுவது வழக்கம். நரியின் தோலைச் சுட்டு,

தேனுடன் கலந்து சாப்பிட்டால், மிகக் கடுமையான இருமல்களும் பஞ்சாகப் பறந்துவிடும்.

பச்சரிசி மாவுடன் மஞ்சள் தூளைக் கலந்து கொதிக்கவைத்தால் உடலில் எப்பகுதியில் ஏற்பட்ட கட்டியானாலும் கரைந்துவிடும். கட்டி இருக்கும் இடத்தில் அந்த மாவை வைத்துக் கட்ட வேண்டும்.

தொண்டை வறண்டுவிட்டால் முருங்கை இலைகளைத் தூளாக்கிச் சாறு பிழிய வேண்டும். (வெற்றிலைச்) சுண்ணும்பை அதனுடன் கலந்து தொண்டையில் தடவினுல், தொண்டை வலி இருந்த இடம் தெரியாது.

இஞ்சி, மஞ்சள், வெங்காயம், சீரகம், சாதிக்காய், கிராம்பு இன்னும் ஏனைய வாசனைப் பொருள்களும் அவற்றிலுள்ள மருத்துவ நன்மைக்காக உணவில் சேர்க்கப்படுகின்றன. சோற்றின் நீர்ப் பகுதியை இரவில் அப்படியே சோற்றுடன் வைத்திருந்து, மறுநாள் காலையில் உப்பு, மஞ்சள், பெருங்காயம் ஆகியவற்றுடன் சேர்த்து மூன்று மணி நேரத்துக்கு ஒரு முறை சாப்பிடுவது, இரத்த விருத்திக்குச் சிறந்த மருந்து. வாழைமரத்தின் தண்டு மூத்திரக் கோளாறுகளுக்கும் அழுங்கிப்போன உடற்பகுதிகளைக் குணப் படுத்தவும் கைகண்ட மருந்து.

பைத்தியம் பிடித்தவர்களைக் கூட்டம் கூட்டமாகத் திருக் குற்றுலம், சமயபுரம் கோயில்களுக்கு அழைத்துச் செல்கிருர்கள். 45 நாட்கள் அருவியில் நீராடிப் பிரார்த்தனை செய்தபிறகு, பலர், மன நோயிலிருந்து குணமடைந்திருக்கிருர்கள்.

சிவன் கோயில்களில் கொடுக்கப்படும் திருநீறு பல நோய்களைக் குணப்படுத்துகிறது. பாண்டிய அரசன் ஒருவனுடைய கடுமையான சுரத்தை அவனுக்குத் திருநீறு தடவித் திருஞான சம்பந்தப் பெருமான் தீர்த்ததாகப் பழைய இலக்கியங்களில் சொல்லப்பெற்றிருக்கிறது. குறிப்பிட்ட தேவாரப் பாக்களைப் பாடி, மந்திரங்களை ஓதியபிறகு, திருநீற்றைப் பூசினுல் எந்த நோயும் நீங்கிவிடுமென்று நாட்டுப்புற மக்களிடையே ஒரு நம்பிக்கை நிலவுகிறது. இவ்வாறே சுர நோயால் துன்பப்படும் குழந்தைகளுக்கும் பேய் பிசாசு முதலியவற்ருல் பாதிக்கப்படும் சிறுவர் சிறுமியருக்கும் உடலில் திருநீறு பூசிக் கை மேல் பலன் கண்டிருக்கிருர்கள்.

தேள் கடியைப் போக்குவதற்கு மந்திரிப்பது வழக்கம். பாம்பு கடிப்பதால் ஏற்படக்கூடிய சாவுகளைத் தடுப்பதற்குரிய சக்திகளையும் சிலர் பெற்றிருக்கிருர்கள். முத்துக் குளிக்கும் மீனவர்கள், கடலில்

இறங்குவதற்குமுன் மந்திரிக்கத் தெரிந்த சிலரை அணுகுகிறார்கள். ஆழ் கடலுக்குள் செல்லுவதால் நேரக்கூடிய சொல்லொணு ஆபத்துக்களிலிருந்தும் மந்திரத்தால் அவர்கள் பாதுகாக்கப்படுகிறார்கள். முத்துக்குளிப்பு வருவாயில் ஒரு பகுதி, தொன்றுதொட்டு, மந்திரிப்பவர்களுக்குக் கொடுக்கப்பட்டுவருகிறது.

பசுவின் சாணத்தால் வீட்டு வாயில்களை மெழுகுவது தமிழ் நாட்டில் வழக்கம். பூச்சிகளைத் தடுக்க இது நல்ல முறை. எனவே, நாட்டுப்புற மக்கள் பசுவின் சாணத்தை பிணுயில் போல உபயோகிக்கிறார்கள். தரையை, சாணத்தால் பூசுகிறார்கள். திறந்த வெளியில் சாணத்தைத் தண்ணீர்போலத் தெளிக்கிறார்கள். நாள்தோறும் இவ்வாறு சாணத்தைத் தெளிப்பதால், சிமிண்டு பூசப்பட்ட இடம் போல அந்தப்பகுதி ஒரு பளபளப்பும் மெருகும் பெற்றுவிடுகிறது.

குழந்தைகளுக்குச் சிறு சங்குகளில் பாலடை ஊட்டுவது வழக்கம். இதில் பஞ்ச கௌவியம் சிறு அளவாகச் சேர்க்கப்படும். பஞ்ச கௌவியம் என்பது பசுவின் 1. கோசலம் 2. கோமயம் 3. பால் 4. தயிர் 5. நெய் ஆகிய ஐந்து பொருள்களும் கலந்தது. இந்தக் கலவை, பல வகை நோய்களுக்கு மருந்தும் ஆகும். தீட்டு நீக்கி, இடங்களைப் புண்ணியவாசம் செய்வதற்குப் பஞ்ச கௌவியத்தைத் தெளிப்பது மரபு.

நோய்களைப்பற்றி மலைச் சாதியார்களின் கருத்துக்களை இனிக் காண்போம். பழியர்கள், தங்களுடைய கிராமம் ஒன்றில் பெரியம்மை பரவினால், உடனே அந்தக் கிராமத்தைக் கைவிட்டு, எல்லோரும் அங்கிருந்து வெளியேறி விடுவார்கள். பெரியம்மை பார்த்திருப்பவனை அவனுடைய உறவினர்கள்கூட, தேடமாட்டார்கள். விதிப்படி நடக்கட்டும் என்று அவனை விட்டுவிடுவார்கள். பெரியம்மை பரவுவது, கடவுளின் கோபத்தின் விளைவு என்று அவர்கள் நம்புகிறார்கள்.

மலைகளிலும் காடுகளிலும் உள்ள மூலிகைகளைப் பற்றியும் அவற்றின் வேர்களைப் பற்றியும் எந்தெந்த நோய்களுக்கு அவற்றை மருந்துகளாக உபயோகிக்கலாம் என்பதும் பழியர்களுக்கு நன்கு தெரியும். பெரிய உரிகட்டி வேர், நரிவெள்ளி வேர் என்பவற்றைத் தூளாக்கி, பாம்புக் கடியால் ஏறிய விஷத்தை முறிக்க மருந்தாக அவர்கள் உபயோகிக்கிறார்கள். பச்சை வேரை சிறிதளவு கடித்து மென்று, பாம்பு கடித்த இடத்தில் அந்தச் சாறைத் துப்பி, கசப்பு மிகுந்த எஞ்சிய சாறை விழுங்கி விடுகிறார்கள்.

பழியர்களுக்கு மந்திரிக்கத் தெரியும். மாந்திரீக சக்தியால், எவ்வளவு கொடுமையான விலங்குகளையும் அவர்கள் வசப்படுத்தி விடுவார்கள். சில மந்திரங்களைச் சொல்லி அந்த விலங்குகளின் வாய்களையும் கால் நகங்களையும் செயல்படாமல் பூட்டி வைத்து விடுவார்கள். கிராமத்தில் கேந்திரமான நான்கு இடங்களில் நரிகளின் வால்களை நட்டு வைத்து சில மந்திரங்களை ஓதிவிடின், கொடிய விலங்குகளிலிருந்து கிராமத்தைக் காப்பாற்றிவிடலாமென்று அவர்கள் நம்புகிறுர்கள்.

### ஏவலும் சூனியமும்

வாழ்வில் நடைபெறும் நிகழ்ச்சிகளை இயற்கையான விளைவுகள் என்று கிராம மக்கள் ஏற்றுக்கொள்ளுவதில்லை. அவை ஏவல் அல்லது சூனியத்தின் விளைவு என்று அவற்றுக்குக் காரணம் கற்பிப்பார்கள். மந்திரங்கள் ஓதி, அதன் மூலம் திருநீற்றைச் சக்தி வாய்ந்ததாகச் செய்து, அதைக் கள்ளத்தனமாக எதிரியின் வீட்டினுள் அல்லது அந்த வீட்டுக் கூரையில் தூவி விடுவார்கள். குறிப்பிட்ட ஒரு நட்சத்திரம் உள்ள நாள் முதல், அந்த மந்திரம் வேலை செய்யத் தொடங்கிவிடும். அதன் பிறகு, வீட்டுக்காரரின் அல்லது அந்த வீட்டில் குடியிருப்பவரின் செயல்களில் இந்த மந்திரம் தலையிட்டு, அவர்களுடைய அலுவல்களைத் தடைசெய்யும். 48 நாட்களுக்குள் அவர்களுக்குத் தோல்விமேல் தோல்வியும் அடுத்தடுத்துப் பல கெடுதல்களும் ஏற்படும்.

ஏவல் என்பது பொல்லாத ஒரு கடவுளை அல்லது வரதரான ஓர் அம்மனைக் கட்டுப்படுத்தி அந்தத் தெய்வத்தின் வாயிலாகக் குறித்த காலக் கெடுவில், குறிப்பிட்ட ஆளைக் கொல்லுவதாகும். இந்த வகையில் அனுபவப்பட்ட ஏவல்காரர்கள் இருக்கிறுர்கள். அதுவே அவர்களுடைய தொழில். அவர்கள் அந்தத் தெய்வத்தைச் சமாளித்து, தந்திரமாய் அதற்கு உணவு ஊட்டுவார்கள்.

மந்திரம் ஓதியும் மனமாரப் பிரார்த்தித்தும் கடவுளைத் தலையிடச் செய்யலாம் என்பது பாமரமக்களின் நம்பிக்கை. எதிரியின் பெயரைச் சொல்லி அவனை நோய்வாய்ப்படச் செய்துவிடலாம் என்றும் அவர்கள் நம்புகிறுர்கள். பாம்பு போன்ற கொடிய உயிரினங்களால் ஏற்படும் தீமையைத் தடுக்கவும் மந்திரங்கள் ஓதுகின்றனர். எதிரியின் கால் சுவட்டின் அடையாளங்களை எடுத்துச் சுடுகாட்டில் மந்திரங்களை ஓதலாம். சூனியக்காரர்கள் செய்யும் இந்தச் செயலைக்

கண்டுபிடிப்பதற்கும் அவரால் ஏற்படும் கெடுதல்களைச் சமாளிக்கவும் மற்றொரு சூனியக்காரருடைய உதவியை நாடலாம்.

ஏவல் என்னும் கலையைப் பயன்படுத்தி எதிரியின் கை, கால் அல்லது வாய் செயலற்றுப் போகவும் அல்லது வாதத்தால் அந்த உறுப்புக்களை முடக்கவும் செய்யலாம். துணி, மா, அல்லது வேறு ஒரு பொருளில் ஒருவனைப் போல் பொம்மை செய்து அதற்கு மந்திரம் ஓதி அந்தப் பொம்மையை உடைப்பார்கள் அல்லது அதன் உறுப்புக்களைச் சித்திரவதை செய்து சிதைப்பார்கள். இவ்வாறு செய்தால், அதே நேரத்தில் அந்த ஆளுடைய கால் கை விளங்காமல் போய் அவன் பலவாறாக அல்லற்படுவான் என்பது நம்பிக்கை.

மந்திரசக்தி நிறைந்த சிறியதொரு செப்புத்தகட்டை எதிரியின் வீட்டில் கதவு நிலைக்குக்கீழே புதைத்துவைப்பதும் உண்டு. இதனால் அவன் வீட்டுக்குச் சேதமும் அவனுடைய குடும்பத்திற்கு அழிவு காலமும் உண்டாகும்.

நோய்களின் தன்மையை அறிய ஏவல் கலையில் தேர்ச்சி பெற்றவர்களை அழைத்து, அவர்கள் மூலமாகப் பலவகைச் சோதனைகளைச் செய்வதும் உண்டு. அவர்கள் அந்திமாலையில் தெருச் சந்திப்புகளில் திருநீற்றைத் தூவிப் பார்த்து, நோய் தோன்றியதற்கான அறிகுறிகள் சிலவற்றை எடுத்துரைப்பார்கள். சில சமயம், பெரிய வாழை இலை ஒன்றைக் கொண்டுவரச்செய்து, பச்சரிசி, வாழைப்பழச் சீப்புக்கள், வெற்றிலை, பாக்கு, தேங்காய், எலுமிச்சைப் பழம் முதலியவற்றையெல்லாம் கேட்பார்கள். அவற்றின்மீது ஒரு வில்லையும் வில்லின்மீது ஒரு பாக்குவெட்டியையும் வைப்பார்கள். பிறகு, இன்ன கெடுதலுக்குக் காரணமானது எந்தப் பேய் அல்லது பிசாசு என்று வகைப்படுத்தி அந்தப் பேய்—பிசாசு கேட்கும் காணிக்கைகளையும் பட்டியல் போட்டுச் சொல்லுவார்கள். தாயத்து அணிவதன் மூலம் தீய ஆவிகளை விரட்டலாம். அவற்றால் தீங்கு இழைக்கப்பெற்ற வீடுகளையும் ஆட்களையும், ஏவல் எடுப்பதையே தொழிலாக உடையவர் மூலமாக விடுவித்துவிடலாம்.

குறளிப் பிசாசு அல்லது குட்டிச் சாத்தான் என்பது உருவம் இல்லாத ஒரு சிறிய சக்தி. நம் கண்களுக்கு அது புலப்படாது. ஏராளமான கற்கள் வந்து விழும்படி செய்வது, அழுகிய முட்டைகள் வந்து விழுவது, எதிரியின் படுக்கை அறை அல்லது சமையல் அறையில் சிறு பூகம்பம் ஏற்படுவது போன்றவை குட்டிச் சாத்தானின் கைவண்ணங்கள். வேண்டாத, விரும்பாத, கேட்கத்தகாத

ஒலிகளைக் கேட்கச் செய்வதும், கட்டிடக் கூரையைப் பிரிப்பதும் குட்டிச் சாத்தானின் செயல்களுள் சில. திருடர்களும் கொள்ளைக் கூட்டத்தாரும் ரொட்டியில் சக்தி வாய்ந்த சில மருந்துகளைச் சேர்த்து, காவல் நாய்களுக்கு வீசி அவற்றைக் கட்டுப்படுத்தி விடுவார்கள். இளம் பெண்கள் தங்கள் நெற்றியில் வட்டவடிவமான ஓர் அடையாளத்தைக் கண் புருவங்களுக்கு இடையே இட்டு, மயக்கம் ஏற்படுவதையும் பொருமையையும் தடுத்துவிடுவார்கள்.

சூனியம் என்பது இயற்கைக்கு அப்பாற்பட்ட ஒரு சக்தி. சூனியக்காரர்கள் பேய் பிசாசுடன் கூட்டுச்சேர்ந்து இந்தச் சக்தியைப் பெறுகிறுர்கள். மலைச்சாதியாரில் இந்தச் சக்தியுடையவர்கள் சிலர் இருக்கிறுர்கள். அவர்கள் புகை மேகத்தை உண்டாக்கி, பூச்சாண்டிகளையும் பேய்களையும் வரவழைத்து, பிறகு அந்த இடத்திருந்து அவற்றை விரட்டிவிடுவார்கள்.

மருந்துச் சத்து நிறைந்த வேப்ப இலை, பேய் பிசாசுகளையும் சூனியக்காரர்களையும் விரட்டவல்லது. கதவிலும் கூரையிலும் வேப்ப இலையைத் தோரணமாகக் கட்டுவது அல்லது செருகி வைப்பது வழக்கம்.

எதிரியின் உடலில் ரகசியமாக எண்ணெய்ச் சத்துள்ள சில பொருள்களைத் தடவுவார்கள். அல்லது அவற்றைத் தண்ணீர், பால், சர்க்கரை, உப்பு, எதிரி உண்ணும் உணவு முதலியவற்றுடன் (மந்திரம் ஓதி அவன் பெயரையும் சொல்லி), சேர்த்துவிடுவார்கள். வேறு வழிகளும் உண்டு. சில மருந்துகளைத் தன் நெற்றியில் தேய்த்துக்கொண்டு எதிரியின் முன்னே நின்ருல், எதிரி அவனுக்குச் சரணடைந்துவிடுவான்.

ஔவையார், தமிழ்நாட்டுப் பெண்பாற் புலவர்களில் தலைசிறந்தவர். ஒருநாள், அவர் ஒரு சத்திரத்தில் உறங்கிக் கொண்டிருந்தாராம். அங்கு ஒரு பெண் தற்கொலை செய்துகொண்டு இறந்துபோனதால், அந்த இடத்தை அவளுடைய பேய் ஆட்டிப் படைத்தது என்று சொன்னுர்கள். அதனுல் அங்கு வந்து தங்கிய எல்லோரும் பலவாறு துன்பப்பட்டனர். அங்கு தங்கியிருந்தபோது, ஔவையாருக்கும் இரவெல்லாம் உறக்கம் வரவில்லை. ஆகையால் இரவு முழுவதும் கண்விழித்திருந்தபோது, பின்வருவது போன்ற பல பாடல்களை ஔவையார் இயற்றினுர் :

வெண்பா விருகாலிற் கல்லானை வெள்ளோலை
கண்பார்க்கக் கையா லெழுதானைப்—பெண்பாவி

பெற்ருளே பெற்ருள் பிறர்நகைக்கப் பெற்ருளே
எற்ருேமற் றெற்ருேமற் றெற்று.

(கா. சுப்பிரமணிய பிள்ளை : தனிப் பாடற்றிரட்டு. தொ. 1. ப. 22 இரத்தின நாயகர் சன்ஸ். 1957.)

தமிழ்நாட்டு மலைச்சாதியாரான குறும்பர்கள் நீலகிரி மாவட்டத்தில் பல இடங்களில் பரவியுள்ளனர். அவர்கள் ஏவல் கலையில் வல்லவர்கள் என்றும், அவர்களுக்குக் கைவரப்பெற்ற பலவகையான மாந்திரீக சக்திகளைக் கோத்தர் (KOTAS) என்ற மற்ருேர் இனத்தவர்களுக்கு விரோதமாகப் பயன்படுத்துகின்றனர் என்றும், கோத்தர்கள் நம்புகிருர்கள். இந்த நம்பிக்கையின் விளைவுகளைக் கோத்தர்களின் வாழ்க்கைமுறையில் பலபடக் காணலாம்.

**கண்படுதல் (கண்படல்) அல்லது கண்ணேறு**

மனிதர்களாலும், சிலசமயம் விலங்குகளாலும்கூட, கண் திருஷ்டி பட்டு, பல கேடுகள் நேரக்கூடும். இந்தக் கெடுதல்களைப் போக்குவதற்காக ஒரு வழியைக் கடைப்பிடிப்பது உண்டு. பாதிக்கப்பட்டவனை உட்காரவைத்து அவன் தலையைச்சுற்றி உப்பையும் மிளகாயையும் மும்முறை வலமாகச் சுற்றுவார்கள். இதை, 'திட்டி சுற்றல்' என்பர். பிறகு அந்த உப்பையும் மிளகாயையும் அடுப்பில் போட்டு எரித்து விடுவார்கள். எரியும்போது கெட்ட நாற்றம் உண்டானல், உரிய தாக்குதல் சமாளிக்கப்பட்டு விட்டதென்றும், யாருடைய கண் திருஷ்டி பட்டதோ அவனுக்கே இனி, கேடு விளையும் என்றும், பொருள் கொள்ளலாம்.

கண்படலைத் தடுப்பதற்காக, வீடு கட்டி குடிபுகும் நாளில், வீட்டு வாயிலில் பூசனிக்காயைத் தொங்கவிட்டு அதில் மனிதனின் படத்தையும் வரைந்திருப்பார்கள். அந்தப் பூசனிக்காய் அழுகிவிட்டால் கண்திருஷ்டி நீங்கிவிட்டதாகக் கருதப்படும்.

நன்கு விளைந்த வயல்களில் கண் திருஷ்டிக்குப் பரிகாரமாக, சோளக்கொல்லைப் பொம்மையை விவசாயிகள் ஒரு கம்பில் நட்டு வைத்திருப்பார்கள். வைக்கோல், பழைய துணிகள் ஆகியவற்ருல், மனித உருவம்போல அந்தப் பொம்மை செய்யப்பட்டிருக்கும். அதைப் பார்த்ததும், நெல் மணிகளைத் தின்பதற்கு வரும் காகங்கள் பயந்து ஓடிவிடும்.

கடைக்காரர்கள், தங்கள் தங்கள் கடைகளில் இரண்டு கண்களைப் படமாக வரைந்து தொங்கவிட்டிருப்பதைப் பல கடைகளில் பார்க்க

லாம். **என்னைப் பார், சிரி** என்று அதில் எழுதிவைத்திருப்பார்கள். சில கடைகளில் விற்பனைப் பகுதிகளில் எலுமிச்சைப் பழத்தையும் மிளகாயையும் கட்டித் தொங்க விட்டிருப்பார்கள்.

சாப்பிடும்போது பக்கத்திலுள்ளவன் பசியோடு பார்த்துக்கொண்டிருக்க, ஒருவன் மட்டும் சாப்பிட்டால் சாப்பிடுபவனுக்கு வயிற்றுவலி ஏற்படும் என்பர். ஏனைய பொருமைகளைவிட, உழவர்களுக்குள் உண்டாகும் பொருமையால் ஏற்படும் கண் திருஷ்டி சக்தி வாய்ந்தது என்பர். இதைப் பற்றிச் சில பழமொழிகள் வழங்கிவருகின்றன.

**சகுனங்கள்**

சகுனங்களில் மக்களுக்கு நிறைந்த நம்பிக்கை இருந்துவருகிறது. ஒரு பிரயாணம் தொடங்கும்போது, கால் இடறுவது கெட்ட சகுனம். பலர், தங்கள் வீட்டு வாயிலில் நின்றபடியே, நல்ல சகுனத்தை எதிர்பார்த்து, அது ஏற்பட்ட பிறகே புறப்படுகிறார்கள்.

காகம் கரைவது, விருந்தினர் வரப்போவதற்கு அறிகுறி. சாப்பிட்டுக்கொண்டிருக்கும்போதோ திருமணச் சடங்கின்போதோ விளக்கு அணைவது கெடுதலுக்கு அடையாளம் என்பர். வீட்டிற்குள் மலைப்பாம்பு வருவதும் கிராமத்திற்குள் நரிகளும் முயல்களும் புகுவதும் கெட்ட சகுனங்கள்.

காகங்கள் ஒரு வீட்டின் முன்னேகூடி, தங்களுக்குள் சண்டையிட்டுக்கொள்வது அந்த வீட்டில் ஒரு சாவு நிகழ இருக்கிறது என்பதற்கு எச்சரிக்கையும் முன்னறிவிப்பும் ஆகும். ஒருவனுடைய நிலத்தில் ஓராண்டில் வழக்கமான மகசூலை மிகவும் விஞ்சி, அளவு கடந்த வருவாய் வந்தால், அது அவன் உயிர்நீப்பதற்கான அபாய அறிவிப்பு.

அவிட்டம் முதல் ரேவதிவரை உள்ள நட்சத்திரங்களில் உயிர்நீத்தவர்களை, பாதத்தில் இறந்ததாகச் சொல்லுவது உண்டு. அதனால், இறந்தவரின் குடும்பத்தில் எஞ்சியிருப்பவர்களுக்குக் கெடுதல் நேரக்கூடும் என்பது நம்பிக்கை. யாராவது பாதத்தில் இறந்தால், அவர்கள் இறந்த இடத்தில் உள்ள தளத்தைப் பிரித்து, புதிய கற்களைப் பாவுவது வழக்கம். சில குடும்பங்களில், வீட்டின் ஒரு பகுதியைத் திருத்தியமைப்பார்கள். வேறு பரிகாரங்களும் செய்வர். சனிக்கிழமையன்று ஒருவர் இறந்தால், விரைவில் அதே குடும்பத்தில் மற்றொரு சாவு ஏற்படும். ‘சனிப்பிணம் தனிப் பிணமாகச் செல்லாது’ என்பர்.

**வரும் பொருள் உரைத்தல்**

பஞ்சாங்கத்தைப் பார்த்து, சோதிடர்கள் எதிர்காலத்தைப்பற்றித் தெரிவிக்கிருர்கள். பிறந்த லக்கினம், பிறந்த நேரத்தில் சந்திரனின் நிலே, பிறந்தபோது ஏனைய கிரகங்களின் நிலே, ஆகியவற்றை வைத்துச் சோதிடர்கள் கணக்கிடுகிருர்கள். இப்போது நாளிதழ்களிலும் வார இதழ்களிலும் ராசி பலன் வெளியிடுகிருர்கள். கிரகங்களின் சஞ்சாரத்தை அடிப்படையாகக்கொண்டு ராசி பலனை அலசி ஆராயும் தனி நாளிதழ்களும் வெளிவருகின்றன.

வருங்காலத்தைச் சொல்லுவதில் மரபுவழியாகப் பயிற்சி பெற்றவர்கள் பலர் இருக்கிருர்கள். இவர்களுள் வள்ளுவர் என்ற சாதியார் குறிப்பிடத்தக்கவர்கள். இவர்கள் நந்தி வாசகம் என்ற சோதிடச் சொற்களை மனனம் செய்திருக்கிருர்கள். இவை, ஒவ்வொரு குடும்பத்திலும் தகப்பஞரால் மூத்த மகனுக்கு மட்டுமே சொல்லிக் கொடுக்கப்படுகின்றன. மற்றவர்கள், வேறு தொழில்களைப் பார்த்துக் கொள்ளவேண்டும். வள்ளுவர்கள் வாக்குப் பலிதம் உள்ளவர்கள் என்பர். எனவே, கிராமங்களில் வாழ்பவர்கள் வள்ளுவர்கள் சொல்லுவதையெல்லாம் வேதவாக்காகக் கருதுகிருர்கள்.

கிராம தேவதைக் கோயில்களிலுள்ள சாமியாடிகளும், பூசாரிகள் என்றும் நிமித்தக்காரர்கள் என்றும் சங்க இலக்கியங்களில் சொல்லப்பட்டிருப்பவர்களும், கோயில் பூசைகளைச் செய்தபிறகே, தங்களுடைய ஆருடத்தைச் சொல்லுகிருர்கள்.

சங்க இலக்கியங்களில் அகவல் மகளிர் என்று குறிப்பிடப்படுபவர்களின் சந்ததியினரே குறத்திமார். இவர்கள், குறி சொல்லிப் பிழைத்து நல்ல வருவாய் பெறுகிருர்கள். நீண்ட நெடுங்காலமாக, இவர்கள் இந்தத் தொழிலில் ஈடுப்பட்டிருக்கிருர்கள். வில் பொறி அல்லது கவண் கொண்டு எறிந்து, பறவைகளையும் அணில்களையும் இவர்கள் கொன்றுவிடுவார்கள். கண்ணுடிக் குமிழ்களையும் தையல் ஊசிகளையும் விற்று, இவர்கள்பிழைக்கிருர்கள். மழை பெய்யவிருப்பதைப் பற்றியும் தனிப்பட்டவர்களுக்கு ஏற்படவிருக்கும் நல்ல காலங்களைப் பற்றியும் முன்கூட்டிச் சொல்லி, இவர்கள் தங்களுடைய வாழ்க்கையை நடத்திக்கொண்டிருக்கிருர்கள்.

கைரேகை பார்ப்பதும் தமிழ்நாட்டில் பரவியிருக்கிறது. தமிழ்நாட்டிலுள்ள கைரேகை முறை, ஐரோப்பியக் கைரேகை முறையினின்றும் மாறுபட்டது. உள்ளங்கையிலுள்ள மச்சங்கள், தீவுகள்,

மேடுகள் ஆகியவற்றை ஆராய்ந்து, கைரேகைக்காரர்கள் வருங் காலத்தைச் சொல்லுகிறார்கள்.

சரம் பார்த்தல் என்பதன் அடிப்படையில் எதிர்காலம் கணிக்கப் படுவதும் உண்டு. மூச்சுவிடும்போது, ஒரு துவாரத்தின் வழியாக மட்டுமே மூச்சு உள்ளே இழுக்கப்படுகிறது. இதை அடிப்படைத் தத்துவமாகக் கொண்டு எதிர்கால நிகழ்ச்சிகள் அறிவிக்கப் படுகின்றன.

எதிர்காலத்தைப் பற்றிக் கவலைப்படும் பெண், தன் கண்களை இறுக மூடிக்கொண்டு தரையில் வட்டமாக வரைவாள். இரண்டு மூலை களும் ஒன்றுடன் ஒன்று சரியாகச் சந்தித்தால், அவள் நினைத்த காரியம் திருவருள் துணையால் கைகூடிவிடும். தமிழ்ப் பெண்க ளுடைய இந்தச் சுவையான பொழுதுபோக்கு **கூடல் இழைத்தல்** என்று பெயர் பெறும்.

உடலின் பல பகுதிகளில் பல்லி விழுவதை வைத்தும் வருங் காலத்தை முடிவு செய்வது உண்டு. பல்லி பலிதம் சொல்லுவதாக வும் தமிழர்கள் நினைக்கிறார்கள். பல்லியின் ஒலியை ஆதாரமாகக் கொண்டு எதிர்காலத்தை ஊகிப்பதும் வழக்கம். பல்லியின் ஒலி எழுந்த திக்கு, அது பகலில் சொல்லப்படுகிறதா அல்லது இரவில் சொல்லப்படுகிறதா என்பவற்றையெல்லாம் வைத்து, பல்லி சொல்லுக்குப் பலன் காண்பார்கள். சில பஞ்சாங்கங்களில் இது விவரமாக அச்சிடப்பட்டிருக்கும்.

ஆடவர்களுக்கு வலது கண் புருவமும் இடது தோள்ப்பட்டையும் திடீரென்று உயர்ந்தால் அது நல்ல செய்திக்கு அறிகுறியாகக் கருதப்படும்.

பக்தர்களுக்கு அவர்களுடைய வருங்காலத்தைக் கடவுளரே சாமியாடிகள் மூலம் அறிவிப்பதாகக் கருதப்படுகிறது. சில சாமி யாடிகள், கேட்ட கேள்விகளுக்கு மட்டும் பதில் சொல்லுவார்கள். வேறு சிலர், ஆளைப் பார்த்ததும், கடல் மடை திறந்ததுபோல அவனைப்பற்றி எல்லாவற்றையும் சொல்லிவிடுவார்கள். ‘உனக்கு இன்ன கவலை இருக்கிறது, இத்தனை நாட்களுக்குள் உனக்கு மன நிம்மதி ஏற்படும், நீ செய்யவேண்டிய பரிகாரங்கள் இன்னின்ன’ என்று அடுக்கடுக்காகச் சொல்லிவிடுவார்கள்.

ஒரு காளைமாடு அல்லது வெள்ளாடு காணாமற் போய்விட்டால், உடனே அதன் சொந்தக்காரர்கள் இந்தச் சாமியாடிகளிடம் ஓடி விடுவார்கள். எப்போது மழை பெய்யும் என்பதையும் அவ்வப்

போது சாமி அழைத்து' ஊர்க் கூட்டமாக இருந்து கேட்பது வழக்கம்.

எதிர்காலத்தைப் பற்றிய செய்திகள் பல்வேறு அட்டைகளில் அச்சிடப்பட்டிருக்கும். கிளியைக் கொண்டு அவற்றுள் ஏதாவது ஓர் அட்டையை மட்டும் எடுக்கச் செய்து, வருங்காலத்தை அறிவதும் உண்டு. இது, கிளி சாஸ்திரம் எனப்படும்.

குழந்தைகளை ஏதாவது ஓர் எண்ணைத் தொடச்சொல்லி எதிர்காலத்தைப்பற்றித் தெரிந்துகொள்வது தொடுகுறி சாஸ்திரம் எனப்படும். இவற்றை யெல்லாம் விடச் சிறப்புடையது, லம்பாடி என்னும் குடுகுடுப்பைக்காரனின் சோதிடம். இவன், மயானத்தில் இரவில் தூங்குவான். இதன் பயனாக, நடந்தகால நிகழ்ச்சிகளை மிகச் செம்மையாகச் சொல்லுவான். கேட்பவர்கள் மயிர்க்கூச்செறியும் வண்ணம் வருங்காலத்தை விவரமாகச் சொல்லுவான். இதனால் இவன் சொல்வதைப் பயபக்தியுடன் கேட்டு, இவன் கேட்கும் துணிகளையும் நன்கொடைகளையும் உடனே கொடுத்துவிடுவார்கள். சில பகுதிகளில், இவனுக்கு 'தொட்டியன்' என்ற பெயர் வழங்கி வருகிறது.

**நாடி சோதிடம்**

சாதாரண மக்கள் கருத்தில், நாடி என்பதும் ஒருவகைச் சோதிடம், அவ்வளவுதான். ஆனால் பக்தியும் ஆழ்ந்த நம்பிக்கையும் உடையவர்களுக்கு நாடி என்பது மற்றோர் அறிவியல், ஆன்மீக உலகுக்கு மேற்கொள்ளும் யாத்திரை போன்றது. நாடியின் குறிக்கோள் மனிதனின் தெய்வத்தன்மையை இன்னும் கூடுதலாக்கிக் கொள்ளுவது. சோதியில் சோதியுட் சொல்லுவது சோதிடம். எதிர்காலத்து நிகழ்ச்சிகளைத் தெரிந்துகொள்வது, அடுத்தபடியான செயல்தானே தவிர, முதன்மையானது அன்று.

நாடி என்பது கை நாடி. மூச்சு ஓட்டத்தை, நரம்புத் துடிப்பை அறிவதற்கு ஒப்பானது. நாடிச் சுவடிகள் என்ற மிகப் பழைய பனை ஓலைச்சுவடிகளிலிருந்து வாசிப்பது மரபு. இவற்றுள் ஒவ்வொரு ஏடும் ஒரு குறிப்பிட்ட நபருக்காக எழுதப்பெற்றது. தன்னைப் பற்றிய ஏடு எவனுக்குக் கிடைத்துவிடுகிறதோ, அவன் அதிர்ஷ்டக்காரன் என்று சொல்லலாம். சில சமயம் ஒரு கூட்டத்தாரான பலருக்கும் சேர்ந்து, ஒரு பொதுவான நாடி ஏடு அகப்படலாம்.

செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள அச்சிறுப்பாக்கம் வள்ளுவர்கள், நாடி ஏடுகளைப் படிப்பதில் வல்லவர்கள். ஏனைய ஊர்களிலும் நாடி சோதிடர்கள் இருக்கிறார்கள்.

அச்சிறுப்பாக்கம் வள்ளுவர்களைப்பற்றிப் பலரும் நம்பும் கதை ஒன்று உண்டு. பழங்காலத்தில் ஒருவகையான வாகனம் வானத்தில் சென்றது. அது ஏராளமான பூக்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அது அச்சிறுப்பாக்கத்தில் சிக்கிக்கொண்டது. அங்குள்ள வள்ளுவர்களின் துணையால்தான் அது செப்பனிடப்பட்டு, மீண்டும் அதைப் பறக்கவிட முடிந்தது. அதற்கு நன்றி செலுத்தும் வகையில் நாடி ஏடுகளைப் படிக்கும் ஆற்றலை இறைவன் வள்ளுவர்களுக்கு வழங்கியிருக்கிறார்.

நாடி ஏடுகளை வாசிப்பவர்கள், தங்கள் கடவுளருக்குப் பல வாரங்கள் பிரார்த்தனையும் பூசையும் செய்து, ஏடுகளைப் படிக்கும் சக்தி என்றென்றும் தங்களிடம் நிலைபெறச் செய்கிறார்கள். அந்த ஏடுகளில் இருப்பது எல்லோர் கண்ணுக்கும் தெரியாது, எல்லோராலும் அவற்றைப் படித்துவிடவும் முடியாது. படிப்பு, பயிற்சி, ஒழுக்கம், நாணயம், கடவுள் நம்பிக்கை அனைத்தும் ஒருங்கே கூடியவர்களால்தான் அந்த ஏடுகளைப் படிக்க முடியும். அவர்கள் ஏடுகளை மிக விரைவாகப் படிப்பார்கள். படிக்கும்போது தடையோ தடங்கலோ இடர்ப்பாடோ இராது. டெலிபிரிண்டர் கருவி ஓய்வில்லாமல் செய்தியை அடித்துக்கொண்டிருப்பது போல இருக்கும். ஏடுகளைப் படிக்கும் நேரத்தில் ரிஷிகள் அல்லது ஞானிகள் அந்த வரிகளுக்கு முன்னால் நிற்பதாக நம்பப்படுகிறது. இந்த ஞானிகள் அனைவரும் முக்காலமும் உணர்ந்தவர்கள், பற்றற்றவர்கள், பல்துறை அறிவும் நிரம்பிய அருட்கடல்கள். எனவே, நாடி படிப்பதை ஆழ்ந்த பயபக்தியுடனும், அளவு கடந்த நம்பிக்கையுடனும் எல்லையற்ற பொறுமையுடனும், அகந்தை நீக்கியும், சரணாகதி மனப்பான்மையுடனும் கேட்கவேண்டும். கேள்விகள் கேட்பது, அவற்றுக்குப் பதில் சொல்லுவது, என்பவற்றுக்கு நாடியில் இடமில்லை. கவலை நிறைந்தவன் எந்தக் கேள்வியைத் தன் உள்ளத்தில் நினைக்கிறானோ, அதற்கு ஏற்ற பதில் அந்த ஏட்டில்தானே அடங்கியிருக்கும். அந்த ஏடு, எல்லாவகையிலும் முழுமை பெற்றதாக, நிறைவுடையதாக இருக்கும். எதிர்காலத்தில் ஒவ்வொரு கட்டத்திலும் எப்படி நடந்துகொள்ளவேண்டும், என்னென்ன செய்ய வேண்டும் என்பவையெல்லாம் மிக விவரமாக எழுதப்பட்டிருக்கும். இன்ன கோயிலுக்கு யாத்திரை செய், இந்தத் திருவிழாவுக்குப் போ,

பரிகாரங்களாக இவற்றைச் செய், என்றெல்லாம் அதில் சொல்லப் பட்டிருக்கும். இந்த ஏடு படிப்பதில் கேள்விப்படும் செய்திகள் மிக வியப்பாக இருப்பதாகவும், தம்மை மெய் மறக்கச் செய்வதாகவும், பேரறிவுள்ள அனுபவசாலிகள்கூட ஒப்புக்கொள்ளுகிருர்கள். நாடி யில் அடங்காதது ஒன்றுமில்லை. வெளிநாட்டுக்கொள்கை, உலக பெட்ரோல் நெருக்கடி, இவைகூட நாடி ஏடுகளுக்குப் புறம்பல்ல.

நாடி பல வகை. அகஸ்தியர் நாடி, வசிஷ்டர் நாடி, புஜங்கர் நாடி, ஜோதி நாடி, குமர நாடி என்பவை ஒவ்வொன்றும் ஒரு கூட்டத்தாருக்கு ஏற்பட்டவை.

ஏட்டில் முதல் பகுதி பிரார்த்தனை. இரண்டாம் பகுதி, குறிப்பிட்ட அன்பரின் சென்ற கால, வருங்கால, வரலாறுகள். மூன்ரும் பகுதி, ஆசீர்வாதம்.

இடங்களையும் தனி நபர்களையும் நாடி ஏடுகள் சுருக்கமாக, குறியீட்டுச் சொற்கள் போன்ற பெயர்களால் சுட்டும். அமெரிக்காவை அகரநாடு (அதாவது, அ என்ற எழுத்தில் தொடங்கும் பெயருள்ள நாடு) என்று நாடி ஏடுகள் குறிப்பிடும். தஞ்சை மாவட்டம் ஒரத்தநாட்டுக்காரனை, சோழ நாட்டின் கீழ்ப்பகுதியில் நாடு என்னும் ஈற்றுச் சொல் உள்ள ஊரைச் சேர்ந்தவன், என்று நாடி ஏடுகளில் சொல்லப்பட்டிருக்கும். லெட்சுமணன் என்பவனை, ராம பிரானின் தம்பிமார்களில் ஒருவ னுடைய பெயரை உடையவன், என்று அடையாளம் காட்டப்பட் டிருக்கும். ஏடுகளைப் படிக்கும்போது உடனே புரியாது. புதிராக இருக்கும். நினைவாக வைத்திருந்து அல்லது எழுதிவைத்துக் கொண்டு, நிகழ்ச்சிகள் நடந்த பின்னர் கூர்ந்து ஆராய்ந்தால், நன்ருகப் புரியும்.

தெரிந்துகொள்ளவேண்டும் என்ற ஆசையால் தூண்டப்படு பவன், நாடி ஏடு படிப்பவர்கள் பலரைச் சந்திப்பான். முதலில் ஒருவர் படித்த ஏட்டின் தொடர்ச்சியாக அவர் விட்ட இடத்தி லிருந்து அடுத்தவர் படிப்பார். அந்த அளவுக்கு நாடி ஏடுகளில் தொடர்ச்சி உண்டு. பௌர்ணமி நாட்களிலும் திருவிழாக் காலங் களிலும் நாடி ஏடு படிக்கக் கேட்டால், அவை மிகவும் சரியாக இருப்பதாயும் பயனுடையதாக அமைவதாயும், அதன் பிறகு அவற்றைக் கேட்பவன் நாடி சோதிடக் கலைக்கே அடிமையாகி விடுவான் என்றும், சொல்லுகிருர்கள். அது மட்டும் அன்று.

ன் வாழ்நாள் முழுவதும் இந்தக் கலைக்குப் பிரசாரகனாக மாறி விடுவான.

பேராசைக்காரர்கள், நாணயமும் நேர்மையும் இல்லாதவர்கள், ஆகியோருக்கு வருங்காலம் சரியானபடி சொல்லப்படமாட்டாது. அவர்களுக்கு உரிய நாடி அகப்படாது என்பர்.




# 4. வழக்கங்களும் மரபுகளும்

## உறவு முறை

தமிழ்நாட்டில் உறவு முறை உறுதியாக உள்ளது; குடும்பம், பங்காளி, தாய்வழி உறவினர், சாதி என்ற அடிப்படைகளைக் கொண்டது.

குடும்பம் என்பது தாய் தந்தையரையும் அவர்களுடைய குழந்தைகளையும் குறிக்கும். இதைத் தனிக் குடும்பம் என்பது தகும்.

இது தவிர, பொதுக் குடும்பம் என்பதும் உண்டு. பாட்டன் பாட்டி, அவர்களுடைய திருமணமான மகன்களும் (மனைவிமார் களான) மருமக்களும், மற்றும் அண்ணன் தம்பிகள் குடும்பங்கள், ஆகிய இரண்டு மூன்று தலைமுறைகள் இதில் அடங்கும். இவர்கள் அனைவர்க்கும் பொதுச் சொத்துக்களும், பொதுவான ஒரு வீடும் இருக்கும். ஒரே சமையல் நடந்து அதிலேயே அனைவரும் சாப்பிடுவார்கள்.

அடுத்தது திருமணத்தின் வழியாக உண்டாகும் மனைவி வழி உறவு; இது மிக ஆழமானது, நெருக்கமானது, பாசம் கூடியது. மாமனுருக்கும், மனைவி வழி உறவினர் ஏனையோருக்கும், எந்தக் குடும்பத்திலும் இருக்கும் செல்வாக்கு மிகமிக வலுவானது: அவர்களைக் கலந்து கொள்ளாமல் எதுவும் நடப்பதில்லை. திருமணம் ஆகி விட்ட பிறகும் பெண்களுக்குத் தாங்கள் பிறந்த வீட்டுப்பாசம் ஒரு நாளும் குறைவதில்லை; நாளாக ஆக இந்த ஈடுபாடு பெருகும்; அவளுடைய கணவனுக்கும் குழந்தைகளுக்கும் அது சொந்தவீடு போன்றது; அது ஒரு மறு வீடு.

ஒவ்வொரு சாதிக்கும் உரிய வழக்கங்களும் மரபுகளும் ஆசாரங்களும் கட்டுப்பாடுகளும் உறவினரை இணைக்கின்றன. பிறப்பு, ருது அடைவது (பூப்பெய்தல்), திருமணம், சாவு, ஆண்டுக்கு ஒரு முறை நிகழும் திதி (திவசம்), ஆகிய நிகழ்ச்சிகளில் உறவினர் கூடுவர்.

தங்கள் தங்கள் சாதிக்குள்ளேயே பெண்ணுக்கு மாப்பிள்ளையும், மாப்பிள்ளைக்குப் பெண்ணும் தேர்ந்தெடுத்துத் திருமணம் முடிப்பது வழக்கம்.

தாயார் மற்றும் மனைவி வழி உறவினரிடம் அதிகப் பற்றுதலும் நம்பிக்கையும் இருப்பது, தமிழ் மக்களிடையே வாழையடி வாழை யாக வந்துள்ள வழக்கம் ஆகும். பங்காளிகள் கூட்டாக நடத்தும் தொழில் நீண்டநாள் நீடிப்பதில்லை; காலப்போக்கில் அது குலைந்து, அதற்குப் பதிலாக, பெண்வழி உறவினர் ஒருவர்க்குப் பங்கு வைத்துப் புதிய அமைப்பு உருவாகிவிடுவதைச் சர்வசாதாரணமாகக் காணு கின்றோம். முத்துக்குளிப்பது பயங்கரமான, ஆபத்து நிறைந்த தொழில். உயிருக்கும் மரணத்துக்கும் போராடும் அந்நிலையில், முத்துக்குளிப்பவன் தன் மைத்துனரைத்தான் நம்புகிறான்.

சமூக நிகழ்ச்சிகளான சடங்குகளிலும் வீட்டுக் காரியங்களிலும், ஒருவனுடைய மாமனார் செய்யும் முடிவு இறுதி முடிவாகிச் செயல் வடிவம் பெறுகிறது. இச்சடங்குகளில் தாய்மாமனுக்குச் சில முக்கிய மான கடமைகளும் பொறுப்புக்களும் உண்டு. பெரும்பாலான நிகழ்ச்சிகளின் செலவை (முழுவதுமோ அல்லது ஒரு பங்கினையோ) அவன் ஏற்கவேண்டும் என்பது முன்னோர் வழக்கம். அக்காள் மகளை மணப்பது என்ற பழக்கமும் பெரிதும் பரவியுள்ளது; அதனால் அக்காள் மகளை முறைப்பெண் என்பர். முறைப்பெண்ணுக்கு உரியவர் இசையாவிட்டால் (வேண்டாம் என மறுத்தால்) மட்டுமே, வெளியே திருமணப் பேச்சுவார்த்தை தொடங்கலாம். சில சாதி களில் அவருக்கு ஏதாவது நஷ்ட ஈடு கொடுக்கவேண்டும்; அல்லது வேறு வழிகளில் அவரைத் திருப்தி செய்து அவரும் அவர் தாயாரும் மனம் கோணாது திருமண நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ள வழி வகுப் பார்கள். அடுத்த பெண்ணை அவருக்கு மணம்செய்து வைப்பதாக உறுதி கொடுப்பதும் உண்டு.

சாதிக் கட்டுப்பாடுகளை அனுசரிப்பது, ஒவ்வொருவரும் கடைப் பிடிக்கவேண்டிய ஆன்மீகக் கடமையாகவும் கொள்ளப்படுகிறது.

## பிறப்பு

குழந்தை—குறிப்பாக முதல் குழந்தை—பிறப்பது எந்த வீட்டிலும் குடும்பத்திலும் ஒரு முக்கியமான நிகழ்ச்சி; மகிழ்ச்சி நிறைந்தது. செல்வம் நிறைந்திருந்து, மணமாகிப் பல்லாண்டாகியும் குழந்தைப்

பேறு பெருத குடும்பத்தில் குழந்தை பிறந்து விட்டால், அங்கு ஏற்படும் இன்பமும் களிப்பும் எல்லையற்றதாக இருக்கும்.

கடுமையான வெப்பத்தால் உடல் பாதிக்கப்படுகிறது. இதற்கு மருந்தாக, பெரும்பாலான தமிழர்கள் வாரத்தில் இரண்டு நாட்கள் தங்கள் உடம்பில் நல்லெண்ணெய் தேய்த்துப் பிறகு குளித்து, குளிக்கும்போது சிகைக்காயையும் உடம்பில் தேய்த்துக் கொள்ளு கின்றனர். எண்ணெய் தேய்த்துக்கொள்ள ஏற்பட்ட கிழமைகள் ஆடவருக்குப் புதனும் சனியும், பெண்டிருக்குச் செவ்வாயும் வெள்ளியும். ஏன் இருபாலாரும் ஒரே கிழமைகளில் எண்ணெய் முழுக்கு ஆடக்கூடாது? இதற்கு மரபு வழியில் சொல்லப்படும் காரணம், எண்ணெய் நீராடும் நாட்கள் ஓய்வு நாட்களாக — குறிப் பாக ஆண் பெண் சேர்க்கையிலிருந்து ஓய்வுபெறும் கிழமைகளாக இருக்கவேண்டும் என்பதே. எனவே, பழந்தமிழர் கடைப்பிடித்த குடும்பக் கட்டுப்பாட்டு முறையாக இதைக் கருதலாம்.

எந்தெந்த உறுப்புக்களில் எண்ணெய் தேய்த்துக் கொள்ளலாம் அல்லது தேய்க்கக்கூடாது என்பது பற்றிப் பல கருத்துக்கள் நிலவு கின்றன. காது, வயிறு ஆகிய இடங்களில் எண்ணெய் தேய்க்கக் கூடாது என்று சிலரும், கண்களிலும் உள்ளங்கால்களிலும் எண்ணெய் படவேண்டும் என்று ஏனைய சிலரும் சொல்லுவார்கள். இதோ ஒரு நாட்டுப்பாடல்:

> 'விட்டுக் கெட்டது காது
> விடாமல் கெட்டது கண்
> தொட்டுக் கெட்டது வயிறு
> தொடாமல் கெட்டது காலு.'

இதன் பொருள்: சிறு குச்சிகளைக் காதில் விட்டுக் குடைந்தால், காது செவிடாகிவிடும். அளவு மீறிச் சாப்பிட்டால் வயிறு கெடும். ஒப்பனைப் பொருள்களை ஒரு பெண் தக்கவாறு பயன்படுத்திச் சீவிச் சிங்காரித்துக் கொள்ளாவிட்டால் அவளுடைய இயற்கையான கண் அழகு கூடக் கெட்டுவிடும். கால், அதாவது பாதம், மிக முக்கியமான உறுப்பு. அதையும் நன்கு பேணி அழகுபடுத்தவேண்டும்.

கருவுற்றதும் ஒரு பெண் தனியே உறங்கக்கூடாது. இருட்டிய பிறகு வெளியே போகக்கூடாது. நறுமணப் பொருள்கள் கலந்த உணவு வகைகளை விடுத்து, பத்தியமாகச் சாப்பிடவேண்டும். கிரகணங்கள் தீண்டியிருக்கும் காலத்தில், கால்களை ஆட்டாமல் படுத்துக்கொள்ளவேண்டும். வயிற்றில் குழந்தையிருக்கும்போது,

அவள் ஆறுகளைக் கடக்கவும் மலை ஏறவும் கூடாது. போட்டோப் படம் எடுத்துக் கொள்ளவும் கூடாது.

கரு உண்டாகிய ஐந்து அல்லது ஏழாவது மாதத்தில் வளைகாப்பு என்று ஒரு சடங்கு உண்டு. அப்போது கருவுற்றவளுக்குப் புது வளையல்களை வழங்குவார்கள். அவளுடைய மாமியாரோ நாத்தனாரோ அவளைக் கோயிலுக்கும் வளையல் கடைக்கும் அழைத்துச் செல்வர். வசதியுள்ளவர்கள் வளையல்காரனுக்குச் சொல்லி அனுப்பி, அவனை வீட்டுக்கு வரவழைத்து விடுவார்கள். புது வளையல்கள் அணிவது, சடங்கின் முக்கியமான பகுதி. வளையல் போட்டுக் கொண்ட பிறகு அவள், வீட்டில் கூடியிருக்கும் வயதான ஆடவர் பெண்டிரின் வாழ்த்துக்களை (ஆசிர்வாதங்களை)ப் பெற்றுக் கொள்ளுவாள்.

ஆறாவது அல்லது எட்டாவது மாதத்தில் சீமந்தம் என்ற ஒரு சடங்கு நிகழும். அன்று யாகத் தீ மூட்டி, கணவனும் மனைவியும் அதை வலம் வந்து பிள்ளைப்பேறு நலமாகவும் எளிதாகவும் நிகழ இறையருளை வேண்டுவார்கள். முதல் மகப்பேற்றில் ஆண் குழந்தை பிறக்கவேண்டும் என்று வயிற்றுப்பிள்ளைக்காரி பிரார்த்தனை செய்வதும் வழக்கம். முதலில் பெண் குழந்தை பெற்றவளிடம் அவள் கணவனும் அவனுடைய தாயும் அவ்வளவு பிரியமாக இருப்பதில்லை; அவர்களுடைய மனக்குறை ஆண் குழந்தையை அவள் பெற்றெடுக்கும் வரை தீராக் குறையாகவே இருந்துவரும்.

மனைவி கருவுற்றிருக்கும்போது வைதீகமான பிராமணர்கள் முகச் சவரம்கூடச் செய்துகொள்ளக்கூடாது, என்பது முன்னைய மரபு. கத்திபடுதல், மனைவி வயிற்றுக்குள் அவன் விதை போட்டு வளர்ந்து வரும் குழந்தைக்குக் கேடு விளைக்கும் என்பது முன்னர் நிலவிய நம்பிக்கைகளுள் ஒன்று.

சித்திரை மாதம் முதுவேனிற் காலம். அப்போது குழந்தை பெறுவது, உடல்நலத்துக்கு ஒவ்வாதது. ஆகையால் அதைத் தடுக்க, சில ஏற்பாடுகள் வழிவழியாகக் கடைப்பிடிக்கப்படுகின்றன. பத்து மாதம் முன்னர், அதாவது ஆடி மாதத்தில் இளம் கணவன் மனைவியர் சேருவதற்குத் தடைவிதித்துவிடுவர். ஆடிக்கு அழைத்தல் என்ற பெயரால், பெண்ணைப் பெற்றவர்கள் அவளைத் தங்கள் வீட்டுக்கு ஆனி மாத இறுதியில் அழைத்து வருவார்கள். ஆவணி பிறந்த பிறகே அவள் தன் கணவன் வீட்டுக்குச் செல்லலாம். 'பகுத்தறிவு' என்ற பெயரில் இதுவும் இப்போது மடிந்துவரும் ஒரு சடங்கு ஆகிவிட்டது. ஆடிக்கு அழைத்தலுக்குப் பதிலாக,

பெண்ணின் பெற்ருேர்களிடம் ஒரு தொகையை வசூலித்துக் கொண்டுவிடும் வழக்கம்கூட, சில சாதிகளில் பரவி விட்டது.

குழந்தையைப் பெற்றெடுத்த பிறகு, தாயும் சேயும் இரண்டு வாரங்களுக்கு ஏனையோரிடமிருந்து தனித்து, குறிப்பிட்ட இடத்தில் வைக்கப் படுகின்றனர், குழந்தை பிறந்த ஏழாவது அல்லது பதினேராவது நாளில், உறவினர் கூடி, குழந்தையை நீராட்டி, அலங்கரித்து, தொட்டிலில் வைத்து ஆட்டுவர். பாட்டன் அல்லது அந்தக் குடும்பத்தில் அண்மையில் காலமான ஒருவர், ஆகியோர் பெயரைக் குழந்தைக்கு இடுவதே பெரும்பாலும் பழக்கம். தெய்வத்தின் பெயரும் இடப்படும். எருக்கால் ஆன ஒரு கயிற்றைக் குழந்தையின் இடுப்பில் அணிவிப்பதும் நாய் உருவம் பொறித்த செப்பு நாணயத்தையோ அல்லது பிறை உருவம் உள்ள செப்புத் தாயத்தையோ அல்லது மந்திர சக்தி படைத்த தாயத்தையோ, தொப்புள்ளிலிருந்து வெட்டிய சிறு பகுதியை அதனுள் வைத்து, குழந்தைக்கு அணியும் பழக்கமும், சில சாதிகளில் நிலவுகிறது. சிவப்பு, வெள்ளைக் கண்ணுடி மணிகள் கோத்த மாலையை அல்லது மந்திரித்த கறுப்புக் கயிற்றைக் குழந்தையின் கழுத்தில் அணிவிப்பதும் உண்டு.

தமிழ்நாட்டுக் கிறிஸ்துவர்கள் குழந்தை பிறந்த ஏழாம் நாளில்—கூடுமானவரை ஞாயிற்றுக்கிழமையன்று—குழந்தையைத் தங்கள் தேவாலயத்துக்குக் கொண்டுபோய், குழந்தைக்குப் பெயர் வைப்பார்கள். இந்த விழாவுக்கு ஞானஸ்நானம் என்று பெயர். இவ்விழாவில் குழந்தையின் தாயாராக யாராவது உறவினர் ஒருவர் சில சடங்குகளைச் செய்வார். அவளுக்கு 'ஞானத் தாயார்' என்று பெயர். தேவாலயம் வழங்கும் ஞானஸ்நானச் சான்றிதழில் இயல்பான பெற்ருேர்களின் பெயருடன் ஞானத் தாய் — தந்தையர் பெயர்களும் பதியப்பட்டிருக்கும். மிகக் கூடுதலான தடவை ஞானத் தாயாராக இருந்திருப்பவர்கள் சமுதாயத்தில் பெரிதும் மதிக்கப் படுகிருர்கள்.

பழநி மலைகளில் வாழும் முதுவர் என்ற இனத்தார், குழந்தை பிறந்து மூன்ரும் நாளில் தாயையும் சேயையும் ஆற்றில் அல்லது ஆற்று நீரில் நீராட்டுகின்றனர்.

குழந்தை பிறந்ததும் செய்யப்படும் முக்கிய நிகழ்ச்சிகளுள் ஒன்று, காது குத்துவது. மற்ருென்று முடி இறக்குவது. தலைமுடியைச் சிரைத்து, குழந்தையைக் குளிப்பாட்டி, புத்தாடை உடுத்தி, காதில் துளைபோட்டு கடுக்கன் (காதோலை என்றும் சொல்லுவர்) அணிவிப்

பார்கள். இவ் விழாவுக்கு உறவினர்கள் திரளாகக் கூடுவார்கள். இதன் பிறகு குழந்தைக்குக் கோவணம் அணிவிப்பது அல்லது கால்சட்டை போன்ற ஒரு சிறு துணியை உடுத்துவது முதலிய பழக்கங்கள் அன்றாட நடைமுறையாகிவிடும். வெள்ளி அல்லது தங்கத் தகட்டில் இலை வடிவமாகச் செய்து குழந்தைகளின் இடுப்பில் அணிவித்து, ஆண்குறியும் பெண்குறியும் பிறர் கண்ணில் படாதவாறு அந்தப் பதக்கங்கள் தொங்கவிடப்படும்.

பள்ளிக்குச் செல்லும் பருவம் வந்ததும் சிறுமிகள் மூன்று சடைகளாகத் தொங்கவிடும் வகையில் தங்கள் கூந்தல்களை நீளமாக வளர்த்து அழகுபெறப் பின்னிக் கொள்ளுகிறுர்கள். பெண்கள் பள்ளிகளில் இவ்வகையில் போட்டிகளையும் நடத்துகிறுர்கள். கூந்தல் அலங்காரத்தில், சிறு வயதிலிருந்து பெண்கள் காட்டும் ஈடுபாடும் அவற்றில் மணம் நிறைந்த மலர்களைவைத்து ஒப்பனை செய்து கொள்வதும் ஒரு கவின் கலையாகச் சிரிய வளர்ச்சிபெற்று, ஆடவர் மனத்தையும் கவர்ந்துள்ளன. வெளிநாடுகளிலிருந்து தமிழ்நாட்டுக்கு வருகைபுரியும் ஆடவரும் பெண்டிரும் இவற்றைக் கண்டு மூக்கின் மேல் விரல்வைத்து வியக்கின்றனர், வயது ஆகஆக, மங்கை, மடந்தை, பேரிளம்பெண் முதலிய ஒவ்வொரு பருவத்திற்கும் ஏற்ற வாறு பெண்களின் தலை முடிச்சு வெவ்வேறு வடிவம் எடுத்து, இறுதியாக 'கொண்டை' என்னும் பெயர் பெறுகிறது. செயற்கைக் கூந்தல்களும் இடைச்செருகல்களாகப் பரவிவிட்டன.

### பெண்கள் பருவம் அடைதல்

ஒரு பெண் பருவம் அடைவது, சமூக வாழ்வில் பெரியதொரு நிகழ்ச்சியாகக் கொண்டாடப்படுகிறது. பிராமணரல்லாத சில சாதி களில், அந்தப் பெண்ணுக்குக் கணவனைத்தேட ஒரு வாய்ப்பாக, இந்தச் சடங்கு விளம்பரப்படுத்தப்படுகிறது. உறவினர்களும் நண்பர்களும் திரளாகக் கூடி, அவளுக்கு நீராட்டி, அவளைத் தனி இடத்தில் இருக்கச் செய்து, வயிறு புடைக்க அவளுக்குச் சுவையும் சத்தும் நிறைந்த உணவுகளைப் படைப்பார்கள். அவளுடைய கூந்தலிலிருந்து எடுத்த பூவை, நல்ல நேரம் பார்த்து, வீட்டுக் கூரையில் ஓட்டுக்கு அடியே வைப்பதும், ஒன்பதாம் நாளில் அதை வெளியே எடுத்து அதன்மீது பால் ஊற்றிப் பிறகு மண்ணுக்குள் புதைப்பதும், சில சாதிகளில் வழக்கம். அதன் பின்னர், தீட்டாக இருந்த தனி இடத்திலிருந்து விடுவிக்கப்பட்டு, எல்லோருடனும் சேர்ந்து வீட்டின் முக்கிய பகுதிகளில் அவளும் இருந்துவருவாள்.

'கண் ஏறு' படுவதிலிருந்து காக்க, ஆரத்தி எடுத்து அவளை வீட்டுக்குள் அழைத்துச் சென்று, வந்திருக்கும் அனைவர்க்கும் பெரிய விருந்து நடத்துவர். பூப்பெய்திய பெண்ணுக்கு அன்று பலரும் பரிசுப்பொருள்களை வழங்குவார்கள்.

பூப்பெய்துவது, திருமணம் ஆகிய இரண்டு நிகழ்ச்சிகளுக்கும் இடையே, பெண் சாந்துப்பொட்டு வைத்துக்கொள்ளுவாள்; கண்களுக்கு அஞ்சனம்(மை) தீட்டிக் கொள்ளுவாள். வசதி உள்ள குடும்பங்களில், பூப்பெய்திய பெண் தன்னுடைய மிக நெருங்கிய உறவினர் தவிர வேறு ஆடவர் கண்ணில் படுவதில்லை. அவள் எத்தகைய பூக்களைச் சூடிக்கொள்ளலாம், என்னென்ன நகைகளை அணிந்துகொள்ளலாம், கூந்தல் அலங்காரம் எவ்வாறு இருக்கலாம் என்பதற்கெல்லாம் பலவகையான கட்டுப்பாடுகள் உண்டு. இப்போது கன்னிப்பெண்களும் கல்லூரிகளில் படிக்கிறார்கள், அலுவலகங்களில் ஆடவர் செய்யும் பணிகளைச் செய்கிறார்கள். இந்நிலையில் அவர்களுடைய நடை உடை பாவனைகளிலிருந்து அவர்களுடைய சாதியையோ, திருமணம் ஆனவளா கன்னிப்பெண்ணா என்பதையோ, தெரிந்துகொள்ள முடியவில்லை. ஆடவரா பெண்டிரா என்பதைக்கூட, உடனே தெரிந்துகொள்ள இயலவில்லை, சற்று கூர்ந்து கவனித்துத்தான் அறிய நேருகிறது!

மரபிலிருந்து விலகிச் செல்லும் இயல்பு, விதவைகளிடமும் பரவி விட்டது. படித்த பெண்களில் பலர் பழைய சம்பிரதாயங்கள், ஆசாரங்கள், சாதிக் கட்டுப்பாடுகள் ஆகியவற்றிலிருந்து அடியோடு விடுதலை பெற்று, தங்கள் மனம் போலவும் தடையின்றியும் கவலையில்லாமலும் வாழ விரும்புகின்றனர், அவ்வாறே வாழ்கின்றனர்.

## பையன் வயது அடைதல்

செட்டிநாட்டில் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் பையன்களுக்கு 'கார்த்திகைப் புதுமை' என்ற சடங்கையும் பெண்களுக்கு 'திருவாதிரைப் புதுமை' என்ற சடங்கையும் செய்து வருகிறார்கள். 13வது வயது அளவில் இந்நிகழ்ச்சியை ஒவ்வொருவருக்கும் நடத்துவது, அண்மைக்காலம் வரை பழக்கமாகவும் சமூகக் கடமையாகவும் இருந்தது.

கார்த்திகைப் புதுமையைக் கார்த்திகை மாதத்தில் மட்டுமே அதுவும் திருக்கார்த்திகை நாளிலேயே செய்யவேண்டும். இவ்வாறே திருவாதிரைப் புதுமை மார்கழித் திங்களில் திருவாதிரை நட்சத்திரத்தில் கொண்டாடப்படவேண்டும். இச் சடங்குகளால், உரியபையன்

அல்லது பெண், தன் வாழ்க்கையில் ஒரு பொறுப்பையும் அந்தஸ்தை யும் பெறுகிறுன், அல்லது பெறுகிருள். யூதர்களிடமும் இத்தகையை சடங்குகள் காணப்படுகின்றன. அவர்கள் நடத்தும் விழாவுக்கு **பார் மிட்ஜ்வாஹ்** என்று பெயர்.

தாய்வழி தந்தைவழி உறவினர்கள் இவ்விழாக்களில் கூடி, உரிய பையனையும் பெண்ணையும் வாழ்த்துவர். சடங்குக்கு உரிய பையன் அல்லது பெண் நன்கு உடை உடுத்தி, அனுபவம் பெற்றவர்கள் உதவியால் அலங்கரிக்கப்பெறுவர். அணிகலன்களும் அவர்களுக்கு அணிவிக்கப்பெறும்.

பையனுக்கு பொன்னுடை ஒன்றும் போர்த்தவேண்டும். அவன் தலையை ஒரு மைசூர்த் தலைப்பாகை சிங்காரிக்கும். குதிரை மீதேற்றி அவனைக் கோயிலுக்கு அழைத்துச் செல்லுவர். அந்நாளில் அந்தச் சிற்றூரில், நகரத்தார் இனத்து இளைஞர் பலருக்கும் கார்த்திகைப் புதுமை நடைபெறும். கோயிலில் அவர்கள் அனைவரும் சேர்ந்தாற் போல வழிபடுவர். பிறகு அவர்கள் அனைவரும் அவரவர் குதிரையில் ஏறி, தங்கள் இனத்தவர் வீடுகளுக்கெல்லாம் செல்லுவர். ஒவ்வொரு வீட்டு வாயிலிலும் குதிரை நின்றதும் ஆரத்தி எடுப்பர். பின்னர், குதிரை அடுத்த வீட்டுக்குச் செல்லும்.

கார்த்திகைப் புதுமை செய்துகொண்ட பிறகே இளைஞர்களுக்குத் திருமணப் பேச்சு ஆரம்பமாகும். எனவே, இந்தச் சடங்கை, திருமண விளம்பரம் எனலாம். பெண் வைத்திருப்பவர்கள் இந்த விழாக்களில், பையன்களைக் கூர்ந்து கவனித்து, பிறகு அவர்களைப் பற்றி விசாரித்துத் திருமணம் முடிப்பது வழக்கம்.

கார்த்திகைப் புதுமை செய்துகொண்டதும், அந்த இளைஞன் சில உரிமைகளைப் பெறுகிறுன். கார்த்திகைப் புதுமைக்குமுன் இறப்பவர் குழந்தைகள்போலப் புதைக்கப்படுவார்கள். அந்த நிகழ்ச்சிக்குப் பிறகு இறப்பவர்கள் எரிக்கப்படுவார்கள்; மேலும், பெரியவர்களுக்குச் செய்யப்படும் சவச் சடங்குகள் அனைத்தும் அவர்களுக்கும் செய்யப் படும்.

பெண்களுக்கு, திருவாதிரைப் புதுமை என்னும் சடங்கு செய்யப் படுவதை முன்னரே சொன்னேம். இது திருவாதிரை நட்சத்திரத்தில் நிகழ்வது. பெண் திலகமானஆதிரை என்பாள் மணிமேகலையில் குறிப்பிடப்பெற்றிருக்கிருள். மணிமேகலை பாத்திரம் பெற்றவுடன் ஒரு பத்தினிப்பெண்ணிடம் முதலில் பிச்சை பெற வேண்டுமென்ற நியதியை அறிந்து, ஆதிரை என்பாளிடம் பிச்சை கேட்டாள். "பாரக மடங்கலும் பசிப்பிணி யறுக" என்று சொல்லி அவளிட்ட

பிச்சை பெருகி, உலகப் பசிப்பிணியை நீக்கிற்று. அவ்வாறே இப்போது "திரு ஆதிரை" செய்து கொள்ளும் பெண்களும் வீடு வீடாகச் சென்று,

"ஆடி ஆடி வாரோம் அவரைக்காய் போடுங்க
பாடிப்பாடி வாரோம் பாடவரங்காய் போடுங்க
கூடிக்கூடி வாரோம் கொத்தவரங்காய் போடுங்க"

என்று இன்றும் உணவுப்பொருள்களையே விரும்பிக் கேட்டு வருகின்றனர். இந்நிகழ்ச்சிகள் மார்கழித் திரு ஆதிரையில், மணி வாசகரின் மார்கழி நீராடல் திருவெம்பாவையை ஆதாரமாக வைத்து, நடைபெறுகின்றன.

## விளக்கீட்டுக் கல்யாணம்

திருநெல்வேலி மாவட்டத்துக் கார்கார்த்த வேளாளர்களிடையே இந்தச் சடங்கு நிலவிவருகிறது. இது தை மாதம் முதள் நாள், அதாவது தைப் பொங்கலன்று, நடைபெறும். இதை 'சின்னக் கல்யாணம்' என்று சொல்லலாம். இந்தச் சாதியைச் சேர்ந்த பெண் குழந்தைகள் எல்லோரும் தங்களுடைய ஏழாவது அல்லது ஒன்ப தாவது வயதில் (பத்துப் பவளங்களும் ஒன்பது தங்கக் குமிழ் மணி களும் கோத்த ஒரு தங்கச் சங்கிலியான) நவமணியை அணிந்து கொள்ள வேண்டும். அதை அவர்கள் கழுத்தில் தாய்வழிப் பாட்டனோ பாட்டியோ, தாய் மாமனோ அவர் மனைவியோ கட்டு வார்கள். பிராமணக் குருக்கள் ஒருவரும் வந்து சில சடங்குகளைச் செய்வார். பெண்ணுக்கு வெண்கல விளக்கு ஒன்று வழங்கப் பெறும். அவள் அதைப் பத்திரமாக ஏற்றி வைக்கவேண்டும். அவளுக்குத் திருமணமாகும் வரை அவள் கழுத்தில் நவமணிமாலை தொங்கும். திருமணத்தன்று, கழுத்தில் கட்டப்படும் தாலியுடன் நவமணிமாலையின் நினைவாக அதிலிருந்து ஒரு சின்னஞ்சிறுபகுதி இணைக்கப்படும்.

## திருமணம்

திருமணங்கள் அவரவர் சாதிக்குள் செய்யப்படுகின்றன. சாதி எல்லைக்குள் கூட, பையனோ பெண்ணோ விரும்பியவரைத் திருமணம்

செய்து கொள்ள இயலாது. சுதந்திரத்துக்குப் பிறகு, அங்கும் இங்குமாக, கலப்புத் திருமணங்களும், மதத்துக்கு அப்பாற்பட்ட திருமணங்களும் கூட நடைபெற்றிருக்கின்றன. மதம் மாறித் திருமணம் செய்துகொள்பவர்கள் பெரும்பாலும் தங்கள் தங்கள் மதப் பழக்கங்களைப் பின்பற்றுகின்றனர். அவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகள் தங்கள் விருப்பப்படி எந்த மதத்தையாவது கடைப் பிடிக்கின்றனர். கலப்புத் திருமண மணமக்களைப் பெரும்பாலான மக்கள் கேவலமாக நினைத்துவந்தனர், அவர்கள் பல தொல்லை களுக்கு ஆளாக்கப்பட்டதைப்பற்றி நாட்டுப்பாடல்கள் உண்டு. முத்துப் பட்டன் என்பவனின் கலப்புத் திருமணக் கனவு கைகூடிற்று: ஆனால் உயர்ந்த சாதியார் அவனுக்குத் தொந்தரவு கொடுத்து வந்தார்கள். கீழ்ச்சாதிப் பெண்ணுடன் தொடர்புகொண்டால் அந்தத் தொடர்பால் பிறக்கும் குழந்தைகளுக்குச் சட்டப்படி பிறந்த குழந்தைகளுக்குச் சமமான உரிமைகள் கிடைக்காதே என்று உயர் சாதியினரில் முன்னேற்றக் கருத்துடையவர்கள் வருந்தினர்; கவலைப்பட்டனர்.

யார் யாரைத் திருமணம் செய்துகொள்ளவேண்டும் என்பது கடவுளால் ஏற்கெனவே முடிவுசெய்துவைக்கப் பட்டிருப்பதாகப் பாமர மக்கள் நம்புகின்றனர். இத்த நம்பிக்கைக்கு 'கூட்டு எழுத்து' என்று பெயர். "என் மகனுக்கு மதுரையில் ஒரு வீட்டில் கல்யாணம் பேசினோம், நடக்கவில்லை. கூட்டெழுத்து திருநெல் வேலியில் நடக்கவேண்டும் என்று இருந்திருக்கிறது" என்பார்கள். ஆகையால் ஜாதகம் பார்த்துத்தான் பெரும் பாலான திருமணங்கள் நாட்டுப்புறத்தில் செய்யப்படுகின்றன. கோயிலில் பூக்கட்டிப் பொருத்தம் பார்ப்பதும் உண்டு. இதன் பிறகு கொடுக்கல் வாங்கல் கள், சீர்வரிசைகள் ஆகியவற்றை இருசாராரும் விவரமாகப் பேசி முடிவு செய்துகொள்கிறார்கள். பல திருமணப் பேச்சுக்கள் இத்தக் கட்டத்தில் முறிவடைகின்றன. இந்தச் சிக்கல்களைக் கடந்து விட்டால், திருமணத்தை உறுதி செய்வதற்கும் (நிச்சயதார்த்தம்), திருமணத்திற்கும் நாள் குறிக்கப்படும். இரு சாராரின் உறவினர்களும் நண்பர்களும் பெரிதும் முயன்று, திருமணப் பேச்சுக்கள் முட்டுப் பாடின்றி நிறைவேறவும், பேசி முடிந்த திருமணங்கள் இனிது நிகழவும் அரும்பாடுபடுகின்றனர். ஆயிரம் பொய்யைச் சொல்லி யாவது ஒரு திருமணத்தை முடித்துவைப்பது புண்ணியம் தரும், என்று தமிழர் பலர் நினைக்கிறார்கள்.

அத்தை மகளை, அல்லது மாமன் மகளைத் திருமணம் செய்து கொள்ளும் பழக்கம் தமிழ்நாட்டில் பல சாதிகளிலே நிலவுகிறது. சில சாதிகள் இத்தகைய திருமண உறவுக்குத் தடை விதித்துள்ளன. ஒரே கோத்திரத்தார் (அதாவது ஒரு மூதாதையர் வழி வந்தவர்கள்) தங்களுக்குள் திருமணம் செய்துகொள்ளலாகாது. மறவர், யாதவர், நாடார் ஆகிய சில சாதிகளில் பெண்வழி மரபில் வந்த கிளை என்ற பிரிவு உண்டு. ஒரு கிளையினர் ஏனைய கிளைகளில்தான் திருமணம் செய்து கொள்வர். அத்தை மகள் அல்லது தாய் மாமன் மகளைத் தான் பெரும் பாலும் திருமணம் செய்துகொள்ளுவார்கள். திருமணப் பேச்சை, பையன் வீட்டார் ஆரம்பிக்கவேண்டுமா அல்லது பெண் வீட்டார் ஆரம்பிக்கவேண்டுமா என்பதைப் பற்றி, ஒவ்வொரு சாதியிலும் ஒரு பழக்கம் இருந்து வருகிறது.

வேளாண்மை வேலைகள் முடிந்து, விளைபொருள்களை விற்றதும், தை மாதத்தில் நாட்டுப்புற மக்கள் கையில் பணம் புழங்கும். அந்த மாதத்தில்தான் ஏராளமான திருமணங்கள் நடைபெறும். எனவே திருமணத்திற்கு ஏங்கும் இளைஞர்களைப் பார்த்து, 'தை பிறந்தால் வழி பிறக்கும்' என்று சொல்லுவது மரபு.

பொதுவாக, பெண்வீட்டில்தான் திருமண விழா நிகழும். முக்குலத்தோர், நாடார், சக்கிலியர், இன்னும் சில சாதிகளில் திருமணம் பையன் வீட்டில் நடைபெறும்; இவற்றுள் சில சாதிகள் இந்தப் பழக்கத்தை இப்போது மாற்றிக் கொண்டு வருகின்றன.

பையன்வீட்டார் பெண்வீட்டுக்கு ஊர்வலமாகச் செல்லுவர். மஞ்சள், தேங்காய், வாழைப்பழம், வெற்றிலை, பூ, பழங்கள், பெண்ணுக்குச் சேலை, தாலி ஆகியவை ஊர்வலத்தில் பலரறிய எடுத்துச் செல்லப்படுவது மரபு. மணவிழாவுக்கு ஒரு பந்தல் (செட்டிநாட்டில் முகூர்த்தம் முதலிய மங்கல நிகழ்ச்சிகளுக்குப் போடுவதைக் கொட்டகை என்றும், ஏனைய நிகழ்ச்சிகளுக்குப் போடுவதைப் பந்தல் என்றும், வேறுபடுத்திச் சொல்லுவார்கள்) போடப்படும். இது ஓலைகளால் வேயப்பெற்றிருக்கும். தஞ்சை மாவட்டத்தில் கண்ணையும் கருத்தையும் கவரவல்ல பந்தல்களைப் போடக்கூடிய கைவினைக் கலைஞர்கள் உள்ளனர்.

பந்தலுக்குக் கீழே மணமேடை போடப்படும். மணமகனுக்கு வலது பக்கத்தில் மணப்பெண் உட்காருவாள். திருமணச் சடங்கு—அதாவது தாலிகட்டுவது—முடிந்ததும், பெண் தன் கணவனுக்கு இடது பக்கத்தில் உட்காருவாள். இருவரும் கிழக்குப் பார்த்து இருப்பதே மரபு.

தேங்காய் உடைத்துக் கடவுளருக்குப் பிரார்த்தனை செய்யப்படும். தாலியை ஒரு தாம்பாளத்தில் வைத்து, மணவிழாவைக் காண வந்திருக்கும் பெரியவர்களிடம் கொடுத்து அவர்களுடைய ஆசீர்வாதத்தைப் பெறுவார்கள். அதன் பிறகே மணமகன் தாலியை (அவனுடைய தங்கை அல்லது அக்காள் உதவியுடன் அல்லது அவர்கள் சொல்லுகிற முறைப்படி) அணிவித்து மூன்று முடிச்சுக்களைப் போடுவான். அப்போது சங்கு முதலிய மங்கல இசைகள் ஒலிக்கும். கெட்டி மேளம் வாசிக்கப்படும்.

தேவர், அகம்படியர் ஆகியோரிடம் குலவையிடல் என்ற பழக்கம் உண்டு. திருமணத்தில் கூடியிருக்கும் பெண்கள் நுண்ணிய குரலில் ஒருசேர ஒலிப்பார்கள். இதற்கு, குலவை என்று பெயர். தாலி கட்டும்போது யாராவது அழுதால், அல்லது தும்மினால், அந்த ஒலிகள் யார் காதிலும் விழாதவாறு குலவையின் ஒலி மேலோங்கிநிற்கும்.

மணமக்கள் மீது மலர்களும் மஞ்சள் தடவிய அரிசியும் தூவப்படும். அவர்கள் இருவரும் மாலை மாற்றிக்கொண்டு மணமேடையை அல்லது யாகத் தீயை மும்முறை வலம் வருவது வழக்கம். பிறகு தங்கள் பெற்றோரையும், கூடியிருக்கும் பெரியவர்களையும் வணங்கி, அவர்களுடைய வாழ்த்தை வேண்டுவர். பதினறு பேறுகளும் பெற்று, ஆல்போல் தழைத்து அறுகுபோல் வேரோடி அரசு போல வாழ்க, என்று பெரியோர்கள் மணமக்களை மனமார, வாயார, வாழ்த்துவார்கள்.

பல சாதிகளில் திருமணச் சடங்கு பிராமணக் குருக்களால் நடத்தப்படுகிறது. நாடார்களும் கொங்கு வேளாளரும், தங்களுக்குள்ளேயே வயதான சான்றோர்களைக் கொண்டு, இந்தப் பணிகளை நிறைவேற்றிக்கொள்ளுகிறார்கள். பிராமணக் குருக்கள் இன்றியே திருமணம் நடத்தவேண்டும் என்று, சுயமரியாதை இயக்கத்தார் பிரசாரம் செய்து வருகிறார்கள். இந்தப் பிரசாரத்துக்கு ஓரளவு ஆதரவு இருந்துவருகிறது. இத்தகைய 'சுயமரியாதைத் திருமணம்' அல்லது 'தமிழர் திருமணம்' ஆகியவற்றில் அரசியல் தலைவர்களும் தமிழ்ப் புலவர்களும் சிறப்புரை ஆற்றி வருகிறார்கள். இவ்வகைத் திருமண முறை செல்லுபடியாகும் என்று 1968-ல் தமிழ்நாடு சட்டப் பேரவை, சட்டம் நிறைவேற்றியிருக்கிறது.

### பலவகையான பழக்கங்கள்

திருமணத்தை ஒட்டிய சுவையான பழக்கங்கள் சிலவற்றைக் கூறுவோம். திருமண விருந்தில் கண்டிப்பாகப் பருப்பு இடம்பெற

வேண்டும். 'பருப்பில்லாக் கல்யாணமா?' என்பது ஒரு பழமொழி, திருமணச் சடங்கில் கடைசிநாள் விருந்தில் ஒவ்வொரு சாதியினரும் அவரவர் பழக்கப்படி ஒரு குறிப்பிட்ட சிற்றுண்டியைப் படைப் பார்கள். அன்று எல்லோரும் விடைபெற வேண்டும் என்பதற்கு இது மறைமுகமான வேண்டுகோள் ஆகும்

திருமணத்தில் ஒருவகை விளையாட்டும் உண்டு. பல சாதிகளில் மஞ்சள் நீராடும் பழக்கம் நிலவி வருகிறது. மணமக்கள் மீது மட்டு மன்றி, இருபால் உறவினர்மீதும், மஞ்சள் கலந்த நீர் ஊற்றப்படும். முன்காலத்தில், திருமணங்களில் சம்மந்திச் சண்டை நடந்தது. அதனல் தொண்டை வறண்டு விடும். அதைக் குணப்படுத்தும் மருந்தாக, மஞ்சள் நீராடல் ஏற்பட்டிருக்க வேண்டும்.

மணமக்களை ஊஞ்சலில் இருத்திப் பெண்கள் எல்லோரும் சேர்ந்து ஊஞ்சலை ஆடவிட்டு உற்சாகமாகப் பாடுவது லாலிப் பாடல். தமிழகத்தில் இன்றும் இப்பழக்கம் இருந்து வருகிறது. நலுங்குப் பாடலும் லாலிப் பாடலும் இந்நாளிலும் பாடப் பெறுகின்றன. லாலிபப்பாடல், பெரும்பாலும் நவரோஜ் ராகத்தில் பாடப்பெறும். பெண்கள் பாடும்போது, நாதசுரக்காரர்களும் சேர்ந்து இப்பாடலை வாசிப்பார்கள்.

நலுங்கு நடைபெறும்போது, மணப்பெண் மஞ்சளையும் சிவப்பு வண்ணத்தையும் மணமகன் பாதத்தில் பூசுவாள். பிறகு அவனும் அவ்வாறே அவளுக்குப் பூசுவான் பிறகு அவள், அவன் உடலிற் சந்தனம் தடவுவாள். அவன் அவளுக்கு மலர் அணிவிப்பான். அவள் அவனுக்கு முகம்பார்க்கும் கண்ணுடியைக் காட்டுவாள். இருவரும் பூப்பந்து ஆடுவர், இனிப்புக்களை உண்பர். மேற்கண்ட ஒவ்வொரு செயலுக்கும் பொருத்தமான ஒரு பாடல் அவ்வப்போது பாடப்பெறும்.

பெண் வீட்டார் "எங்கள் அழகான பெண்ணுக்கு இந்த அழுமூஞ்சி மாப்பிள்ளையா" என்று பாடுவார்கள். மாப்பிள்ளை வீட்டார் இந்தச் சிடுமூஞ்சிப் பெண் எங்கள் சுந்தரனுக்குப் பொருத்தமோ என்றும் பாடுவார்கள். இதைப் பழைய கல்யாண வீடுகளிலே நலுங்குப் பாட்டு என்று சொல்வார்கள். அப்படி பழித்துப் பாடினலும் கூட மாப்பிள்ளையையும் பெண்ணையும் பாராட்ட வேண்டுமென்ற உள்ளம்தான் அவர்களுக்கு இருக்கும். அந்த முறையிலே நலுங்கு பாடுவது என்பது கேலி பேசவும் கிண்டல் பேசவும் சில சாதிகளில் கல்யாண வீடுகளில் பயன்படும்.

வைணவ சமயத்தைப் பின்பற்றும் பிராமணரல்லாதவர்களில், ஆசாரத்தை அணுவளவும் விடாத குடும்பத்தார், காட்டுத் தெய்வம் ஒன்றுக்குக் காணிக்கை வழங்குவார்கள். ஒரு புலியைக் கொன்ற பிறகுதான் திருமணம் செய்துகொள்ளும் உரிமையை ஒருவன் பெறுகிறுன் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் சில சடங்குகள் நிகழ்த்தப்படுகின்றன. உரிமையுடைய தாய்மாமன் தன்னுடைய முறைப் பெண்ணைத் தூக்கிக்கொண்டுபோய், பிறகு விடுவித்து அவளை மணமகனிடம் ஒப்புவிப்பான்.

தூத்துக்குடி கடலோரப் பகுதியிலும் இதுபோன்ற ஒரு சடங்கு கிறிஸ்துவர்களிடம் நிலவி வருகிறது. 'வாசற்படி மறித்தல்' என்பது இதன் பெயர். மணப்பெண்ணின் உறவினனுன முறை—மாப்பிள்ளைக்கு, ஏதாவது பணம், அல்லது நகை, அல்லது அவன் விரும்பும் பரிசுப் பொருளை, மணமகள் கொடுக்கவேண்டும். அதன் பிறகே முதல் இரவு அறைக்குள் மணமக்கள் செல்ல இயலும்.

சில சாதிகளில், சம்மந்திகளைத் திருமண விருந்து உண்ண, பாட்டுப் பாடி அழைப்பார்கள். சான்று:

"பருப்பும் அன்னமும் பாயசமும்
பலவகைக் கறிகளும் வந்தருளி
வேண்டு மட்டும் விதவிதமாகவே
தேங்காய் பச்சடி கிச்சடி டங்கர்
பறங்கிக் காய் கூட்டும் பலபல கறிகள்
மாங்காய் ஊறுகாய் மணமிகு சாம்பார்
ரசமுடன் திவ்ய பட்சணங்களுடனே"

**மலைச்சாதியாரின் திருமணங்கள்**

**பழியர்:** பழியர் திருமணம் எளிய முறையில் அமைந்தது. காதலர் இருவரும் தாங்கள் திருமணம் செய்துகொள்ளப் போவதாகப் பெரியோர்கள் முன்னிலையில் அறிவித்து அவர்களுக்குச் சுவை நிறைந்த விருந்தைப் படைக்கவேண்டும். இந்த அளவில் திருமணம் முடிவடைந்துவிடுகிறது. சில வேர்களைச் சேகரிப்பதும், வேட்டையாடி உயிரினங்களைக் கொன்று கொண்டுவந்து சேர்ப்பதும், ஆடவர் பொறுப்பு. சமையல் செய்வது பெண்களின் பொறுப்பு.

**தோதவர்:** தோதவர் (ஆங்கிலத்தில் 'TODAS' எனப்படுவர்), அமாவாசை உட்பட எந்த நாளிலும் திருமணம் செய்துகொள்ளுவர். அவர்களுடைய குடியிருப்புகளுக்கு 'மந்து' என்று பெயர். ஆள்

அனுப்பாமல் கம்பியில்லாத் தந்தியில் செய்தி அனுப்புவதுபோல ஒரு மந்திலிருந்து அடுத்த மந்துக்குத் திருமண அழைப்பை அறிவிக்க அவர்களிடம் தொன்றுதொட்டு 'குரல்' வகைகள் நிலவி வருகின்றன. இவ்வாறு 200 மந்துகளில் வாழ்பவர்கள் உடனே செய்தியறிந்து, நினைத்த மாத்திரத்தில் நிகழும் திடீர்த் திருமணங்களுக்கு ஆள் தவருமல் வந்து கலந்து கொள்ளுவர். 'விடிந்தால் கல்யாணம், பிடி வெற்றிலைபாக்கு' என்ற சொற்றொடர் தோதவர்க்குப் பொருந்தும்.

திருமணத்திற்கு முதல் நாள் ஒரு தோட்டம் அல்லது திறந்த வெளியில், பிரார்த்தனைக் கூட்டம் நடைபெறும். திருமணச் சடங்கு மரங்களினூடே நிகழும். ஒரு மரத்தின் நடுவே ஒரு துவாரத்தை உண்டாக்கி, அதனுள் விளக்கேற்றிவைத்து, அந்த ஒளி சாட்சியாகத் திருமணத்தை நடத்துவது அவர்களுடைய மரபு. முந்தின நாள் இரவில் அந்த இடத்தைச் சுத்தம் செய்து மணமக்கள் இருவருக்கும் பிரதிநிதியாக இரு குச்சிகளை நடுவார்கள். அந்தக் குச்சிகளுக்குக் கறுப்புத் துணிகட்டி அலங்கரித்துத் தெய்வமாக அவற்றை வழிபடுவார்கள். புதுப்பானையில் சமைத்த சோற்றை இந்தக் குச்சிகளுக்கு முன்னுல் இலைகளில் படைப்பார்கள். இந்த இடத்திற்கு ஒளி ஊட்ட, பெண்ணின் கைகளில் நான்கு இடங்களில் சற்று நெருப்புப் படும்படி செய்வார்கள். பெண்ணின் உறவான ஒரு பையன் பானை நிறைய நீர் மொண்டுவந்து இந்தக் குச்சிகளின்மீதும் தோதவர்களின் செல்வத்துக்கு அறிகுறியாக விளங்கும் எருமைமீதும் ஊற்றுவான். அதில் எஞ்சிய நீரை, மணமகன் மணமகள்மீது ஊற்றுவான். பிறகு, விருந்து உண்பர்.

மறுநாள், மீண்டும் தோதவர்கள் தங்கள் மரபுக்கு உரிய-உடை உடுத்தி ஒன்றுகூடுவர். அப்போது பெண்கள் வயதிற் பெரிய ஆடவனிடம் வாழ்த்துப் பெறுவார்கள். அனைவரும் கூடி ஒரு பானத்தை அருந்தியபின், மலைப்பகுதியில் உயர்ந்ததோரிடத்தில், தோப்புப் போன்ற பகுதிக்குச் செல்லுவார்கள். அங்கு ஒரு மரத்தில் நெய் விளக்கு ஒன்றைத் தொங்கவிடுவார்கள்.

மணமக்கள், பெரியவர்களை வழிபடுவார்கள். மணமகன் தாலியை வாங்கி, மணமகனின் தந்தையார் இசைவுடன், கூடியிருக்கும் அனைவரும் ஒரே குரலில் மங்கலப் பாடல்கள் பாட, மணமகள் கழுத்தில் கட்டுவான். எளிய உணவுடன் சடங்கு முடிந்து. அனைவரும் விடைபெறுவர்.

திருமணத்திற்கு முன்னும் திருமணத்தன்றும் ஏனையோரைப் போலவே மணமக்களும் வேறுபாடின்றியும் கூச்சம் இன்றியும் எல்லா

வேலைகளையும் பார்ப்பது இந்த இனத்தவர்களில் நாம் காணும் சிறந்த பழக்கம் எனலாம்.

**குன்னவர் :** குன்னவர்களுக்குத் திருமணத்தைப் போலவே நிச்சயதார்த்தமும் முக்கியமானது. திட்டமிட்டவாறு எவ்வித இடையூறும் இன்றித் திருமணம் இனிது நடைபெறவேண்டும் என்று பிரார்த்தனை செய்துகொள்வார்கள். கடவுளருக்குச் சந்தனமும் மலர்மாலையும் வழங்கி, பாட்டு மூலம் முன்கூட்டியே அவன் கருணைக்கு நன்றி கூறிவிடுவர். அத்தகைய பாட்டு ஒன்றைக் காண்போம்.

கோத்தேன் மாலையும்
குழச்சிட்டேன் சந்தனமும்
ஆருக்கு உகந்தது
கல்லு விநாயகம் அவருக்கு உகந்தது
தள்ளோலம்

## மண விலக்கும் மறுமணமும்

முக்குலத்தோரில் மணவிலக்கு சர்வசாதாரணமானது. கணவனோ மனைவியோ நினைத்த நேரத்தில் பிரிந்துகொள்ளும் உரிமை பெற்றிருக்கிறார்கள்.

அவர்களுக்குள் ஒருவர்க்கு மற்றவரைப் பிடிக்காவிட்டால், தங்கள் சாதியைச் சேர்ந்த வயதிற் பெரியவர்களான பஞ்சாயத்தார்களிடம் சென்று, தங்கள் குறையைத் தெரிவிப்பார்கள். அவர்கள் விசாரித்து, சட்ட நுட்பங்களை ஆராய்வதில் சிக்கிக்கொள்ளாமல், மனிதாபிமானத்துடன் தீர்ப்பு வழங்குவார்கள். இருவரும் மீண்டும் ஒத்துப்போக முடியுமா என்று பார்க்கவும், அவர்களுடைய கோபதாபங்களும் ஆத்திரப்பட்ட உணர்ச்சிகளும் குறையவும், ஒரு வாய்தா போட்டு அவகாசம் அளிப்பார்கள். அதன் பின்னரும் அவர்கள் வலியுறுத்தினால் மணவிலக்குக்கு வழி செய்து தீர்ப்பு வழங்குவார்கள்.

இதற்கு ஒரு சடங்கு உண்டு. கணவன் அல்லது அவன் வகையினர் அந்த வீட்டுக் கூரையின் ஒரு சிறு பகுதியைப் பிரித்து கையில் எடுத்து மனைவி வழியினரிடம் கொடுப்பார்கள். கூரை பிரிந்துவிட்டதுபோல, கணவனும் மனைவியும் பிரிந்துவிட்டதாக, இது பொருள்படும். குழந்தைகளை ஏற்று வளர்க்கும் பொறுப்பு தந்தையைச் சேரும்.

மனைவியிடமிருந்து விடுதலை பெற விரும்புபவன், பஞ்சாயத்தாருடைய சம்மதத்துடன் அவளுக்கு ஒரு தொகையைக் கொடுப்பான். மனைவியே விடுதலை விரும்பினால், திருமணத்தின்போது அவள் கணவனுடைய குடும்பத்தாரிடமிருந்து பெற்றுக்கொண்ட தொகையைத் திருப்பிக் கொடுத்துவிடவேண்டும். அவளுடைய கை வளையல்களைக் கழற்றிக் கணவனுடைய வீட்டு வாயிலில் வைத்துவிட்டுப் புறப்பட்டுவிடுவாள். பிறகு அவர்கள் இருவரும் தங்கள் தங்களுக்கு விருப்பமானவர்களைத் திருமணம் செய்துகொள்ளும் உரிமையைப் பெற்றுவிடுகின்றனர். மண முறிவுக்குப் பிறகு அவர்களுக்கிடையே சச்சரவு ஏற்படுவதில்லை. அவனுடைய முன்னாள் மனைவி, அடுத்த வீட்டில்கூட ஒருவனைத் திருமணம் செய்துகொண்டு வாழலாம். அதற்காக அவன் அவளுடன் சண்டைக்குப் போவதில்லை.

சில சாதிகளில் வியப்பான பழக்கம் ஒன்று உள்ளது. அது என்ன எனில், ஒரு பெண் வழுக்கி விழுந்து, சட்ட விரோதமாகக் குழந்தை பெற்றுங்கூட அவளைச் சாதியிலிருந்து தள்ளிவைக்கமாட்டார்கள்.

விவசாயத்தைத் தொழிலாக உடையவர்கள் தங்களுக்கு நிறைய சொத்து இருந்தால், மனைவியை விலக்காமலே, ஏற்கெனவே தொடர்புடையவளையும் மனைவியாக்கிக் கொள்ளுவர். இருதாரத் தடைச் சட்டம் அமலிலிருந்துங்கூட, அவர்கள் இன்னும் பல மனைவியரை மணந்துகொள்கின்றனர். அவர்களுடைய நோக்கங்களுள் ஒன்று வேளாண்மை வேலைக்கு உதவியாக, சுறுசுறுப்புள்ள பல மனைவியர் இருக்கட்டுமே என்பது. முக்குலத்தோரிலும் வேறு சில சாதிகளிலும் விதவைகள் மறுமணம் செய்து கொள்ளுகின்றனர்.

## மரணம்

உறவினர்களின் பாசம், இறந்தபின் நடத்தப்படும் இறுதிச்சடங்கு முதலிய நேரங்களில் உச்ச கட்டத்தில் காணப்படுகிறது. இவற்றில் தாய்வழி, மனைவிவழி உறவினர் செய்யவேண்டிய சில கடமைகள் உள்ளன. விதவைக்கு வெள்ளை ஆடை வழங்கும் உரிமையும் கடமையும் அவளுடைய தாய்வழி ஆடவனுக்கு உண்டு. இறுதிச் சடங்குச் செலவில் ஒரு சிறு பகுதியை அவன் ஏற்கவேண்டும்—அது பணமாகவும் இருக்கலாம், அல்லது தானியங்களை அன்பளிப்பதாகவும் இருக்கலாம். ஒரு குழந்தைக்குப் பெயரிடுவது அல்லது திருமணம்

ஆகிய விழாக்களில், குழந்தை அல்லது மணப்பெண்ணுக்கு, தாய் மாமன் நகை அல்லது ரொக்கப் பணம் நன்கொடையாகக் கொடுக்க வேண்டும். அக்காள் மக்கள் (ஆடவர், பெண்டிர்) திருமணங் களின்போது அவர்களை மணமேடைக்கு முறைப்படி அழைத்துச் சென்று, உரிய சடங்குகள் அனைத்தையும் செய்து வைப்பதும் அவனுடைய கடமையே ஆகும். நன்மையோ தீமையோ எத்தகைய நிகழ்ச்சிக்கும் உறவினர்களை அழைத்துக்கொண்டு, அக்காள் வீட்டிற்கு ஊர்வலமாகச் செல்லுவதும் அவன் பொறுப்பாகும்.

ஒருவர் ‘இறந்துவிட்டார்’ என்று எழுதுவது தமிழ் மரபு அன்று. இறைவன் திருவடி நிழல் எய்தினர், சிவபதவி அடைந்தார் என்று சைவர்களும், பரமபதம் அடைந்தார், பள்ளிபடை எய்தினர் என்று வைணவர்களும் எழுதிவருகின்றனர். ‘இயற்கை எய்தினர்’ என்று பகுத்தறிவாளர்கள் எழுதுகின்றனர்.

மார்கழித் திருவாதிரை நாளிலோ ஏகாதசி அன்றோ உயிர் நீப்பது ஒரு பேருகக் கருதப்படுகிறது. ஊரில் திருவிழா நடந்துகொண் டிருக்கும்போது ஒருவர் இறந்தால், அவருக்குக் ‘கொடுத்து வைத்தது அவ்வளவுதான்’ என்று சொல்லுவார்கள். காரணம், அந்நாட்களில் ‘கொட்டு மேளம்’ இராது.

சனிக்கிழமை அன்று ஒருவர் இறந்தால் அந்த வீட்டில் விரைவில் மற்றொரு சாவு நேரும் என்பது பொதுவான நம்பிக்கை. சனிப்பிணம் தனியே போகாது என்பர். சனிக்கிழமையன்று யாராவது இறந்து போவதால் ஏற்படும் கெடுதல்களைப் போக்க, வீட்டின் ஒரு சிறு பகுதியைப் பிரித்துக் கட்டுவது அல்லது பிணத்தைக் கொண்டுபோக புதிதாக ஒரு வாயிலை உடனே ஏற்படுத்துவது வழக்கம். சிலசமயம் பாடையில் ஒரு கோழியைக் கட்டிவிட்டு, பிணத்துடன் அதையும் புதைப்பார்கள் அல்லது எரிப்பார்கள்.

ஓர் ஆடவன் இறந்தால், அதனால் மிகவும் பாதிக்கப்படுபவள் அவனுடைய மனைவிதான். அவள் தன் நகைகளை எல்லாம் கழற்றி யும் கூந்தலைக் கலைத்தும் ஒப்பாரி வைப்பாள். செல்வம் நிறைந்த சாதிகளில் துக்க காலம் 12 முதல் 16 நாளாகவும், நாள்தோறும் நெற்றி வேர்வை நிலத்தில் விழ உழைத்துப் பிழைக்கவேண்டிய பாட்டாளி மக்கள் நிறைந்த சாதிகளில்—சமுதாயத்தின் அடிமட்டத் தில் இருப்பவர்களில்—மிகச் சில நாட்களாகவும் இருக்கிறது. நாட்டுப்புற சமுதாயத்தில்தான் இந்தச் சம்பிரதாயங்கள் கடுமை யாகக் கண்காணிக்கப்படுகின்றன. நகரங்களில், நேரத்தின்

அருமையை உணர்ந்து மிக விரைவில் சவச் சடங்குகளை முடித்து, அடுத்தடுத்துக் காத்திருக்கும் வேலைகளில் ஈடுபடுகின்றனர்.

இறந்தவரின் மிக நெருங்கிய உறவினர்களுக்கு அவர்களுடைய நண்பர்களும் சாதியினரும் ஆறுதல் கூறுகின்றனர். திருமணங் களுக்குப் போவதைவிட, இறந்த வீட்டுக்குச் சென்று துக்கம் விசாரிப் பது மிக முக்கியமான, தவிர்க்க முடியாத, கட்டாயமான சமூகக் கடமையாகக் கருதப்படுகிறது. அவ்வாறு போகத் தவறுவது பெரியதொரு குற்றமாகக்கூட மதிக்கப்படும். மிகவும் காலந் தாழ்த்தி துக்கம் விசாரிக்க யாராவது வந்தால் உரிய நேரத்தில் வராததைக் கண்டித்து, பெண்கள் தாங்கள் பாடும் ஒப்பாரிப்பாடல்களில் நயமாகச் சில வரிகளைச் சேர்த்து விடுவார்கள்.

இறந்த வீட்டுக்குச் சென்றால் தீட்டு ஏற்படும் என்பது பொதுவான ஐதீகம். எனவே, தங்கள் வீட்டுக்கு வந்து சேர்ந்ததும் முதல் வேலை யாகக் குளித்துத் தீட்டைப் போக்கிக்கொள்ளவேண்டும். அதன் பிறகே, அவர் சாப்பிடலாம், வீட்டின் முக்கிய பகுதிகளுக்குள் நுழையலாம் என்பது நீண்ட நெடுங்கால நடைமுறை.

உறவினர்கள்கூடி, இறந்தவர் உடலை இறுதியாகப் பார்த்த பிறகு, பிணத்தைக் குளிப்பாட்டி, நறுமணப் பொருள்களை ஊற்றிப் புத் தாடை அணிவிப்பர். அதன் பின்னர் விதவையைப் பிணத்தருகே அழைத்துவந்து, கணவன் உடலை அவளுக்கு இறுதியாகக் காண்பிப் பார்கள். ஏனைய உறவினர்கள் மும்முறை பிணத்தை வலம்வந்து, இறந்தவர்க்குக் கடைசி மரியாதை செலுத்துவர். இறுதியாக, அலங்கரிக்கப்பட்ட பாடைமீது பிணத்தை வைத்து மயானத்துக்கு எடுத்துச் செல்லுவார்கள். யார் யார் பாடையைத் தாங்கிச் செல்ல வேண்டும் என்பதற்கு ஒவ்வொரு சாதியிலும் விதி முறைகள் உள்ளன. பெண்கள், சுடுகாட்டுக்குள் செல்லும் வழக்கம் கிடையாது. அதனால்,

'வீடு வரை மனைவி
வீதி வரை உறவு
காடு வரை பிள்ளை'

என்ற பழமொழி ஏற்பட்டிருக்கிறது.

பிண ஊர்வலத்தில் வழியெங்கும், தப்பு, கொம்பு முதலிய அமங்கல வாத்தியங்கள் முழங்கும். பிணத்தைத் தூக்கிச் செல்லுபவர்கள் முச்சந்திகளில், மும்முறை சுற்றிப் பிறகு தொடர்ந்து செல்லுவார்கள். கெட்ட ஆவிகளை ஏமாற்றவும், மேன்மேலும் எமனின் கொடுமைகள்

தங்கள் ஊருக்கு நேராதிருக்கவும் இவ்வாறு செய்கிறார்கள். கோயிலுக்கு முன்னால் பிணம் செல்லும்போது, எந்த வாத்தியமும் வாசிக்கப்படுவது கிடையாது. கோயிலுக்கு மிக அருகே உள்ள வீடுகளில் யாராவது இறந்தால், பிணத்தை அப்புறப்படுத்தும்வரை கோயில் பூசைகள் நிறுத்திவைக்கப்பட்டிருக்கும்.

பிணத்தை எரிப்பதாயின், ஏரி, கண்மாய், ஆற்றுக்கு அருகேயுள்ள ஓர் இடத்திற்கு எடுத்துச் சென்று பிணமேடை அமைத்து, அதன் மீது பிணத்தை வைத்து எரிப்பார்கள். மறுநாள் "காடு ஆற்றும்" சடங்கு நிகழும். பெண்கள் உட்பட உறவினர் சென்று, இறந்தவரின் சாம்பலுக்கு இளநீர் முதலியன ஊற்றுவர். பிறகு, ஆடவர்கள் இறந்தவருடைய எலும்புகளைப் பொறுக்குவர்; பின்னர் இவை ஆற்றில் கரைக்கப்படும். கணவன்—மனைவியரில் முதலில் இறந்தவரின் எலும்புகள் எங்கே கரைக்கப்படுகின்றனவோ அங்கேயே மற்றவரின் எலும்புகளையும் கரைப்பது வழக்கம். மோட்ச தீபம் போடும் வழக்கத்தையும் சிலர் கடைப்பிடிக்கின்றனர்.

அந்தச் சாதி அல்லது குடும்பத்தின் பழக்கம், புதைப்பதாக இருந்தால், ஊர் எல்லையிலுள்ள புதை மயானத்துக்குப் பிணத்தை எடுத்துச் செல்லுவர். திருமணமாகாதவர்கள் இறந்தால், அவர்களுடைய பிணத்தைத் தாங்கும் பாடையில் மரத்தின் கிளை ஒன்றை ஒடித்துக் கட்டிவிடுவார்கள். குழந்தைகள் இறந்தால் கோடித்துணி (கச்சை) வாங்கி அதில் மஞ்சள் சாயம் காய்ச்சி அல்லது மஞ்சளில் தோய்த்து, தொட்டில் போலக் கம்புகளில் தொங்கவிட்டு, குழந்தையைத் தொட்டிலில் போட்டு, இடுகாட்டுக்கு எடுத்துச் செல்லுவது மரபு. எல்லாச் சாதிகளிலும் குழந்தைகளும் சிறுவர் [illegible] புதைக்கப்படுகிறார்கள். எரிப்பது வயது வந்தவர்கட்கு மட்டும் உரிய ஈமச் சடங்கு.

பிணத்துக்குத் தீ மூட்டுமுன், நெருங்கிய உறவினர் வாய்க்கரிசி போடுவர். மரக்கட்டைகளும் எரிபொருள்களும் மாட்டுச்சாணமும் வைத்துப் பிணத்தை மறைப்பார்கள். பிறகு மூத்தமகன் தலைமுடி முழுவதையும் சவரம் செய்துகொண்டு, தண்ணீர்க்குடம் தாங்கி மும்முறை பிணத்தை வலம் வந்த பின் அதன் முன்னால் குடத்தை உடைத்து, திரும்பிப் பார்த்தவண்ணமாக ஒரு நீண்ட குச்சியால் தீ மூட்டுவான். உறவினர் அனைவரும் ஏரி முதலியவற்றில் நீராடிய பின் இறந்தவர் வீட்டை அடைவார்கள்.

துக்கம் கொண்டாடப்படும் காலத்தில் நெருங்கிய உறவினர்கள் தங்கள் கண்ணீரைக் கவிதையிலும் வடிப்பார்கள். இறந்தவரின்

மனைவி, நெடுங்காலம், துக்கம்விசாரிக்க வருபவர்களிடம் ஒப்பாரி பாடுவதும் அப்பாடல்களில் பழைய நினைவுகளைச் சுவையுடனும் சோகத்துடனும் தெரிவிப்பதும் மரபுவழி இலக்கியத்துக்குச் சிறப்புத் தருவன.

கருவுற்ற பெண், பிள்ளைப் பேற்றுக்குமுன் இறந்துவிட்டால், அவள் நினைவாகச் **சுமை தாங்கிக் கல்** அமைக்கப்படும். அவள் வயிற்றில் உள்ள சுமையாகிய குழந்தையின் ஆவி அதில் தங்கட்டும் என்பது இதன் நோக்கம். நெடுஞ்சாலைகளில் இவற்றைக் காணலாம். தூண்கள் போன்ற இரு கற்களை நட்டு, அவ்விரண்டையும் தாங்கிக் கொள்ள அவற்றின் குறுக்கே பலகை போல ஒரு கல் போடப்படும். வழிப்போக்கர்கள் தங்கள் தலைச்சுமையை அவற்றில் வைத்து சற்று நேரம் ஓய்வுகொள்ள இவை உதவுகின்றன.

விபத்துக்கள் அல்லது தற்கொலையால் ஒருவர் இறந்தால், இறந்தவர் வீட்டுக்குக் கேடு நேரும் என்றும், இறந்தவருடைய ஆவி அவர் இறந்த (கிணறு அல்லது மரம் அல்லது வேறு) இடத்தில் சுற்றித் திரியும் என்றும், மக்கள் நம்புகிறார்கள்.

பிராமணர்களும் முஸ்லீம்களும் ஈமச்சடங்குகளை மிக எளிய முறையில் அமைதியாகவும் இசைமுழக்கம் இல்லாமல் மௌனமாகவும் செய்கிறார்கள். கிராமங்களில் ஒவ்வொரு மதத்துக்கும் சாதிக்கும் தனித்தனி மயானங்கள் உள்ளன.

சாவு நடந்த வீடு, தீட்டுப்பட்டதாகக் கருதப்படுகிறது. அங்கு, சில நாட்களுக்குச் சமையல் நிகழாது. பக்கத்து வீட்டுக்காரர்கள், அந்த வீட்டினருக்கு உணவு அனுப்புவர். துக்கம் கொண்டாடப்படும் காலத்தின் இறுதி நாளில் வீட்டை நன்கு மெழுகிக் கழுவுவதும் வெள்ளையடிப்பதும் கூட உண்டு. இறந்த இடத்தில் அல்லும் பகலும் ஒரு விளக்கு எரிய விடுவதும் வழக்கம். இறந்த ஆன்மாவுக்காக ஒரு பாத்திரத்தில் குடி தண்ணீர் வைப்பதும் உண்டு. துக்க காலத்தின் இறுதியில், இறந்துபோன ஆன்மாவைத் திருப்தி செய்ய ஏழைகட்கு உணவு படைப்பதும் வழக்கம்.

மரணத்திற்குப் பின்னும் மனித வாழ்வு தொடர்ந்து இருப்பதாயும், பாவம் செய்தவர்கள் நாயாக, வேறு விலங்குகளாக அடுத்த பிறப்பில் உருவம் எடுப்பதாயும், தமிழர் பலர் நினைக்கிறார்கள். பாவச் செயல்கள் பலவற்றைப் பூவுலகில் செய்தவர்களுக்கு, எமன் கொடுக்கும் தண்டனைகளைப் பற்றிய பல நம்பிக்கைகளும் கதைகளும் உலவுகின்றன.

**இறந்தவர்களின் ஆண்டுவிழாக்கள்**

பிராமணரல்லாத சில சாதிகளில் ஒருவர் இறந்து 16 நாட்கள் வரை, அவர் இறந்த கிழமை கொண்டாடப்படும். அவர் உடுத்தியிருந்த உடையைத் துவைத்து அன்று காட்சியில் வைத்து வழிபடுவர். அவருக்குப் பிரியமான உணவு வகைகளும் அன்று செய்து, வந்திருப்பவர்களுக்கு வழங்குவார்கள். பிராமணர்கட்கும் ஏழைகட்கும் துறவிகட்கும், இறந்தவர் நினைவாக அன்பளிப்புக்களை ஆண்டுவிழாவில் வழங்குவார்கள். அவ்விழாக்கள் உறவினர் அனைவரும் கூடும் வாய்ப்பாக மிளிரும்.

**சுமங்கலிகளுக்கு விழா எடுத்தல்**

கணவன் உயிருடன் இருக்கும்போதே உயிர் நீப்பவள் தெய்வமாக மதிக்கப்பெறுகிறாள். செட்டிநாட்டு நகரத்தார்களில் வழங்கும் பழக்கத்தைக் கூறுவோம்.

படைப்பு என்பது இறந்தவரின் உறவினர்களும் அவள் வழியினரும் அவளை நினைத்துப் பிரார்த்தனை செலுத்தவும் அவருடைய வாழ்த்தைப் பெறுவதற்குமான விழா. அன்று, இறந்த அம்மையார் நினைவாக உணவு படைக்கப்படும். பல குடும்பங்களில் இதற்காக வீட்டினுள் ஓர் அறை ஒதுக்கப்படும். அதன் பெயர் படைப்புவீடு. அது ஒரு பிரார்த்தனை மண்டபம் போன்ற சிறு கோயில்.

கெட்ட ஆவிகளைத் தடுப்பதற்காகவே படைப்பு நடத்தப்படுகிறது. சுமங்கலி இறந்த பிறகு அவள் பெற்ற பிள்ளைகள் கணவனின் பொறுப்பில் விடப்படுகிறார்கள். அவனும் மறுமணம் செய்துகொள்ளுகிறான். இரண்டாவது மனைவி, முதல் மனைவியின் மக்களை அன்புடனோ தன் குழந்தைகளுக்குச் சமமாகவோ, நடத்தாமல் இருக்கக்கூடும். இதைத் தடுப்பதற்காக, முதல் மனைவிக்குப் படைப்பு நடத்தி அவளுக்குக் கடவுளின் அந்தஸ்து வழங்கப்படும்.

படைப்புக்கு, குறிப்பிட்ட நாள் கிடையாது. அதில் முக்கியமாகக் கலந்துகொண்டு அதை நடத்துபவரின் வசதிக்கு ஏற்ப எப்போது வேண்டுமானாலும் எத்தனை தடவை வேண்டுமானாலும் படைப்பு நடத்துவார்கள். ஒரு திருமணம், ஒரு புதிய தொழில் தொடங்குவது, முக்கியமான வெளிநாட்டுப் பயணம் ஆகியவற்றையொட்டி, இறந்த அம்மையாருக்குப் படைப்பு ஏற்பாடு செய்யப்படும். நெருங்கிய உறவினர்களை அழைப்பதும் இறந்தவள் படத்தை வைத்து வழிபடுவதும் படத்தின் அருகே அவள் உடுத்திய உடைகளையும் அவள்

அணிந்த நகைகளையும் வைப்பதும் மரபு. அவள் விரும்பி உண்ட உணவுகளைச் சமைத்து, அவள் படத்தின் முன்பாகப் பெரிய இலை களில் அவற்றைப் படைப்பதும் பழக்கம்.

படைப்பினைக் காணவரும் பெண்கள் ஒவ்வொருவரும் தாங்களும் சுமங்கலியாக இறந்து, கடவுளராக மதிக்கப்படவேண்டும் என்று ஆசைப்படுவார்கள். அதனால் விதவையாக இருந்து துயரங்களுக்கு ஆளாவதையும் தடுத்துக்கொள்ளலாம் என்று எண்ணுவார்கள். அன்புக் கணவனிடமிருந்தும் பற்றும் பாசமும் நிறைந்த தம் குழந்தைகளிடமிருந்தும் பெண்கள் எதிர்பார்க்கும் ‘தாஜ் மஹால்’, படைப்பு விழாவே.

**மலைச்சாதியார்களின் ஈமச் சடங்குகள் :**
**நீலகிரிக் கோட்டர்கள்**

கோட்டா இனத்தவர் தேர்போன்று அமைத்த ஒரு பாடையில் பிணத்தைத் தூக்கிச் செல்லுவார்கள். இறந்த நாளில் இறந்தவரின் குடும்பத்துக்கு எல்லாப் பணிகளையும் அந்தச் சாதியினர் செய் வார்கள். இறந்தவரின் பாதத்தைத் தம் தலையால் தொட்டு வணங்கும் வழக்கம் இவர்களிடையே உண்டு. இதற்கு தவாமூத் சடங்கு என்று பெயர். இறந்தவரின் ஆன்மா சாந்தி அடையப் பிரார்த்தனை நிகழ்த்தப்படும். வர்தவ் தளம் என்னுமிடத்தில் இறந்த வரின் எலும்புகள் சேமித்துவைக்கப்பட்டிருக்கும். ஆண்டுதோறும் அந்த இடத்தில் ஒரு குறிப்பிட்ட நாளில், முந்திய ஆண்டில் இறந்த அனைவர்க்கும் சேர்த்து ஒரே சடங்காக ஆண்டு விழாக் கிரியை நடத்தப்படும். இதன் பிறகு விதவைகள் மறுமணம் செய்து கொள்ளும் உரிமை பெறுகின்றனர்.

**நீலகிரித் தோதவர்கள்**

தோதவர்களின் ஈமச் சடங்கு முறை சிக்கல் நிறைந்தது. புரியாத புதிர் என்றும் சொல்லலாம். எருமைகளை ஏராளமாகக் கொன்று இறந்தவனுடன் மேல் உலகுக்கு அனுப்பும் சடங்கு உண்டு. எருமைகளை விரட்டிப் பிடித்துக் கொல்லுவது ஆடவரின் ஆற்றலைச் சோதிக்கிறது. ஈமச் சடங்குகளில் தோதவர் பெருங் கூட்டமாகக் கூடி, கவர்ச்சியான உடைகளை அணிந்து ஆடியும் பாடியும் விருந்து உண்பர்.

# 5. தேரும் திருவிழாவும்

தமிழ்நாடு, கோயில்கள் மலிந்த பகுதி. அதனுல்தான் சமயச் சார்பு இல்லாத மாநில அரசுகூட, அதன் இலச்சினையில் கோயில் கோபுரத்தின் உருவத்தைப் பொறித்திருக்கிறது. கோயில் கோபுரத்தை இலச்சினையாகக் கொண்டு இயங்கும் இந்திய மாநிலம் தமிழ்நாடு ஒன்றே.

கோயில் என்ருல் திருவிழா இருக்கும். அதுபோல திருவிழா என்பதும் கோயில் தொடர்பின்றி நிகழாது. திருவிழாக்கள் மதத்தின் கூறுகள் மட்டும் அல்ல ; கலைகளை வளர்க்கவும் வியாபாரத்தைப் பெருக்கவும்கூட, திருவிழாக்கள் இன்றியமையாதன. அவை மக்களுடைய வாழ்வில் ஒன்றிவிட்டன. பிரிந்திருக்கும் குடும்பத்தார்—கணவன் மனைவி அல்லது மாமியார் மருமகள் —மீண்டும் கூடுவதற்கு ஒரு வாய்ப்பை (சில சமயம், ஒரு சாக்கு) திருவிழாக்கள் நல்குகின்றன. தனிப்பட்டவர்களின் மகிழ்ச்சி, குடும்பத்தில் களிப்பு, சமுதாயத்தில் குதூகலம்—இவைதான் திருவிழாக்களின் குறிக்கோள்கள்.

ஏகாதசி, கந்த சஷ்டி திருவிழாக்களில் பக்தர்கள் நோன்பு இருப்பார்கள். ஏனைய திருவிழாக்கள் அனைத்திலும் வயிருர உண்டு மகிழ்வர்.

### பருவகாலத் திருவிழாக்கள்

கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்று தமிழர்கள் இரண்டிரண்டு மாதங்களை ஒரு காலப்பகுதியாகக் கணக்கிட்டிருக்கின்ருர்கள். அவை முறையே மேகமூட்டமுடைய பருவம், மழைக்காலம், மாலைப்பனி, நள்ளிரவுப் பனி, கோடையின் தொடக்கம், கடுங்கோடை ஆகியவற்றைக் குறிப்பன.

ஓர் ஆண்டுக்காலத்தை, அவ்வாறு ஆறு, ஆறு மாதப் பகுதிகளாக வகுத்துள்ளனர். (1) உத்தராயணம்: இது நீண்ட பகற் பொழுதும் குறைவான இராப் பொழுதும் உடையது. தை முதல் ஆனி வரை உள்ள காலம். (2) தட்சிணயனம்: இது குறைவான பகற் பொழுதும் கூடுதலான இராப் பொழுதும் கொண்டது. மழைக்குணம் நிறைந்தது. ஆடி முதல் மார்கழி வரை உள்ள காலம்.

முதற் பகுதியில்தான் திருவிழாக்களை நடத்துவது மரபு. தட்சிணயனத்தின் தொடக்கத்தில் துறவிகள் சதுர்மாஸ்யம் என்ற விரதத்தைக் கடைப்பிடிப்பார்கள். சதுர்மாஸ்யம் என்பது நான்கு மாதக் காலம்; ஆனால் தமிழ்நாட்டில் இது பெரும்பாலும் இரண்டு மாதங்கள்தான் கடைப்பிடிக்கப்படுகிறது. இக்காலத்தில் துறவிகள் குறிப்பிட்ட ஓர் இடத்திலேயே தங்கிவிடுவார்கள். யாத்திரை மேற்கொள்வதில்லை. தங்கியிருக்கும் இடத்திலேயே இருந்து, சமய உரைகள் நிகழ்த்துவார்கள். அவர்களுடைய வாழ்க்கை முறையில், தியானமும் பக்தியும் ஏனைய மாதங்களைவிட இக்காலத்தில் கூடுதலாக இடம்பெறும்; விதிகளைக் கடுமையாகப் பின்பற்றுவார்கள்.

## கோயில் திருவிழாக்கள்

கோயில் திருவிழாக்கள் தமிழ்நாட்டைப்போல வேறு எங்கும் இவ்வளவு அதிகமாகவோ, விரிவாகவோ கொண்டாடப்படுவதில்லை என்று சொல்லலாம். தமிழ்நாட்டு மக்களில் 100க்கு ஏறத்தாழ 90 பேர் இந்துக்கள். இதனால் இந்துக்களின் திருவிழாக்களின் சாயல்களை ஏனைய மதத்தினர் கொண்டாடும் திருவிழாக்கள் சிலவற்றிலும் ஓரளவு காண்கிறோம்.

திருவிழாக்கள் வந்துவிட்டன என்றால் எவ்வளவோ பொருள்களை வாங்கவேண்டியதிருக்கிறது. கோயில்களுக்குக் காணிக்கை செலுத்த வேண்டும். விருந்தினரை, குறையின்றி உபசரிக்க வேண்டும். திருவிழாக்கள் மன மகிழ்ச்சியும் உள்ளக் கிளர்ச்சியும் உண்டாக்கிய போதிலும், குறிப்பாகவும் சிறப்பாகவும் பாமர மக்களுடைய பொருளாதாரம் இதனால் சீர்குலைகிறது. கடன் வாங்கிச் செலவு செய்யவும் நேரிடுகிறது. முன்காலத்தில் ஆடம்பரமாகக் கருதப்பட்ட செலவுகள் இப்போது இன்றியமையாச் செலவுகளாகிவிட்டன.

பெரும்பாலான திருவிழாக்கள் புரட்டாசி மாதத்திலும், அறுவடை முடிந்து மக்கள் ஓய்வாக உள்ள பங்குனி, சித்திரை, வைகாசி மாதங்களிலும் நிகழ்கின்றன. மாலைப் பொழுதைக் கழிக்கவும், ஓய்வை அனுபவிக்கவும், திருவிழாக்கள் உண்டாக்கப்பட்டிருக்கலாம்.

திருவிழாக்கள் மூன்று நாள் முதல் பத்து நாள் வரை நிகழ்கின்றன. திருவிழாவுக்குரிய கடவுளரின் உற்சவ விக்கிரகம் உரிய வாகனத்தில் இருத்தப்பட்டு, அவ்விக்கிரகத்துக்குக் கவர்ச்சியான உடைகளும் கைவண்ணம் நிறைந்த பொற்கொல்லர் ஆக்கிய கவினுறு நகைகளும் அணிவிக்கப்பெறும். அதன் பின்னர் அந்த வாகனம், சப்பரம், தேர் அல்லது சகடைமீது ஏற்றப்பட்டு, ஊர்வலமாக 'சுவாமி' எடுத்துச் செல்லப்படும். மதுரை, ஸ்ரீரங்கம் முதலிய சில நகரங்கள், இத்தகைய திருவிழாக்களுக்கு ஏற்றவாறு திட்டமிட்டு அமைக்கப்பட்டுள்ளன. மதுரையில் ஒவ்வொரு பெரிய வீதியும் ஒரு திருவிழாவின் பெயரைப் பெற்றிருப்பதும், அந்தந்தத் திருவிழாவின் போது அந்த வீதியின் வழியாக மீனாட்சியம்மனும் சொக்கநாதரும் வலம் வருவதும், அந்நகர்க்குரிய தனிச் சிறப்பு.

பழங்காலத்தில், மக்கள் இறைவனைத் தேடிச் சென்றபோதிலும் இறைவனும் மக்களைத் தேடிச் சென்றதற்குத் திருவிழாக்கள் சான்றாக உள்ளன. கோயிலுக்குச் செல்ல இயலாத பக்தர்கள் பலர் இருந்தனர்—இருக்கின்றனர். முதிர்ந்த வயது, நடக்க இயலாமை, உடலுறுப்புக் குன்றியிருத்தல், நோய், தீட்டு, கீழ்ச்சாதி என்ற காரணத்தால் கோயிலுக்குள் விடப்படாதிருந்தது—இவைபோன்ற நிலைகளில் இறைவனைத் தேடிச் செல்ல இயலாதவர்களுக்காக, இறைவன் தானே அவர்களைத் தேடிச் சென்றான். இதுபோலவே இசைவாணர்களும் மக்களைத் தேடிச் சென்று கோயில் திருவிழாக்கள் திருமணங்களில் இசை நிகழ்ச்சிகள், ஆகியவற்றின் வாயிலாக மக்களுக்கு இசை அமுதம் ஊட்டினர்.

திருவிழாவைப் பார்ப்பதற்கு வசதியாக வீடுகளில் வெளித் திண்ணைகள் அமைக்கப்பட்டிருந்தன. அவ்வாறே, இறையுருவங்களும் மிகவும் உயர்ந்த தேர்களில் அவற்றில் வைக்கப்பட்ட வாகனங்களின்மீது, இருத்தப்பட்டன. பக்தர்கள் இறையுருவங்களை, நேரடியாகப் பார்த்து வழிபட வசதியான ஏற்பாடு திருவிழாவே.

அலங்கரிக்கப்பெற்ற யானைகள் திருவிழாக்களில் முன்னே சென்று, முக்கியமாகக் குழந்தைகளை மகிழ்ச்சிக் கடலில் திளைக்கச் செய்கின்றன. இறையுருவத்தை, கதிரவனின் வெப்பத்தினின்றும் காக்க,

அழகான பட்டுக் குடைகளைப் பிடிப்பதும் ஒரு மரபு. இவற்றின் வண்ண வண்ண நிறங்களும் பெரிய அமைப்பும் கவர்ச்சி நிறைந்தவை. இந்த வகையில் திருப்பதிக் குடைகளும் உண்டு. இவை பற்றி வேறு ஓர் இடத்தில் கூறியுள்ளோம்.

திருவிழாக்களின் முக்கியமான நாட்களில், முன் இரவில், இறையுருவம் பல வீதிகள் வழியாகச் செல்லும். அப்போது வீடுதோறும் விளக்கு ஏற்றி, அர்ச்சனைகள் செய்தும் காணிக்கைகள், பட்டாடைகள் வழங்கியும் இறைவனை வழிபடுவார்கள். திருவிழாக்காலம் முழுவதும் சமயத் தொடர்பான விரிவுரைகள், இலக்கிய உரைகள், புராண விளக்கங்கள், கதா காலட்சேபங்கள், தேவார-பிரபந்தக் குழுக்களின் இசைப்பாடல் நிகழ்ச்சிகள், இசையரங்குகள், கிராமியக் கலைகள் முதலியயாவும் இராப்பொழுதெல்லாம் நடந்தவண்ணமாக இருக்கும். பொழுது விடிவதற்குச் சற்று முன்னர், இறையுருவம் கோயிலுக்கு மீண்டும் வந்துசேரும். அதுவரை, இந்த நிகழ்ச்சிகளில் ஏதாவதொன்று நடந்துகொண்டேயிருக்கும்.

இறை அருள்பெற, பாமர மக்கள் பெரும்பாலும் அரிச்சந்திரன் நாடகத்தை, தெருக்கூத்தாக நடத்துவார்கள். மயான காண்டக் காட்சியை நாடகமாகப் போட்டால் மழை வரும் என்பது அவர்களுடைய நம்பிக்கை.

தேர்த் திருவிழாக்களில் இறை உருவம் வைக்கப்படும் தேர்கள் புனிதமாகக் கருதப்படுகின்றன. அவை மரத்தால் ஆனவை. அனுபவமும் திறமையும் கலை உணர்ச்சியும் உடைய தச்சர்கள் மிகுந்த நுண்ணிய வேலைப்பாட்டுடன் இதிகாச புராண உருவங்களையும் நிகழ்ச்சிகளையும் வடித்து, எந்தப் பக்கமிருந்து பார்த்தாலும் ஒரே தோற்றம் தரும் வகையில் இவற்றை அமைப்பார்கள். தட்டு, தட்டாக தேரின் உயரம் கூடக்கூட, தேர் தோற்றப்பொலிவுடன் இருக்கும். சில தேர்களுக்கு வெள்ளிக்கவசம் அல்லது தங்கப்பூச்சு உண்டு. மதுரை முதலிய சில தலங்களில் வெள்ளிப் பல்லக்கு உளது.

முருகன் படைவீடுகளுள் ஒன்றான பழனியில், மலைக்கோயிலில் தங்கத்தகடு உடைய தேர் உளது. தங்கத் தேர் என்று இது குறிப்பிடப்படுகிறது. கார்த்திகைதோறும் பவனி வருவதற்கென, தங்க மயில் வாகனமும் தங்கச் சப்பரமும் உள்ளன. வண்ண விளக்குகள் ஒளி வீச, நம் எண்ண அலைகளில் செருக்கு அடங்க, தெய்வத் தமிழ் இசை முழங்க ஐயன் முருகன் தங்கரதத்தில் வலம் வரும் அழகுக் காட்சியைப் பழனி மலைக்கோயிலில் காண்பது பெறற்கரிய பேருகும்.

கனமான மரச் சக்கரங்கள், தேர்கள் உருளத் துணை புரிகின்றன. அவற்றின் வேகம் குறைவு. எல்லாச் சாதியினரும் தேரை வடம் பிடித்து இழுப்பது மரபு. வழிநெடுக ஆங்காங்கே கட்டப்பட்டிருக்கும் கல் மண்டபங்களின் வாயிலில் தேர் நிறுத்தப்பட்டு, சிறப்பு அர்ச்சனைகள் நடக்கும். பல நாள் நடைபெறும் திருவிழாக்களில், இந்த மண்டபங்களில் 'சுவாமி' தங்கியிருப்பதும் உண்டு.

இந்தியாவிலேயே பெரிய தேர், தமிழ்நாட்டில் திருவாரூரில் உள்ளது. இதன் அழகினை 'திருவாரூர்த் தேரழகு' என்ற பழமொழியால் உணரலாம். இதை இழுக்க, பத்தாயிரம் பேர் தேவைப்பட்டனர். இவ்வளவு கூடுதலான மக்கள் இப்பொழுது கிடைப்பது அரிதாக இருப்பதால், எஃகு அச்சு, சக்கரங்கள், ஹைட்ராலிக் பிரேக் கருவிகள் முதலியன பொருத்தி, 2,000 பேர் மட்டுமே இருந்தாலும் இழுக்கக் கூடியவாறு, திருவாரூர்த் தேர் 1970-ம் ஆண்டு அளவில் திருத்தியமைக்கப்பட்டுள்ளது.

ஏனைய தேர்களை நிறுத்த மரக்கட்டைகள் பயன்படுத்தப்படுவதும், தேர் விழாக்களில் தச்சர், கொல்லர் முதலிய பலவேறு தொழிலாளர்களுக்கும் கடமைகளும் ஊதியங்களும் இருப்பதும், குறிப்பிடத்தக்கது. கோயிலில் இவர்கட்குக் கட்டளையாகச் சோறும், வழிநெடுக உள்ள தண்ணீர்ப்பந்தல்களில் மோர், சுண்டல், கடலை, முதலிய கட்டளைகளும் வழங்கப்படுவதை எழுதாச்சட்டம் எனலாம்.

திருவிழாக்களில் பெண், மாப்பிள்ளை ஆகியோரைத் தேர்ந்தெடுப்பதும் உண்டு. கிராம மக்களுக்கு இவைதான் திருமணத்திற்கு அடிகோலும் இடங்கள். ஏற்கெனவே சம்மந்தியாக உள்ளவர்களுடன் நல்லுறவை வலுப்படுத்திக் கொள்ளவும் திருவிழா வாய்ப்பாக உளது; திருவிழாவுக்கு அவர்களை அழைத்து விருந்து படைப்பது வழக்கம். இடையே ஏற்பட்ட சிக்கல்களும் அப்போது அறுபட்டு, உறவு புதுப்பிக்கப்பட்டு, மங்கலம் உண்டாகும். பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ ?

கிராம மக்கள் கட்டுச்சோறு கட்டி, மாட்டுவண்டிகளில் கூட்டம் கூட்டமாக நெடுந்தூரங்களில் உள்ள ஊர்த் திருவிழாக்களுக்குப் புறப்பட்டுச் செல்லுவார்கள். பழந்தமிழ்நாட்டு அரசர்களும் அறச் செல்வர்களும் கட்டிவைத்துள்ள சத்திரங்களில் தங்குவார்கள். இந்தச் சத்திரங்கள் சிலவற்றில், தங்கிச் செல்பவர்களுக்குக் கட்டணம் வசூலிக்காமல் சாப்பாடும் போடப்படுகிறது. இவற்றுக்கு, நிறைந்த மூலதனம் உண்டு. காசி–இராமேசுவரம் சாலை தமிழ்நாட்டின் கடற்கரையோரமாகச் செல்லுகிறது. இதில் ஒவ்வொரு பத்து மைல்

தூரத்துக்கும் ஒரு சத்திரம் அமைக்கப்பட்டிருப்பது, அமெரிக்காவில் வேகமாகச் செல்லும் வாகனங்களுக்காக ஏற்பட்ட நெடுஞ்சாலைகளில் உள்ள மோட்டல் (மோட்டார் ஹோட்டல்) களை நினைவூட்டும்.

முக்கியமான திருவிழா நாட்களில் மழை பெய்யும், அல்லது மழைக் குணமாவது இருக்கும் என்பது பாமர மக்களின் நம்பிக்கை. திரு விழாக்களில் கலந்துகொள்பவர்கள் உடலாலும் உள்ளத்தாலும் தூய்மையாக இருக்கவேண்டும் என்றும், அந்த மரபை மீறினால் தனிப்பட்ட முறையிலோ அல்லது அந்த ஊர் முழுவதற்குமோ ஏதாவது கேடு நேரும் என்றும், பாமர மக்கள் அஞ்சுகிறார்கள். மாதவிடாய், பிள்ளைப்பேறு போன்ற தீட்டுக் காலங்களில் பெண்கள் திருவிழாக்களில் கலந்து கொள்வதில்லை.

தமிழர்கள் திருவிழாக்களுக்காக தமிழ்நாட்டுக்கு வெளியேயும் தாராளமாகச் செல்லுகின்றனர். தமிழ்நாட்டில் நிகழும் திருவிழாக் களைமட்டும்தான் காணவேண்டுமென்ற குறுகிய நோக்கம் அவர் களுக்கு இல்லை. ஆந்திரப் பிரதேசத்தில் திருப்பதி-திருமலை, கேர ளத்தில் குருவாயூர், ஆகிய கோயில்களுக்கும் தமிழர்கள் திரளாகச் செல்லுகின்றனர். கேரளத்தில் சபரிமலையில் உள்ள ஐயப்ப சுவாமி கோயில் திருவிழாவிற்கு மார்கழித் திங்களில் பல்லாயிரம் தமிழர்கள், எவ்வளவோ விரதங்களைக் கடைப்பிடித்து, உறை, உணவு, உடை, பழக்கவழக்கங்கள் ஆசைகள் எல்லாவற்றையும் அடக்கி, வசதிகளைப் புறக்கணித்து, கரடு முரடான பாதையில் குளிரையும் கொடிய விலங்கு களையும் பொருட்படுத்தாமல் செருப்பு இன்றியே நடந்து சென்று ஐயப்பனை வழிபடுகின்றனர். தமிழ்நாட்டிலுள்ள பழனிக்கு இவ் வாறே கேரள மக்கள் ஆர்வத்துடன் வருகின்றனர். இந்தியா வெங்குமுள்ள மக்கள் இராமேச்சுரத்திற்கு வந்த வண்ணமாக உள்ளனர். இத்தகைய யாத்திரைகள் இந்திய மாநிலங்களுக் கிடையே நல்லுறவை வளர்க்க உதவுகின்றன.

ஆடி, புரட்டாசி, மார்கழி, பங்குனி ஆகிய நான்கு மாதங்களிலும் திருமணங்களை நடத்தக்கூடாது என்பது தமிழர் மரபு. இந்தத் தடைக்குக் காரணம் என்னவாக இருக்கலாம்? மக்கள் அனைவரும் இந்தத் திங்கள்களில் இறைவனுக்கு நடைபெறும் திருவிழாக்கள் செம்மையாக நிகழ்வதற்கே தங்கள் நேரத்தையும் பொருளையும் செலவிடவேண்டும் என்பதற்காக இந்த ஏற்பாடு இருந்திருக்க வேண்டும். ஆடியில் ஆடிப்பூரம், ஆடித் தபசு, புரட்டாசியில் நவராத்திரி, மார்கழியில் திருவாதிரை, மாசியில் மகாசிவராத்திரி ஆகிய விழாக்கள் பெருஞ்சிறப்புடன் கொண்டாடப்படுகின்றன.

இந்நாளில் ஆடி, மார்கழி ஆகிய இரு மாதங்கள் மட்டுமே திருமணத்துக்கு விலக்கப்பட்டு வருகின்றன.

புகழ்பெற்ற கோயில்களின் திருவிழாக்களில் குறிப்பிட்ட பாடல்கள் பாடப்படுகின்றன. மயிலை கபாலீசுவரர்கோயில், திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோயில், காஞ்சி ஏகாம்பரேசுவரர் கோயில், திருநெல்வேலி நெல்லையப்பர் கோயில் ஆகியவற்றில், திருவிழாக்களில் இன்ன இன்ன பாட்டுக்களைப் பாடவேண்டும் என்ற நியதி உண்டு. திருவான்மியூர் தியாகேசர் அல்லது மருந்தீசுவரர் கோயிலில் பங்குனி மாதத்தில் நடைபெறும் தெப்பத் திருவிழாவில் பாடப்பெறும் பாடல் இது :

இவ்வயில் சூழ் சப்பணி நூட வந்ததற்கு
ஓவென்று அழைத்தார்க்கு ஓம்கார வட்டத்தார்க்கு
பித்தனென்று அழைத்தார்க்கு பிரம்படி பட்டதற்கு
பேய்கள் உடலை சுடலைக் கூத்தாடினதற்கு
......................................

இந்தப் பாடல் சிவபெருமானைப்பற்றிய புராணங்களைக் கூறுகிறது.

அடுத்த பாடலும் இந்தக் கோயிலிலேயே பாடப்பெறுகிறது. இது கோயிலின் சூழ்நிலை, அமைப்பு, கோபுர அழகு, கல் விக்கிரகங்கள் ஆகியவற்றைக் குறிப்பிடுவதோடு, இங்கு கோயில் கொண்டுள்ள இறைவனையும் இறைவியையும் வழிபடும் வாய்ப்புக்கள் அடிக்கடி உண்டாகவேண்டும் என்றும் பிரார்த்திக்கிறது.

தென்னஞ் சோலையில் சூழ்
திருவான்மியூர் ஸ்தலத்தில்
திருவான்மியூர் தியாகேசர்
திருவான்மியூர் கனியைப்போல்
திகட்டாத கனியைப்போல்
தென்பாண்டி தென்சோலை நாட்டானே
சொர்ண சபைக் கோபுரத்தின் அழகும்
சூட்சமமான நந்தி அழகும்
வர்ண பஞ்சாட்சர அழகும்
வந்து பணிந்திட தொந்தி அழகும்
எந்நேரமும் உன்தன் சந்நதி தனிலுள்ளே
இருக்க வேண்டும் ஐயனே.

கோவை மாநகரிலிருந்து 40 கி.மீ. தொலேவிலுள்ள சித்தூர் என்னும் சிற்றூர் ஒன்றில், சேரநாட்டைக் கொங்கு அரசன் ஒருவன் படையெடுத்தது பற்றிய பாடல்கள் அவ்வூரில் நிகழும் சித்தூர் அம்மன் திருவிழாவில் பாடப்பெறுகின்றன. போர்க்காட்சிகளை வர்ணிக்கும் இசைப் பாடல்களைத் திருவிழா நாளில் பள்ளிச் சிறுவர்கள் பாடுகின்றனர்.

தமிழ்நாட்டில் நிகழும் திருவிழாக்கள் ஏராளம். அவை அனைத்தையும் கூற இந்நூல் இடம் தராது. மாத வாரியாக ஒரு சில முக்கியமான திருவிழாக்களைப்பற்றி மட்டும் சுருக்கமாகக் குறிப்பிடலாம்:—

**சித்திரைத் திருவிழா :**

சித்திரை, தமிழர்களுக்கு முதல் மாதம். இம்மாதத்தில் சித்திரா பௌர்ணமி என்ற விழா, முழு நிலா நாளில் பல கோயில்களில் கொண்டாடப்பெறுகிறது, எனினும் இத்திருவிழாவுக்குரிய புகழ் பெற்ற தலம் மதுரையே.

அன்று, மதுரையிலும் சுற்றுவட்டத்திலும் உள்ள கடவுளர் திருமேனிகள் கவர்ச்சியான முறையில் வைகைக் கரைக்கு எடுத்துச் செல்லப்படும். நூருயிரக் கணக்கான மக்கள் இவ்விழாக்களில் கலந்துகொள்வர். இசை நிகழ்ச்சிகளை எண்ணிமுடியாது. மதுரையில் கோயில்கொண்டு அருள்பாலிக்கும் அன்னை மீனுட்சிக்கும் சிவபெருமானுக்கும் நடைபெறும் திருமண விழாவாக இத்திருவிழா அமைவதால், மக்கள் எல்லோரும் மட்டற்ற மகிழ்ச்சியுடன் காணப்படுவர்.

ஏறத்தாழ 100 கி.மீ. சுற்றளவிலிருந்தும் மக்கள் இந்தத் தெய்வத் திருமணத்தைக் காண மதுரைக்கு வருவார்கள். அந்நாளில் ஓர் இடத்திலும் ஒரு வேலேயும் நிகழாது. அனைவரும், மீனுட்சியம்மனின் கல்யாண கோலத்தைக் காண்பதையே தம் கண்பெற்ற பேருக அதே வேலேயாக இருப்பார்கள். மதுரை மாவட்டத்தில், உழவர்களுக்கு இது மிக முக்கியமான காலகட்டம்; பண்ணே வேலேயாட்களுக்குச் சம்பளம் பேசும்போது ‘சித்திரைத் திருவிழா முதல் அடுத்த சித்திரைத் திருவிழா வரை’ என்றுதான் ஓராண்டுக் காலத்தைக் கணக்கிட்டுக்கொள்வர். வைகை ஆற்றில் அழகர் இறங்குகிற நாளில் மதுரைக்கு மணப்பெண்ணின் அழகு வ. விடும். “ஆற்றைக் கண்டாயோ? அழகரைப் பார்த்தாயோ என்ற பழமொழியும் உண்டு,

### வைகாசி விசாகம்

வைகாசி, தமிழ் ஆண்டின் இரண்டாவது மாதம். இம்மாதத்து முழு நிலா நாள், சிவபெருமானின் குமாரனான சுப்பிரமணியருக்கு மிகவும் சிறப்பாக உரிய நாள். முருகன் கோயில்களில் விசாகம் பெரிய அளவில் கொண்டாடப்படும். திருச்செந்தூரிலும், அடுத்தபடியாகத் திருப்பரங்குன்றத்திலும் பழனியிலும், இத்திருவிழாவும் பால் காவடி முதலிய இதனோடு ஒட்டிய காட்சிகளும் காணத்தக்கன. இந்த நாள் அறிவொளி பரப்பும் நாளாகக் கருதப்படுகிறது.

வைகாசி விசாகத்தன்றுதான் கௌதம புத்தர் பிறந்தார். அவர் ஞானம் பெற்றதும் வைகாசி விசாகத்தில். அவர் நிர்வாணம் அடைந்ததும் வைகாசி விசாக நாளிலேயே. எனவே வட இந்தியாவில் வைகாசி விசாகம் **புத்த பூர்ணிமா** என்ற பெயரில் கொண்டாடப்படுகிறது.

### வைணவத் திருவிழாக்கள்

காஞ்சிபுரம் வரதராசர் கோயிலில் நிகழும் மிகப் பெரிய விழா கருட உற்சவம். ஒரு கருட உற்சவம்கூடத் தவறாமல் பார்த்துவருவது என்ற மன உறுதி படைத்த பக்தர்கள் தலைமுறை தலைமுறையாக உள்ளனர். வைகாசி விசாக நாள், நம்மாழ்வார் பிறந்த நாள். அன்று வரதராசப் பெருமான் நம்மாழ்வார் சந்நிதிக்குச் சென்று அவருக்கு வாழ்த்துக் கூறும் விழா நிகழ்கிறது.

ஆனிமாத முழுநிலா தமிழில் கேட்டை நட்சத்திரத்தன்று வரும். இந்த நாளில் ஸ்ரீரங்கத்தில் ஜேஷ்ட அபிஷேகமும், மன்னார்குடியில் தெப்பத் திருவிழாவும், அழகர்கோயிலில் படி உற்சவமும் கொண்டாடப்பெறுகின்றன.

### பதினெட்டாம் பெருக்கு

ஆடித் திங்கள் 18-ம் நாளில் இவ்விழா நிகழும். குறிப்பாக, காவிரிக்கரை வாழ்நருக்கு இது முக்கியமான திருவிழா. அன்று காவிரியாறு கரை புரண்டு ஓடும். திருச்சி, தஞ்சை மாவட்டங்களில் காவிரியெங்கும் கட்டப்பட்டுள்ள நீராடு மண்டபங்கள், படித்துறைகள் ஆகியவற்றின் படிகள் தண்ணீரில் மூழ்கியிருக்கும்.

பதினெட்டாம் பெருக்கு விழாவிற்கு மூன்று நாள் முன்னிருந்தே, ஆற்றங்கரையில் சப்பரங்கள் விற்பனை தொடங்கிவிடும். இவை தேர்களின் வடிவத்தைப் பின்பற்றிய சின்னஞ்சிறு உருவங்கள்.

இவற்றில் சக்கரங்களும் கோபுரமும், விக்கிரகத்தின் படம் வைக்க இடமும், காகிதப்பூ வேலைப்பாடுகளுடன் இருக்கும். சுறுசுறுப்புள்ள தச்சர்கள் இவற்றை மென்மையான மரங்களில் ஏராளமாகச் செய்து விற்பார்கள். திருவிழாவன்று அதிகாலை முதலே இவற்றைக் குழந்தைகள் சாலைகளின் வழியே ஓசைபட இழுத்துச்செல்லும் காட்சியும், மாலையில் மெழுகு திரிகளை ஏற்றிவைத்துக்கொண்டு மீண்டும் இழுத்துச் செல்லும் காட்சியும் வேடிக்கையாயிருக்கும்.

இந்துக்களான பல சாதியினரும், அவரவர் வழக்கப்படி காவிரியை வழிபடுகிறார்கள். சில சாதியார் களிமண்ணில் இறையுருவங்களைச் செய்து அவற்றுக்குக் குங்குமப் பொட்டு இட்டு, சந்தனம் ஊதுவத்தி காப்பரிசி முதலியவற்றையும் வழங்குகிறார்கள். ஒரு நூலை, கணவனும் மனைவியும் இந்த நாளில் ஒருவருக்கொருவர் கட்டிவிடும் பழக்கமும் சில சாதிகளில் உண்டு. காவிரித் தாய்க்குக் காணிக்கையாக வளையல்களையும் கறுப்பு நிறக் குமிழ் மணிகளையும் ஆற்றுக்குள் போடுவார்கள். வெற்றிலை பாக்குப் போட்டுக் கொண்ட பிறகு, மக்கள் காவிரிக்கரையிலிருந்து அவரவர் வீட்டுக்குத் திரும்புவார்கள். சிலர் தாங்கள் திருமணத்தில் அணிந்துகொண்ட பூமாலைகளைப் பத்திரமாக வைத்திருந்து இந்த நாளில் காவிரியில் அவற்றைச் சேர்க்கிறார்கள்.

பிராமணர்கள் காலையில் காவிரியில் நீராடிய பிறகு, காவிரிக்குப் பூவும் பாலும் வழங்குகிறார்கள். பிறகு தங்கள் இல்லறங்களில் பாயசமும் வைத்து விருந்து உண்ணுகின்றனர். மாலையில் நன்கு உடுத்திக்கொண்டு, பெண்களும் குழந்தைகளும் ஆற்றங்கரைக்குச் சித்திரான்னங்களுடன் சென்று காவிரியம்மனுக்குப் படைத்துத் தாங்களும் உண்டு பொழுதுபோக்கி மகிழ்ச்சியோடு வீடு திரும்பு கின்றனர். பதினெட்டாம் பெருக்கை, பெண்களும் குழந்தைகளும் மிகவும் ஈடுபாட்டுடன் கொண்டாடுகின்றனர்.

இந்த மங்கல நாளில் தேவையில்லாத பழைய ஓலைச்சுவடிகளை ஆற்றில் மிதக்கவிடுவது மரபு. பல கோயில்களிலிருந்து கடவுளர் திருவுருவங்களை நடுப்பகல் அளவில் காவிரிக்கரையிலுள்ள மண்ட பங்களுக்கு இந்த விழாவுக்காகக் கொண்டுவருவதும் வழக்கம்.

### ஆவணி மூலம்

ஆவணி மாதத்தில் வரும் மூல நட்சத்திரத்தன்று இத் திருவிழா மதுரையில் கொண்டாடப்பெறுகின்றது. சிவபெருமானின் பல்வேறு திருவிளையாடல்களை இந்த விழாவில் காணலாம். குறிப்பாக, சிவ

பெருமான் பிட்டுக்கு மண் சுமந்து வைகையின் வெள்ளத்தைத் தடுத்து நிறுத்திய காட்சியைக் கண்டு இன்புறலாம்; இவ்விழாவில் பக்தர்கள் அனைவரும் பிட்டு உண்பதும் ஒரு வழக்கம். எனவே, இத்திருவிழாவை, பிட்டுத்திருவிழா என்றும் சொல்லுவார்கள்.

### நவராத்திரி

புரட்டாசி மாதம் நவராத்திரி விழாவால் சிறப்புப்பெறுகிறது. இந்த விழா, விஜயநகரப் பேரரசர்களாலும் அவர்களுடைய சிற்றரசர்களாக இருந்த மதுரை நாயக்க மன்னர்களாலும் தமிழ்நாட்டில் பரப்பப்பட்டது. அவர்களோடு தொடர்புகொண்டிருந்த இராமநாதபுரம் சேதுபதி போன்ற குறுநில மன்னர்களின் அரண்மனைகளில் இவ்விழா இன்றும் கொண்டாடப்பெறுகின்றது.

பல வண்ணங்களில் நவராத்திரி கொலுபொம்மைகளைக் காட்சியில் வைப்பதை, உயர்ந்த சாதிகளில் பொழுதுபோக்காகவும் கலையை ஊக்குவிக்கும் முறையாகவும், கொண்டுள்ளனர். பாமர மக்கள் இதுபோன்ற விழாவை வேனிற் காலத்தில் கொண்டாடுகிறார்கள்; பெரிய மண் குதிரைகள் செய்து புரவி எடுப்பு என்ற பெயரில் காணிக்கையாக ஐயனாருக்கு வழங்குகிறார்கள்.

நவராத்திரி விழாவால் தமிழ் நாட்டுக் கைவினைக் கலைஞரின் பொம்மைகள் செய்யும் ஆற்றல் வெளிப்படுகிறது. களிமண், காகிதம் வண்ணங்கள் ஆகிய மூன்றையும் கொண்டு எளிய முறையில் நல்ல பொம்மைகளை இவர்கள் செய்து விடுகிறார்கள். இந்தக் கலைஞர்கள் குலாலர் இனத்தவர். ஒரு கதை முழுவதையும் களிமண்ணில் காட்டும் கைத்திறம் இவர்களுக்கு இருந்துங்கூட, பழைய மாதிரி பொம்மைகளைச் செய்து திருப்தி அடைந்துவிடுகிறார்கள்; புதிய படைப்புக்களில் ஆர்வம் காட்டக் காணோம்.

### தீபாவளி

அடுத்த முக்கியமான திருவிழா தீபாவளி. எண்ணெய் தேய்த்துக் குளித்து, புத்தாடை உடுத்தி, வயிறார உண்டு, பட்டாசு சுடுவது இந்த விழாவின் சிறப்பு நிகழ்ச்சி. இந்த விழாக்காலத்தில் உழவர்களிடம் கையில் பணம் இராது. இருக்கும் பணம் உரம் வாங்குவது போன்ற வேளாண்மை வேலைகளுக்கு உடனடியாகத் தேவைப்படும். வயல் வேலையும் இந்த மாதத்தில் ஓய்வு ஒழிச்சலின்றி நடக்க வேண்டும். ஆகையால் விவசாயிகள் தீபாவளிக்கு முக்கியத்துவம்

கொடுப்பதில்லை. சம்பளம் வாங்குபவர்களும் ஓய்வு உள்ளவர்களுமே தீபாவளியைக் கொண்டாடுகிறார்கள்.

தமிழ்ச் செல்வர் சிலர் காசிக்குச் சென்று கங்கையில் நீராடி தீபாவளி கொண்டாடுகின்றனர்.

### கந்த சஷ்டி

மாதமிரு 'சஷ்டி' வரும். ஆயினும் ஐப்பசியில் வரும் கந்த சஷ்டி தமிழ் நாடெங்கும் பெரிய விழாவாகக் கொண்டாடப்படுகிறது. சின்னக் குமாரர், மலையினின்றும் இறங்கி, நான்கு திக்குகளிலும் அசுரர்களைக் கொன்று வெற்றிவாகை சூடி மலைக்குத் திரும்பும் காட்சியைப் பழனியில் காணலாம். இது, சூர சம்ஹாரம் எனப் படும். ஏழாம் நாளில் முருகப்பெருமான் வள்ளியை மணந்து கொள்வார்.

### கார்த்திகை தீபம்

தொல்காப்பியர் காலத்திலிருந்து தமிழ்நாட்டில் கார்த்திகை தீபத் திருவிழா கொண்டாடப்பெறுகிறது. வீடுதோறும் கிளிஞ்சில் சிட்டி களில் விளக்கேற்றி வைத்து அலங்கரிப்பார்கள். கார்த்திகை மாதம் முழுவதும் விளக்கேற்றுபவர்களும் உண்டு. ஏனையோர் பரணி, கார்த்திகை ஆகிய இரு நாட்களிலும் விளக்கு ஏற்றுவிப்பார்கள். சொக்கப்பன் கொளுத்தியும் வெடிகளை வெடித்தும் சிறுவர் சிறுமியர் மகிழ்வார்கள்.

இவ்விழாவில் தங்கள் வீட்டில் விளக்கேற்ற, தமிழ்நாட்டு வைணவர்கள் தாங்களே விளக்குகளைத் தயாரிப்பார்கள், விலைக்கு வாங்கமாட்டார்கள். இதன் பெயர் பொறிவாணம். கவட்டைக் கம்பு, துணி, துணிக்கயிறு, மரத்தூள், கொங்கணைக்கோந்து, மருதங்காய் ஆகியவற்றைப் பயன்படுத்திப் பொறிவாணம் செய் வார்கள். இவற்றின் சேர்க்கையால் பொறிவாணம் நிறைந்த ஒளி தருகிறது. குலாலர் செய்யும் யானை வடிவான விளக்குகளை வாங்கி, தங்கள் பெண்மக்களுக்குத் தாய்மார்கள் அனுப்புகிறார்கள்.

இந்த நாள், வேறு எல்லாத் தலங்களையும்விடத் திருவண்ணா மலையில் மிகப் பெரிய அளவில் கொண்டாடப்பெறுகிறது. திருவாரூரில் பிறந்தாலும் காசியில் இறந்தாலும் சிதம்பரத்தில் வழிபட்டாலும், திருவண்ணாமலையை நினைத்தாலும், முக்தி கிட்டும் என்பது நம்பிக்கை.

திருவண்ணாமலை, ஜோதி வழிபாட்டுக்கு உரிய தலம். திருக் கார்த்திகை நாளில், அண்ணாமலை ஒளிப்பிழம்பாக விளங்கும். அருணாசல ஈசுவரர் கோயில் மலை, அதற்காகவே இறைவனால் உண்டாக்கப்பட்டதாகக் கருதப்படுகிறது.

திருக்கார்த்திகை விழா முழுநிலா நாளில் வரும். 'அண்ணாமலை யார்க்கு அரோகரா' என்று அனைவரும் குரல் எழுப்புவார்கள். பெரியதொரு செப்பு அண்டாவில், தரமான சூடம், நெய், திரி முதலியவற்றை மலைமீது வைத்து மாலை 5 மணி அளவில் ஏற்றுவர். இருள் நீங்கி ஒளிதோன்றி, பத்துப் பதினைந்து மைல் சுற்றளவுக்கு அண்ணாமலைத் தீபம் தெரியும்.

இவ்விழாவையொட்டி, திருவண்ணாமலையில் பத்து நாட்களுக்கு, பெரியதொரு மாட்டுச் சந்தை கூடும். திருவிழாவின் சிறப்பு நாட் களில் பலவகையான வாகனங்களிலும் தேர்களிலும் இறைவனின் திருமேனிகள் விலைமதிக்க முடியாத நகைகளை அணிந்து, நகர் வலமாக எடுத்துச் செல்லப்படும்.

### திருப்பள்ளி எழுச்சி

மார்கழி மாதம் முழுவதும் பனியையும குளிரையும் பொருட்படுத் தாமல் மக்கள் அனைவரும் அதிகாலையில் எழுந்து நீராடி, விடிவதற்கு முன் கோயில்களில் சென்று வழிபடுகின்றனர். திருப்பாவை— திருவெம்பாவைப் பாடல்கள் இந்த மாதத்தில் தமிழ்நாடெங்கும் ஒலிக்கக் கேட்கலாம்.

### திருவாதிரை

திருவாதிரை, ஆருத்ரா தரிசனம் என்ற இரு பெயர்களும் ஒரு திருவிழாவையே குறிப்பன. இவ்விழாவுக்கு உரிய கடவுளர் நடராசர். உரிய தலங்கள் சிதம்பரம், திரு உத்திரகோசமங்கை.

இந்த நாளில் மாணிக்கவாசகர் திருவெம்பாவையைப் பாடி முடித் தார் என்றும், உடனே சிவபெருமான் அவருக்குக் காட்சி கொடுத் தார் என்றும், சொல்லுவார்கள். பேரூர் எனப்படும் மேலைச்சிதம்பரத் தில், சிவபெருமான் காமதேனுவுக்குக்காட்சி கொடுத்தாகக் கூறு வார்கள். அந்நிகழ்ச்சியும் மார்கழித் திருவாதிரை நாளில் நடை பெற்றதேயாம். அதிகாலையில் 3 மணி அளவில் எண்ணெய், பால், தேன், இளநீர், தயிர் ஆகியவற்றைக் கொண்டு சிவபெருமானுக்கு அபிஷேகம் செய்யப்பெறும். தொடர்ந்து இது விடியும் வரை நிகழும். அதன் பிறகு இறைவன் பசுவுக்குக் காட்சி கொடுப்பார்.

### வைகுண்ட ஏகாதசி

மார்கழி மாதம் வளர்பிறையில் தொடங்கி இவ்விழா, இருபது நாட்களுக்கு ஸ்ரீரங்கத்தில் கொண்டாடப்படுகிறது. பத்தாம் நாள் நடைபெறும் மோகினி அவதாரம் அல்லது நாச்சியார்கோலம், பதினோராம் நாள் நடைபெறும் ஏகாதசி, ஆகியவற்றுக்கு லட்சக்கணக்கான மக்கள் கூடுவார்கள். ஆழ்வார்களின் திவ்ய பிரபந்தங்களிலுள்ள நாலாயிரம் பாடல்களும் இவ்விழாவில் பாடப்பெறுகின்றன. 18-ம் நாளில் பெருமாளும் திருமங்கை ஆழ்வாரும் எதிர்ப்படும் நிகழ்ச்சியும் இவ்விழாவில் இடம்பெறுகிறது. அவர் தொடங்கிவைத்த திருவாய்மொழி விழாவுடன் 20-ம் நாளில் வைகுண்ட ஏகாதசித் திருவிழா முற்றுப்பெறுகிறது.

11-ம் நாளிலும் அதன் பிறகு ஒவ்வொரு நாளும் அரங்கநாதப் பெருமான் பரமபாத வாயில் வழியாக வந்து உணவுப்பண்டங்கள் பெற்று, துறவிகளை வாழ்த்தி, ஊர்வலமாகக் கருவறைக்குத் திரும்புகிறார்.

### தைப்பூசம்

தை மாதத்தில் நிகழும் பெரிய திருவிழா தைப்பூசம். அதற்கு உரிய இறைவன் முருகன். உரிய சிறப்புத் தலம் பழனி. ஏனைய தலங்கள் திருத்தணிகையும் முருகனின் பிற படைவீடுகளும்.

இவ்விழாவும் முழு நிலா நாளில் நிகழும். முருகனடியார்கள் அவன் புகழ்பாடி, காவடி தாங்கி, கரகம் ஆடி, நெடுந்தொலைவு கால்நடையாக வருவார்கள்.

இந்நாளில் மதுரையில் வண்டியூரிலுள்ள மாரியம்மன் தெப்பக் குளத்திலும் ஒரு திருவிழா நிகழும். மீனாட்சி கோயிலிலிருந்து இறை உருவங்கள் இங்கு எடுத்துச் செல்லப்படும். பிறகு அழகான தெப்பங்களில் வண்ண விளக்குகளுடன் இறை உருவங்களை தெப்பக்குளத்தில் நடுவேயுள்ள மண்டபத்துக்குக் கொண்டு போவார்கள். தெப்பக்குளத்தின் நான்கு கரைகளிலும் வைக்கப் பட்டுள்ள விளக்குகளின் ஒளியும், தெப்பக்குளத்து நீரில் அவற்றின் பிரதிபலிப்பும், இசை நிகழ்ச்சிகளும், இனிய காட்சியாக இருக்கும்.

இதுபோன்ற ஒரு விழா பங்குனி மாதத்தில் மயிலாப்பூர் கபாலீசுவரர் கோயிலில் அறுபத்து மூன்று நாயன்மார்களுக்கும்

எடுக்கப்படுகிறது. இது, சென்னை மாநகரின் குறிப்பிடத்தக்க விழாக்களில் ஒன்று.

**பொங்கல்**

அறுவடை இனிது முடிந்ததை நினைவூட்டும் பொங்கல் அல்லது மகர சங்கராந்தி, சாதிமத வேறுபாடு இன்றி, தமிழர்கள் அனைவரும் கொண்டாடும் விழா ஆகும். இதுவே தமிழ் நாட்டின் மிகப் பெரிய விழா.

பொங்கல் நாளில் புதிய அரிசியைப் பொங்கி வெல்லம் முதலிய வற்றுடன் சேர்த்து சர்க்கரைப் பொங்கலாக உண்பதும், மறுநாள் மாட்டுப் பொங்கல் கொண்டாடி, மாடுகளுக்கு நன்றி கூறுவதும் மரபு.

ஒவ்வொரு தாயும் தன்னுடைய மணமான பெண் மக்கள் வீட்டுக்குப் பொங்கல் பானை, அரிசி, மஞ்சள் கொத்து, வெல்லம், கரும்பு முதலியவற்றை அனுப்பக் கடமைப்பட்டிருக்கிறாள். அவ்வாறு அனுப்பத் தவறினால் அதனால் பல விளைவுகள் உண்டாகும்.

பொங்கல் நாளன்று உத்தராயணம் ஆரம்பமாகிறது. அதாவது அன்று சூரியனின் வடக்கு நோக்கிய பயணம் தொடங்குகிறது. எனவே, சூரியனுக்கு அன்று காலையில் சூரியோதயத்தில் பொங்கல் படைப்பது வழக்கம். புதிய பானையில் மஞ்சள் கொத்தைக் கட்டி அடுப்பில் ஏற்றி, பாலும் தண்ணீரும் ஊற்றிய பிறகு, புது அரிசியை இட்டுச் சமைப்பார்கள். கரும்பு, வள்ளிககிழங்கு, பூசனிக்காய் முதலியவற்றை இலையில் பரப்பி வைப்பார்கள்.

புதிய அரிசி, பானையில் நன்கு வெந்த பிறகு, நறுமணப் பொருள் களைச் சேர்த்து அதைச் சுவையுள்ள பொங்கல் ஆக்குவர். 'பொங்கலோ பொங்கல்' என்ற முழக்கத்திற்கிடையே, பொங்கலை இலைகளில் படைத்துச் சூரியனுக்கு வழங்குவர். சூடம் ஏற்றி இறைவனின் அருளை வேண்டுவர். அன்று சந்திப்பவர்கள் ஒவ்வொருவரும் மற்றவர்களைப் பார்த்து 'பால் பொங்கிற்று?' என்று கேட்டுக்கொள்ளுவது பொங்கல் வாழ்த்துக் கூறும் முறை. இப்போது கவினுற அச்சிட்ட பொங்கல் வாழ்த்து அட்டைகளைப் பரிமாறிக் கொள்ளும் நாகரிகமும் பரவி விட்டது.

பொங்கல் வரவு செலவுத் திட்டத்தில் வேலைக்காரர்களுக்குப் புத்தாடை வழங்குவது ஒரு முக்கியமான செலவு. இந்த மாதத்தில் விளை பொருள்கள் கைவசமிருப்பதால், அவற்றை விற்று, தாராள

மாகச் செலவிட வேண்டும் என்ற மனப்பான்மை எல்லோர் உள்ளங்களிலும் குடிகொண்டிருக்கிறது. இவ்விழாவை யொட்டி வீடுகளை வெள்ளை அடிப்பதும் சுத்தப்படுத்துவதும் மரபு.

ஆண்டுதோறும் டிசம்பர் 25-ம் நாளில் கிறிஸ்துமஸ் விழா வருவதுபோல, தை முதல் நாளில் பொங்கல் விழா கொண்டாடப் பெறுகிறது. பிற திருவிழாக்களின் தேதிகள் ஆண்டுதோறும் மாறுபடும்.

தைப்பொங்கல் நாள் தொடங்கிய மூன்று நாட்களும் இப்போதெல்லாம் தமிழ் விழாவாக, இலக்கிய உரைகள், பட்டிமன்றம் மற்றும் கலைநிகழ்ச்சிகளுடன் கொண்டாடப்பெறுகின்றன.

மாட்டுப் பொங்கலன்று பசுக்களும் காளை மாடுகளும் நன்கு குளிப்பாட்டப்பெறுகின்றன. பிறகு அவற்றுக்கு பூ, குங்குமம் முதலியவற்ருல் அலங்காரம் செய்து, கொம்பில் புதுத் துணி கட்டி, பொங்கல் சோறு படைத்து அவற்றை வணங்குவதும் மரபு.

## ஜல்லிக்கட்டு

மாட்டுப் பொங்கலன்று பிற்பகலில் ஜல்லிக்கட்டு என்ற மஞ்சு விரட்டு நிகழும். ஒரு தொழுவுக்குள் காளைமாடுகளை அடைத்து, தப்பு, கொட்டு முதலிய கிராம வாத்தியக் கருவிகள் முழங்க அவை ஒவ்வொன்ருகத் திறந்த வெளியில் விடப்படும். வழி நெடுக நிற்கும் பிடிகாரர்கள் அந்த மாடுகளை மடக்கி அவற்றின் கொம்பில் கட்டப் பட்டிருக்கும் துணிகளைப் பெற முயலுவர். இந்த வீர விளையாட்டு, பார்ப்பவர்களுக்கு மகிழ்ச்சி தந்தாலும் பிடிப்பவர்களுக்கு ஆபத்து விளைவிக்கும். காயப்படுவதும் உயிர் நீப்பதும் உண்டு. முரட்டுக் காளைகளை அடக்கி வெற்றி காண்பவர்கள் வீரராக மதிக்கப்படுவார்கள். குறுநில மன்னர்களின் குடும்பத்துப் பெண்கள் இத்தகைய வீரர்களை மணக்க விரும்புவதும் உண்டு.

பிடி கொடுக்காமல் தப்பிக்கும் காளைகளை மாட்டுப் பண்ணை வைத்திருக்கும் நிலக்கிழார்கள் கூடுதலான விலை கொடுத்து வாங்க முன் வருவதும் வழக்கம்.

மதுரை, இராமநாதபுரம், புதுக்கோட்டை ஆகிய மாவட்டங்களில் தான் மஞ்சுவிரட்டு என்னும் இவ்விர விளையாட்டு தொன்று தொட்டுப் புகழ்பெற்றிருக்கிறது. அலங்காநல்லூர், பாலமேடு, உறங்காம்பட்டி, சிராவயல், அரளிப்பாறை, விராலிமலை முதலிய ஊர்களில் நிகழும் மஞ்சுவிரட்டுக்கள் குறிப்பிடத்தக்கவை. மறவர்கள் இதில் ஈடுபாடு காட்டுகின்றனர். இந்தப் பந்தயங்களுக்காக

அவர்கள் பெருந்தொகைகளைச் செலவிடுகிறார்கள். பழங்காலத்தில் மத்தியதரைக் கடற்பகுதியில் வாழ்ந்த கிரேட்டன் மக்களிடம் இத்தகைய விளையாட்டு இருந்ததாகத் தெரிகிறது.

**மகம்**

மகம், மாசி மாதத்தில் வருகிறது. அப்போது இறை உருவங்களை, கடல், ஆறு, குளம் முதலிய நீர்நிலைகளுக்கு எடுத்துச் சென்று நீராட்டுவது மரபு.

மகம் ஆண்டுதோறும் நிகழ்கிறது. ஆனால் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை நிகழும் மகாமகம் ஒன்று உண்டு. வியாழக்கிரகம் சிம்ம வீட்டில் நுழையும்போது, கும்பகோணம் மகாமகக் குளத்தில் இவ்விழா நடைபெறும். பல லட்சம் மக்கள் இந்தக் குளத்தில் அன்று நீராடுவர். அரசர்கள், சாமானியர்கள், செல்வர்கள், ஏழைகள், படித்தவர், பாமரர், ஞானிகள், ஏனையோர், அனைவரும் இங்கு நீராடுவர். அன்று இந்தியாவிலுள்ள எல்லா ஆறுகளும் மகாமகக் குளத்தில் கூடுவதாகவும், அன்று இங்கு நீராடினால் அந்த ஆறுகள் யாவற்றிலும் நீராடிய பலனைப் பெறலாம் என்றும், மக்கள் நம்புகிறார்கள்.

**மகா சிவராத்திரி**

மாசி மாதத்து அமாவாசை இரவுக்கு மகா சிவராத்திரி என்று பெயர். மாதந்தோறும் சிவராத்திரி வருவது உண்டு. ஆனால் மாசி மாதத்தில் வரும் சிவராத்திரி, சிவன் அடியார்களுக்கு மிகவும் புனிதமானது. இந்த நாளில்தான், தேவர்களும் அசுரர்களும் திருப்பாற்கடலினைக் கடைந்ததால் உண்டான கொடிய நஞ்சினை (விஷத்தை) சிவபெருமான் உண்டு, உலகத்தைக் காப்பாற்றினார், என்பது ·ராண வரலாறு. இக்காரணத்தால் இந்நாள் 'மகா' என்னும் அடைமொழி பெற்று மகா சிவராத்திரி ஆயிற்று.

சிவபிரானுக்கு அன்றிரவு செய்யப்பட்ட வழிபாடு ஆண்டுதோறும் நடத்தப்படுகிறது. மற்றொரு வகையாகவும் கூறுவர்: உலகம் ஒரு பிரளயத்தில் சிக்கி எங்கும் இருள் சூழ்ந்திருந்தபோது, அன்றிரவு அன்னை பார்வதி சிவபெருமானைவழிபட்டு உலகு மீண்டும் ஒளி பெறச் செய்தாள். பார்வதி செய்த வழிபாட்டினைப் பின்பற்றியே இப்போது மகாசிவராத்திரி நாளில் பாமர மக்கள் சிவபெருமானை வழிபடுகின்றனர் என்பர்.

சிவன் கோயில்கள் அனைத்திலும் மகாசிவராத்திரி விழா உண்டு. சைவ சமயத்தில் நம்பிக்கையுடைய ஒவ்வொருவரும், தங்கள் தங்கள் இல்லங்களில் சிவனை நினைத்து இந்நாளில் இரவெல்லாம் விழித்திருந்து "ஓம் நமசிவாய" என்று ஒலித்தும், அவன் புகழ் பாடியும், வழிபடுகின்றனர். மறுநாள் காலையில் குளித்து, மீண்டும் சிவனை வழிபட்டு தங்கள் உண்ணாவிரதத்தை முடித்துக் கொள்கின்றனர். மகாசிவராத்திரி நாளில் இரவில் சிவன் கோயில்களில் விளக்குகள் ஏராளமாகப் போடப்பட்டிருக்கும். அன்று இரவு 12 மணி நேரமும் மூன்று மணிக்கு ஒரு தடவையாக, நான்கு காலப் பகுதிகளில் நான்கு வகையாக வழிபாடு நடைபெறும். முதல் காலத்தில் பால், அடுத்து தயிர், பிறகு வெண்ணெய், நான்காவது காலப் பகுதியில் தேன், ஆகியவற்றால் சிவபெருமான் உருவத்திற்கு அபிஷேகம் செய்வார்கள். மதுரையும் இராமேச்சுரமும் மகாசிவராத்திரிக்கு முக்கியமான தலங்களாக உள்ளன.

### பங்குனி உத்திரம்

பங்குனி மாதத்தில் தமிழ்நாட்டுக் கோயில்கள் எல்லாவற்றிலும் இறைவன் - இறைவி திருமணம் நிகழும்.

இந்த மாதத்தில் சுப்பிரமணியர் அல்லது முருகனுக்கு பத்து நாள் உத்திர விழாவும் நடைபெறும். நாட்டுப்புற மக்களுக்கு இதில் ஈடுபாடு மிகுதி. வேலைகள் முடிந்து அவர்கள் ஓய்வாக இருக்கும் காலம். எனவே கோயில்களுக்கு நெல் காணிக்கை கொடுத்து, மகிழ்ச்சியுடன் உத்திரப் பெருவிழாவில் பங்கு கொள்வர்.

விழாவின் இறுதி நாளில் சுப்பிரமணியரின் முக்கிய ஆயுதமான வேல், ஊர்வலமாக ஆற்றங்கரைக்கு எடுத்துச் செல்லப்படும். அப்போது பக்தர்கள் காணிக்கை செலுத்துவார்கள். விக்கிரகத்துக்கு அபிஷேகம் செய்யும்போது, காவடி மற்றும் இடும்பன் தடி ஆகியவற்றுக்கும் அபிஷேகம் செய்வார்கள்.

பங்குனி உத்திரத்துக்கு மறுநாள் இடும்பன் விழாவாகக் கொண்டாடப்பெறும். சுப்பிரமணியருக்குக் கட்டுப்பட்டவனான இடும்பனுக்கும் பூசைகள் நடத்திக் காணிக்கை வழங்குவர். அப்போது இடும்பனின் ஆவி பக்தர்களில் பலருக்குள் புகும் என்பர். பக்தர்கள் தங்களையே இடும்பன் தடியால் அடித்துக்கொண்டு, வருங் காலத்தைப் பற்றிச் சில சோதிடங்கள் கூறுவர். இடும்பனே இவற்றைக் கூறியதாக மக்கள் கருதுவர்.

### கிருஷ்ண ஜெயந்தி (ஸ்ரீ ஜெயந்தி)

விஷ்ணு, கிருஷ்ணவதாரம் எடுத்ததை முன்னிட்டு, பெருமாள் கோயில்களில் பிரார்த்தனைகள் பஜனைகளுடன் நடைபெறும் திருவிழா இது. பத்தாம் நாள் மிகவும் உற்சாகமாகக் கொண்டாடப்பெறும். பானை நிறைய மோர் நிரப்பி, பானையை மஞ்சள் துணியால் மூடி, ஒரு கம்பின் உச்சியில் கட்டியிருப்பார்கள். ஓர் இயந்திரக் கருவியின் துணையால், வெளியே நிற்கும் ஒருவன் பானையை உயரத்தில் ஏற்றுவான், அல்லது நினைத்தபோது கீழே இறக்குவான். ஏனையோர் அந்தப் பானையைப் பிடிக்க முயலும்போது அது அவர்களிடமிருந்து தப்பிவிடும். வேடிக்கை பார்ப்பவர்கள், இந்தப் போட்டியில் கலந்து கொண்டு, புராணக் கிருஷ்ணன் போல உடை உடுத்தியிருப்பவர்கள் மீது பல வண்ணத் தண்ணீர் ஊற்றுவர். கயிற்றை இறக்குபவன் சற்று கவனக்குறைவாக இருக்கும் நேரத்தில், உயரத் தாவுபவன் வெற்றிபெற்றுவிடுவான்.

### கம்பம் திருவிழா

கம்பம் திருவிழா என்பது கிராமங்களில் நிகழ்வது. அலரிப் பூப் பறித்து அதை ஐயனருக்கு வழங்கி, ஒரு செவ்வாய்க்கிழமையன்று விழாவைத் தொடங்குவார்கள். அடுத்த செவ்வாய்க்கிழமை ஒரு வேப்பமரத்தின் மூன்று கொம்பு உள்ள கிளையை கோயில் வாயிலில் ஊன்றுவர். இது ஏனைய கோயில்களில் கொடியேற்றம் நிகழ்வதற்கு ஈடானது. இதன்பின் கிராமத்தைவிட்டு ஒருவரும் திருவிழா முடியும்வரை வெளியே செல்லமுடியாது. ஒரு வாரம் முழுவதும் மாலைப் பொழுதில் ஆடவர் அந்தக் கம்பத்தைச் சுற்றி மகிழ்ச்சிக் கூத்தாடுவர்.

அடுத்த செவ்வாய்க்கிழமை, கிராமத்தார் கோயிலுக்குக்குள் பொங்கல் பொங்குவர். மறுநாள் (புதன் கிழமை), தேரோட்டம் நிகழும். தேர்க்காலில் ஆட்டுக்குட்டி ஒன்றை வைத்து அதன்மீது தேரை ஏற்றி அதைப் பலி கொடுப்பார்கள். தெரு முனை தோறும் இவ்வாறு பலியிடுவார்கள். இந்த ஆட்டுக்குட்டிகளை, திருவிழாவுக்கு வேலை செய்ததற்குக் கூலியாக, வண்ணர்களுக்கு அன்பளித்து விடுவார்கள். வியாழக்கிழமையன்று இருபதுபேர் தங்கள் உடலில் ஊசிகளைக் குத்திக்கொண்டு ஊர்வலம் வருவார்கள். பெண்கள் மாவிளக்கு வைத்து, அலரிப் பூவுடன் அதை அலங்கரித்து ஆளுக்கொரு தட்டில் எடுத்துச்செல்லுவார்கள். அன்றிரவு ஒரு பல்லக்கில்

விக்கிரக ஊர்வலம் வாணவேடிக்கைகளுடன் நடத்தி, மறுநாள் திருவிழாவை முடித்துக்கொள்வர். கோயில் வாயிலில் ஊன்றிய கம்பத்தை அன்று அப்புறப்படுத்திக் கிணற்றுக்குள் போடுவார்கள். அந்த ஊர்வலத்தில் கிராமத்தார் ஒவ்வொருவரும் மற்றவர்மீது வண்ணம் தோய்ந்த நீரை ஊற்றி மகிழ்வர். ஒவ்வொரு வீட்டிலிருந்தும் பெண்கள் மாவிளக்கைத் தங்கள் உள்ளங்கைகளில் ஏந்தி, இறைவனுக்குப் படைப்பதற்காகக் கோயிலுக்கு எடுத்துச் செல்லுவார்கள்.

எட்டாம் நாளில் கோயில் பண்டாரம், விரதம் மேற்கொள்ளுவார். அதற்கு முன்னதாக அவர் தம் தலையில் கும்பம் (புதிய மண்பானை) வைத்திருக்க, ஒரு கிணற்றுக்கு ஊர்வலமாக அழைத்துச் செல்லப்படுவார். அவர் அங்கு குளித்த பிறகு ஒரு பிராமணக் குருக்கள் அவருடைய மணிக்கட்டில் ஒரு தாயத்தைக் கட்டுவார். பண்டாரம் பிறகு கோயிலுட் புகுந்து அங்கேயே மூன்று நாள் தங்கிவிடுவார்.

ஒன்பதாம் நாளில், கூட்டுப்படைப்பாக இறைவனுக்குப் பொங்கல் வழங்குவார்கள். ஊர் முழுவதும் தண்டோரா மூலம் உரிய நேரம் அறிவிக்கப்படும். பொங்கலைப் பொங்க முன் வருபவர்கள் கிராமத் திடலுக்கு ஊர்வலமாக அழைத்துச் செல்லப்படுவார்கள். அங்கு, தனித்தனியே பொங்கல் பொங்கப்பெற்று, இறைவனுக்கு வழங்கிய பிறகு, பிரசாதமாக அனைவர்க்கும் விநியோகிக்கப்படும்.

பத்தாம் நாளில் மீண்டும் மாவிளக்கும் காணிக்கையும் செலுத்தி, கும்பத்தைக் கிணற்றுக்குள் போடுவார்கள். பண்டாரமும் தன் கையில் கட்டிய தாயத்தை வெட்டி எடுத்துக் கிணற்றுக்குள் எறிவான். அன்றிரவு ஒரு தெருக்கூத்து அல்லது சதிர் ஆட்டம் நடத்துவார்கள்.

கிராமங்களில் நிகழும் மற்றொரு முக்கியமான விழா, மதுரைவீரன் திருவிழா. இவ்விழாவில் உயிரினங்களைப் பலி கொடுப்பார்கள்.

### மொங்கையன் திருவிழா

மதுரை அருகேயுள்ள திரு ஆலவாயநல்லூரில் ஆடி மாதத்தில் இந்த விழா நடைபெறும். இது, பல தனிச்சிறப்புக்கள் உடையது.

குறிப்பிட்ட திக்கு நோக்கி அல்லது குறிப்பிட்ட தோப்பு அல்லது மரத்தில், பல்லி சொல்வதன்மூலம், உரிய தெய்வம் இசைவு கொடுத்தால்தான் திருவிழாவை நடத்த முடிவுசெய்வார்கள். இவ்வாறு பல்லி 'இசைவு' தெரிவித்தால், யாராவது ஒருவருக்கு 'சாமி' வந்து

அவர் இன்ன இன்ன விதமாகத் திருவிழாவை நடத்தவேண்டும் என்று உத்தரவிடுவார். பிறகு, தெருக்களெல்லாம் அலங்கரிக்கப் பெறும். தெய்வத்துக்குக் காணிக்கையாக புரவி(குதிரை)கள் செய்ய, அன்று ஐயனார் கோயில் பூசாரி, கோயில் குளத்திலிருந்து மண்ணை வெட்டி எடுப்பார். புரவிகளைச் செய்வதற்குக் கூலியாக அவருக்கு ஒரு தொகை கொடுக்கப்படும்.

புரவிகளை மொந்தையன் கோயிலில் வைத்து ஒரு வண்டியில் ஏற்றி, ஊர்வலமாக ஐயனார் கோயிலில் கொண்டுபோய்ச் சேர்ப்பார்கள். வண்ண உடைகள் உடுத்திய சக்கிலியர்கள், நெல்-கத்தி-கம்பு முதலியவை உள்ள பனையோலைக் கூடையோடு சோணச்சாமி கோயிலிலிருந்து மொந்தையன் கோயிலுக்கு வருவார்கள். மொந்தையன் கோயிலில், சக்கிலியப் பூசாரி நெல்லைப் புரவியின் காலடியில் வைத்து, ஒரு சேவலைப் பலி கொடுத்து அதன் இரத்தத்தைப் புரவியின் கண்களில் தடவுவார். அப்போது ஒரு வெள்ளைத் துணி கட்டித் தன் கண்களை மூடிக்கொள்ளுவார். பிறகு, கணக்கன் குடும்பத்துப் பெண்டிர் தலைமையில் ஐயனார் கோயிலுக்குப் புரவிகள் எடுத்துச் செல்லப்படுகின்றன. ஐயனாருக்கு, சமைத்த சோறும் பலியும் கொடுத்து அவரை வழிபடுவார்கள்.

இறுதி நாளான நான்காம் நாளில், கிராமத்தார் காளை மாடுகளை விரட்டுவார்கள். காளைகளைக் கட்டுவதற்குத் தேவையான கயிறுகளை (வடங்களை)ப் பள்ளர்கள் திரிப்பார்கள். அது காளை மாட்டின் கழுத்தில் கட்டப்படும். கனத்த கயிற்றைத் தாங்கி ஓடும் போது அது களைத்துப்போய்விடுகிறது. இந்த விளையாட்டு முடிந்ததும் மீண்டும் ஐயனாருக்குப் பலி கொடுத்து திருவிழாவை முடித்துக்கொள்ளுவார்கள்.

### நடபாவி விழா

நடபாவி என்பது, நடவாவி என்பதன் மரூஉ. வாவி கிணறு. சித்திரா பௌர்ணமியன்று இத்திருவிழா காஞ்சிபுரத்தில் நடைபெறுகிறது. தங்கள் வேண்டுகோளை நிறைவேற்றவும் ஏழைகட்குத் திருவிழாக்காலம் முழுவதும் சோறு போடவும் சென்னை நகர் வணிகர் பலர் இத்திருவிழாவில் கலந்துகொள்ளுகின்றனர்.

கோடி கன்னிகாதானம் தாத்தாச்சாரியார் என்பவர் காஞ்சிபுரம் வரதராசப் பெருமாள் கோயிலுக்குப் பணம் வசூலித்தாராம். அவர் கொள்ளைக் கூட்டத்திடமிருந்து தன்னைக் காப்பாற்றிய ஆஞ்சநேயருக்கு ஒரு கோயில் கட்டினாராம். குளமும் வெட்டினாராம்.

ஆனால் அதற்குச் செலவான பணம் வரதராசப்பெருமாள் பெயரால் வசூலிக்கப் பெற்றதால், அந்த இறை உருவை (இறைவனுக்கு) உரிய நட்சத்திரத்தில் அய்யங்கார் குளத்திற்கு ஊர்வலமாக எடுத்துச் செல்ல முடிவு செய்தனர். ஹஸ்த நட்சத்திரத்தில் யாகத் தீயிலிருந்து வரதராசப்பெருமாள் வெளிவந்ததாக நம்பிக்கை நிலவு கிறது. இவ்விழாவின்போது இவருடைய உற்சவ விக்கிரகம் நடபாவி கிணற்றுக்குள் உள்ள மண்டபத்திற்கு எடுத்துச் செல்லப் படுகிறது. அழகாகச் செதுக்கப்பெற்ற தூண்களும் சிற்ப வேலைப் பாடுகளும் நிறைந்த இந்தக் கிணறு, சஞ்சீவராயர் கோயிலுக்கு அருகே உள்ளது. ஏராளமான படிகள் வாயிலாக இறங்கிக் கிணற்றை அடையவேண்டும். திருவிழாக் காலங்களில் கிணற்றில், கோயில் அருகே உள்ள பயங்கரமான படிவரையில் தண்ணீர் நிரம்பியிருக்கும்.

## கொடைத் திருவிழா

குமரி மாவட்டம் மணக்காட்டில் பகவதி அம்மனுக்கு நடத்தப் பெறும் திருவிழாதான் கொடைத்திருவிழா. பலவகை நோய்களால் துன்பப்படுபவர்கள், இறுதியாக வேறு வழியின்றி இங்கு வந்து பிரார்த்தனை செய்கிறார்கள். மிகச் சிறந்த மருந்துகளும் கைதேர்ந்த மருத்துவ மேதைகளும் குணப்படுத்த முடியாத நோய்கள் இங்கு வந்து வழிபட்டதும் படிப்படியாக நீங்குவதை அவர்கள் கண்ணுறக் கண்டு வருகிறார்கள்.

மலையாள மாதமாகிய கும்பத்தில் (தமிழ்—மாசி), கடைசிச் செவ்வாய்க்கிழமையில் இந்தத் திருவிழா முடிவடைகிறது. கேரளத்திலிருந்து கால்நடையாகவே, யாத்ரீகர் வருகின்றனர். அரிசி, மிளகு, வெல்லம், மஞ்சள், பொம்மைகள், வெள்ளியால் செய்த உடல் உறுப்புகள் ஆகியவற்றைக் காணிக்கையாக வழங்கும் வழக்கம் பெரிதும் பரவியிருக்கிறது. கடைசி நாளில் நள்ளிரவில் எள் விழுந்தாலும் கேட்கக்கூடிய அமைதியான சூழலில், குருக்கள் ஒடுக்க பூசையை நடத்தி, அம்மனுக்கு எலுமிச்சையும் மஞ்சளும் பிற பொருள்களும் கலந்த ஒரு குடி வகையை உணவாகப் படைப்பார்.

## கும்பாபிஷேகம்

குடநீராட்டு, குட முழுக்கு என்ற பெயர்களில் வழங்கும் கும்பாபிஷேகம் புதிய கோயில் கட்டப்பெறும்போதும், பழைய கோயில்களைப் புதுப்பிக்கும்போதும், நடைபெறும் திருவிழா. புனித நீரைக் கும்பங்களிலிருந்து, குறிப்பிட்ட நாளிலும் நேரத்திலும் இராய கோபுரம், விமானம், ஆகியவற்றில் தெளிப்பதே இத்திருவிழாவின் முக்கியமான கட்டம். இதற்காக, பல மாதங்களுக்கு முன்னரே பெரிய அளவில் ஏற்பாடுகள் தொடங்கும். யாக சாலைகள் முதலியன அமைக்கப்பெற்றிருக்கும்.

தமிழ்நாட்டுப் பெருங்கோயில்கள் உருவத்தாலும் பரப்பாலும் மிகப் பெரிய தோற்றம் தருவன. அவற்றை ஓரே பார்வையால் முழுமையாக நம் கண்களில் அடக்கிக்கொள்ள இயலாது. தொலைவிலிருந்து பார்த்தால் பெரியதும் சிறியதுமான பல கோபுரங்களின் கூட்டம் மட்டுமே தெரியும். நெருங்கிச் செல்லச் செல்ல, பல மண்டபங்களும் பல இயல்புகளும் சிற்பங்களும் நம் கண்களுக்கு விருந்தாக அமையும். கும்பாபிஷேகம் என்பது பல கோபுரங்களையும் ஒரு சேரக் காணும் வாய்ப்பு. குழுமியிருக்கும் திரளான மக்கள் கூட்டத்தின் கண்கள் அந்தக் கும்பங்களின்மீது புனித நீர் ஊற்றும் காட்சியையே இமை கொட்டாமல் பார்க்கும்.

உலகமும் உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களும் நிலம், நீர், தீ, காற்று, வானம் ஆகிய பஞ்ச பூதங்களால் ஆனவை என்று இந்துக்கள் நினைக்கிறார்கள். இவை ஒவ்வொன்றும் ஒரு கருத்தின் சின்னம். நிலம், பொருளைக் குறிக்கும். நீர், உயிர் ஓட்டத்திற்கு அறிகுறி. தீ, மனத்தை நினைவூட்டும். காற்று, அறிவியலுக்கு அப்பாற்பட்ட சக்திகளுக்குப் பிரதிநிதி. வானம், பேரின்பத்துக்கு அடையாளம். நிலத்துக்கு மஞ்சள், நீருக்கு வெள்ளை, தீக்கு சிவப்பு, காற்றுக்குக் கறுப்பு, வானத்துக்கு நீலம்—இவ்வாறு பஞ்ச பூதங்கள் பல நிறங்களால் சமயச் சடங்குகளில் உருவகப்படுத்தப் படுகின்றன. நீரும் காற்றும் இன்றி நிலத்தில் யாரும் வாழ இயலாததாகையால், சமயச் சடங்குகளில் ஏனைய மூன்றையும்விட இந்த இரு பூதங்களுக்குமே சிறப்பிடம் கொடுக்கப்படுகிறது.

நீரைச் சிறப்பிக்கும் தலையாய சடங்கு கும்பாபிஷேகம். தூய்மையான தெளிவான நீரை, பக்தி நிறைந்தவர்கள் சுத்தமான பாத்திரங்களில், புனிதமான ஆறுகள் உற்பத்தியாகும் இடங்களில் எடுத்துக்கொண்டு வருவார்கள். இவை கும்பங்கள் எனப்படும்

குடங்களில் ஊற்றப்பட்டு, மலர்களால் அலங்கரிக்கப்பெறும். குடநீராட்டு விழாவுக்கென்று போடப் பெறும் கவினுறு கொட்டகையில் அமைந்த யாகசாலையில் வரிசையாகக் கும்பங்கள் வைக்கப்பெறும். கும்பங்களிலுள்ள நீருக்கு மேலும் சக்தியும் புனிதமும் ஊட்டுவதற்காக, புலமையும் ஒழுக்கமும் உடையவர்கள் மந்திரங்களை ஓதுவார்கள்.

இறைவனுக்குக் கோயில் கட்டும், சீரிய முயற்சியின் மங்கலமான முடிவுதான் சம்புரோட்சணம், கும்பாபிஷேகம், குடமுழுக்கு என்ற பெயர்களால் மேற்கண்ட புனித நீரை ஊற்றுதல். நம் மனத்தில் இறைவன் குடியிருக்கிறன்; எனவே நாம் மனத்தில் ஆன்மீக உணர்ச்சி நிறைந்தவர்களாய், மனத்தாலும் மொழியாலும் மெய் யாலும் தூய்மையாக நடந்து கொள்ளவேண்டும், என்பதே கும்பாபிஷேகத் தத்துவம்.

கருவறையை அவ்வப்போது பேணுவதற்குக் கும்பாபிஷேகம் ஒரு வாய்ப்பினைத் தருகிறது. பீடத்தின்மீது வைக்கப்பட்டிருக்கும் திரு வுருவங்கள் ஆடாமல் அசையாமல் உறுதியாக நிலைத்து இருக்க வேண்டும் என்பதற்காக அஷ்டபந்தனம் என்ற மருந்தைச் சாத்துவது மரபு. இது கொம்பரக்கு, சுக்கான்தூள், குங்கிலியம், கற்காவி, செம்பஞ்சு, சாதிலிங்கம், தேன்மெழுகு, எருமையின் வெண்ணெய் என்ற எட்டுப் பொருள்களும் சேர்ந்த இரசாயனக் கலவை. இந்த மருந்தைச் செய்ய நியமிக்கப்படும் தொழிலாளர்கள் சுத்தமாகக் குளித்து, தூய மனமும் சிந்தனையும் கொண்டு, பக்தி யுடன் செய்யவேண்டும். மேலும், எந்த இறைவனுடைய கோயிலுக்குக் கும்பாபிஷேகம் நடைபெற இருக்கிறதோ அந்த இறைவன் பெயரைச் சொல்லிய வண்ணமாயும், அவர்க்கு விருப்ப மான (அல்லது அவர் புகழ்பாடும்) பழம்பாடல்களைப் பாடியவாறும், மருந்தை இடிக்க வேண்டும்.

குடநீராட்டு விழாக்களில் பாமர மக்கள் பெரிதும் அக்கறை காட்டி வருகிறர்கள். எழுதப் படிக்கத் தெரியாதவர்களுக்கு, இந்த விழாக்கள்தான் வரலாற்றுக் கட்டங்கள். மக்கள் கணக்கெடுப்பு அலுவலர், உன் மகனுக்கு என்ன வயது என்று நாட்டுப்புறத்தில் கேட்டால், "நான் கண்டனுங்களா. பழனி கும்பாபிஷேகத்துக்கு 8 நாள் முந்தி பிறந்துச்சு" என்பார்கள். நீதிமன்றங்களிலும் கும்பாபிஷேக விழாக்களை அடையாளமாகக் காட்டி நாள் - மாதம் - ஆண்டு இன்னது என்று சாட்சி சொல்லுவார்கள்.

அருகே நிகழும் கும்பாபிஷேகங்களுக்கு, கிராமப்புற மக்கள் கூட்டம் கூட்டமாக இசைவாத்தியங்கள், ஆலவட்டங்கள், கோயில் குடைகள் முதலியவற்றுடன் செல்லுவார்கள். நெடுந் தொலைவிலுள்ள ஊர்களில் கும்பாபிஷேகம் நிகழ்ந்தாலும்கூடத் தவறவிடாமல் நடந்துசெல்லுபவர்கள் உள்ளனர். பெரும்பாலோர் மாட்டு வண்டிகளில் கட்டுச்சாதம் கட்டிக்கொண்டு செல்லுவார்கள். ஆற்றங்கரைகளிலும் சத்திரங்களிலும் வண்டியை நிறுத்தி கட்டுச் சோற்றை உண்ட பிறகு மீண்டும் பயணத்தைத் தொடருவார்கள். இறையருளைப் பெற, கும்பாபிஷேகத்தைக் காண்பது ஒரு முக்கிய மான வழி என்ற எண்ணம் பக்தர்கள் உள்ளங்களில் ஊறிப்போய் இருக்கிறது; விருப்பமும் வசதியும் இருந்தாலுங்கூட இத்தகைய மங்கலக் காட்சிகளைக் காணும் பேறு ‘கொடுத்துவைத்திருப்பவர் களுக்கே’ கிட்டும் என்பதும் ஒரு நம்பிக்கை.

கும்பாபிஷேகத்தைப் பற்றி ஒரு சுவையான உரையாடல் உண்டு. கும்பாபிஷேகத்துக்குப் போனவனுக்கும் போகாமல் வீட்டில் இருந்தவனுக்கும் வாய்ச்சண்டை நடந்தது. யாருக்கு மோட்சம் கிடைக்கும் என்பது பற்றித்தான் இந்த வாக்குவாதம் ஏற்பட்டது.

கும்பாபிஷேகத்திலிருந்து திரும்பிவந்தவன், ‘இறையருளைப் பெறும் அரிய வாய்ப்பை நீ இழந்துவிட்டாயே’ என்று வீட்டில் இருந் தவனிடம் சொன்னான்.

அதற்கு அவன் என்ன பதில் சொன்னான் தெரியுமா? “என் உடம்பாகிய கட்டைதான் இங்கு இருந்தது. என் சிந்தனையெல்லாம் குடமுழுக்கு விழாவிலேயே இருந்தது. என் பிரார்த்தனை நிச்சயம் கடவுள் காதுகளில் விழுந்திருக்கும். அவர் எனக்கு அருள் வழங்குவார்......ஆனால் உன் நிலை என்ன? உன் உடல் உறுப்புக்கள் மட்டுமே அங்கே இருந்தன. கிராமம் முழுவதுமே வெளியேறியது போல, எல்லோரும் கும்பாபிஷேகத்திற்கு வந்துவிட்டார்களே? வீடு வாசல் எப்படி இருக்குமோ? திருட்டு நடந்திருக்குமோ, என்னவோ? சிறு குழந்தைகளை வீட்டில் விட்டு வந்தோம்; அவர்கள் எவ்வாறு இருக்கிறார்களோ? என்றெல்லாம் உன் மனத்தில் கவலைகள் ஊசலாடியவண்ணமாக இருந்திருக்கும். அதனால், உனக்குக் கும்பா பிஷேகத்துக்குப் போயும் பலன் கிடைக்காது” என்று கூறினானாம்!

## கிறிஸ்துவர்களின் திருவிழாக்கள்

தமிழ்நாட்டில் கிறிஸ்துவர்கள் பல விழாக்களைக் கொண்டாடி வருகிறார்கள். இவற்றுள் முக்கியமானது, கன்னி மேரிக்கு வேளாங் கண்ணியில் ஆகஸ்டு 28 முதல் செப்டம்பர் 10 வரை ஆண்டு தோறும் நிகழும் திருவிழா. இவ்விழாவுக்கு கத்தோலிக்கர் மட்டு மன்றி ஏனைய கிறிஸ்துவர்களும் பிற மதத்தினரும் இந்தியாவெங்கு மிருந்து வருவார்கள். தனி ரயில்களிலும் பேருந்துகளிலும் கூட்டம் தாங்கமுடியாததாக இருக்கும். கடல் கடந்து, மலேசியாவிலிருந்தும் திரளான மக்கள் வருகைபுரிகிறார்கள்.

இந்த அன்னைக்குச் செய்யும் வழிபாடுகள் கைமேல் பலன் தருவ தாக அனைவரும் நம்புகின்றனர். அவளுடைய பேரருளால் உடல் நலமும் ஏனைய நலங்களும் பெற்றவர்கள் கூறும் எண்ணிறந்த கதைகள், நாட்டில் நிலவுகின்றன. நாள்தோறும் இந்தத் தேவா லயத்தில் திருவிழா நாள் போல மக்கள் கூட்டத்தைக் காணலாம். இந்தத் தேவாலயத்தின் பெயரை எழுதி, காணிக்கைப் பொருள் களைத் தக்கவாறு அடைத்து மூங்கிற் கம்புகளால் கட்டி கடலில் மிதக்கவிட்டால் அவை ஒழுங்காக தேவாலயத்தில் போய்ச் சேருவ தாகவும் சொல்லப்படுகிறது. மலேசியாவிலிருந்து அனுப்பி இவ்வாறு கரை சேர்ந்த பொருள்கள், இந்தத் தேவாலயத்தில் காட்சியில் வைக்கப்பட்டிருக்கின்றன.

## முஸ்லீம்களின் திருவிழாக்கள்

ரபிவுஸ்ஸனி மாதத்தில் கந்தூரி திருவிழா கொண்டாடப்படுகிறது. தஞ்சாவூர் மாவட்டத்தில் நாகூர்போல, திருநெல்வேலி மாவட்டத் தில் பொட்டல் புதூர் மசூதி மிகவும் புனிதமாகக் கருதப்படுகிறது. முகமது நபியின் நேரடி வாரிசுகளில் ஒருவராகக் கருதப்படும் மொகைதீன் ஆண்டவருடைய தர்கா நாகூரில் இருக்கிறது. அவருடைய சீடரான ஒலிவில்லா கதரி என்பவர் பொட்டல் புதூர் மசூதியைக் கட்டியதாகக் கூறுவர். பொட்டல்புதூரில் நடைபெறும் 11 நாள் கந்தூரி விழாவுக்குத் திருநெல்வேலி மாவட்டத்தின் பல பகுதிகளிலிருந்தும் முஸ்லீம்கள் வருகின்றனர். இந்த 11 நாட்களிலும் நாள்தோறும் மசூதியில் பிரார்த்தனை நிகழும். இங்கு நடைபெறும் பல நிகழ்ச்சிகளில் இந்துக்களின் கோயில்களில் காணப்படும் சடங்கு

களின் சாயலைப் பார்க்கலாம். மஞ்சள், நெய், சந்தனம் ஆகிய மூன்றும் கலந்த திருநீறு, இவ்விழாவில் பக்தர்களுக்கு விநியோகிக்கப் படுகிறது. வேண்டுகோள் நிறைவேறியதற்கு நன்றி தெரிவிக்கும் முறையில், பக்தர்கள் காணிக்கையாக ரொக்கப்பணத்துடன் உடலுறுப்புக்களைப்போன்று வெள்ளியில் செய்த பொருள்களையும் மசூதிக்குச் செலுத்துகிறார்கள். நோயாளிகள் தங்கள் நோய் நீங்கினால் இன்ன இன்ன செய்வேன் என்று சொல்லி ஆண்டவரைப் பயபக்தியுடன் பிரார்த்திக்கின்றனர். ஆடுகளும்கோழிகளும் இங்கு பலியிடப்படுகின்றன. சந்தனம் குடம் குடமாக ஆண்டவருக்குப் படைக்கப்பட்டு, பிறகு இங்கு கூடியிருக்கும் இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் வழங்கப்படுகிறது.

நாகூரில் உள்ள தர்கா, ஹஜரத் சையது சாகு ஹமீத் குவாதிர் வாலி அவர்களுக்காக ஏற்பட்டது. அப்பெரியவர் தம்மை வழிபடு பவர் எந்த மதத்தினராக இருப்பினும் அவருக்குக் கருணைகாட்டி அவருடைய வேண்டுகோள்களை நிறைவேற்றி வருகிறார். உடைந்த கப்பலைக் காப்பாற்றியது போன்ற ஏராளமான அருட்செயல்களை நாகூர் ஆண்டவர் நிறைவேற்றியிருக்கிறார். இவை குறித்து விவர மான பல கதைகள் உண்டு. திரளான மக்கள் இங்கு வந்து பூ, சந்தனம், நாட்டுச் சர்க்கரை, ஊதுவத்தி, ரொக்கப்பணம் ஆகிய காணிக்கைகளை வழங்குகிறார்கள். திருவிழாக்காலத்தில் ஒரு நாளில் ஆண்டவர் வழியினர் ஒருவரை 'பீர்' ஆகத் தேர்ந்தெடுத்து, அவருக்குப் பல மரியாதைகள் செய்வது வழக்கம்.

பத்தாம் நாளில் ஆண்டவருடைய சமாதிக்குச் சந்தனம் பூசப் படும். பெரிய வெள்ளிப்பாத்திரத்தில் சந்தனத்தைக் கரைத்து, சந்தனக்கூடு என்ற அலங்காரத்தேரில் அதை வைப்பார்கள். சமாதிமீது சந்தனம் பூசும் சடங்கினைக் கலீஃபா, செய்வார். பிறகு அவர் மயக்கம் அடைந்து, போலீசாரின் கண்காணிப்பில் தன் வீட்டுக்குப் பத்திரமாக அழைத்துச் செல்லப்படுவார். மீண்டும் அவர் நினைவு அடைந்து, தர்காவுக்கு வந்து, காத்துக் கொண் டிருக்கும் பக்தர்களுக்கு சந்தனத்தைப் பிரசாதமாக வழங்குவார்.

## சந்தைகள்

திருவிழாக்களுடன் சேர்ந்து சந்தைகளும் கூடுகின்றன. நாட்டுப் புற மக்கள் தங்களிடமுள்ள உபரிப்பொருள்களை விற்கவும், தங்களுக்கு

வேண்டிய பொருள்களை வாங்கிக்கொள்ளவும், இந்தச் சந்தைகள் தான் மிகவும் பயன்படுகின்றன.

வாரம்தோறும் கூடும் சந்தைகளில் குறிப்பிடத்தக்கது பொள்ளாச்சிச்சந்தை. இது வியாழக்கிழமைகளில் கூடும். ஆனைமலை, பாலக்காட்டுப் பகுதி, பொள்ளாச்சிப் பள்ளத்தாக்கு, ஆகியவற்றின் விளை பொருள்கள் இந்தச் சந்தையில்தான் விலைபோகின்றன. நெல், தானியங்கள், தேங்காய், மணிலாக்கடலை, எண்ணெய் வகைகள், காய்கறிகள், பதனிடப்பட்ட தோல், கோழி, துணிமணிகள் யாவற்றையும் பொள்ளாச்சிச் சந்தையில் மொத்தமாக வாங்கலாம். மலைப்பகுதிகளிலும் காடுகளிலும் பிடிக்கப்படும் யானைகளும் பிற விலங்குகளும்கூட இங்கு விற்பனையாகின்றன. தாயாரைத் தவிர எதை வேண்டுமானாலும் பொள்ளாச்சிச் சந்தையில் விலைக்கு வாங்கலாம், என்று பாமர மக்கள் பேசிக்கொள்வது வழக்கம்.

கன்னியாகுமரி மாவட்டத்தில் வடசேரியில் வியாழக்கிழமைகளிலும் ஞாயிற்றுக்கிழமைகளிலும் கூடும் கனகமூலம் சந்தையும் மிகப் புகழ்பெற்றது. இங்கு விற்பனையாகும் காய்கறிகள், தேங்காய், கறி—இலை வகைகள் ஆகியவற்றை வணிகர்கள் தமிழ்நாட்டிலும் கேரளத்திலும் பல இடங்களுக்குக் கொண்டுபோகிறார்கள். இரணியலில் திங்கட்கிழமைகளில் கூடும் திங்கள் சந்தையும் முக்கியமானது. இந்தச் சந்தையில் கைத்தறித்துணிகளும், ஆடுமாடு கோழி ஆகியனவும், விற்பனை செய்யப்படுகின்றன.

கார்த்திகை தீபத்திருவிழாக்காலத்தில் திருவண்ணாமலையில் நான்கு நாட்களுக்குக் கால்நடைச் சந்தை கூடுகிறது, இது தமிழ்நாட்டின் பிரபலமான சந்தைகளுள் எண்ணத்தக்கது. இந்தச் சந்தையில் சராசரி 20,000 கால்நடைகள் விற்பனையாகின்றன என்று கணக்கிடப் பெறுகிறது. பசு, எருமை, காளை, ஆடு, கோழி, குதிரை என்னும் கால்நடை வகைகள் அனைத்தையும் இங்கு வாங்கலாம்.

மதுரையில் சித்திரைத் திருவிழாவினையொட்டிச் சந்தை கூடும். இது தென்மாவட்ட விவசாயிகளுக்கு மிகவும் முக்கியமானது. சுருக்கமாகச் சொன்னால், நாட்டுப்புற ஆடவர்களாலும் பெண்டிராலும், திருவிழா இல்லாத ஒரு பெரிய சந்தையையோ, சந்தை இல்லாத பெரிய திருவிழாவையோ, நினைத்துப் பார்க்கக்கூட முடியாது.

# 6. வாய்மொழி இலக்கியம்

எழுத்து வடிவமான தமிழ், மிகப் பழமையானது. ஆனால் அதற்கும் முற்பட்டது தமிழ் இலக்கியம். ஒவ்வோர் இலக்கியத்துக்கும் பாட பேதங்கள் இருப்பதே இதற்குச் சான்று.

எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு முதலிய தொகைநூல்கள் முதலில் உருவானபோது, அவை எழுத்துவடிவில் உருவாகவில்லை. அவற்றைக் காதால் கேட்டவர்கள் நினைவில் வைத்திருந்து, பிறகு எழுதிக்கொடுத்தனர். அவற்றின் தொகுப்பு, வகைப்படுத்தியும் தொகைப்படுத்தியும், இன்று நமக்கு அறிமுகமாக உள்ள முறையில் தொகை நூலுருவம் பெற்றுள்ளது.

## வாய்மொழிப் புலவர்கள்

வாயாரப் பாடல்களைப் பாடியவர் பலவகையாவர். சான்றாக, பாணர், கூத்தர், பொருநர், விரலியர், புலவர், அகவுனர் (அகவலர்) ஆகியவரைக் குறிப்பிடலாம். மனத்தில் தோன்றிய கருத்தை வெளியிட, நாவும் வாயுமே அவர்களுக்குக் கருவிகளாக வாய்த்தன. கவிதை இயற்றுவது, இயற்றிய கவிதையைப் பிறருக்குத் தெரிவிப்பது, படித்து உணருவது—அனைத்தும் வாய்மொழியாக மட்டுமே நிகழ்ந்தன. இந்தக் கால கட்டத்திற்குப்பிறகே அறிஞர்கள் நூல் இயற்றும் காலம் உண்டாயிற்று. வாய்மொழிப் புலவர்கள் தாங்கள் வாழ்ந்த பகுதியின் வரலாற்றையும், தாங்கள் பழகிய மக்களிடம் பேசித் தெரிந்துகொண்ட கதைகளையும் அடிப்படையாகக் கொண்டு, தங்கள் கருத்துக்களைக் கவிதைகளில் உருவாக்கினர்.

பாணர், பாட்டுகளை இசையோடு பாடுவதில் இணையின்றி விளங்கினர் ; இவர்களில் சிலர் யாழ் என்னும் இசைக்கருவியின் துணை கொண்டு பாடியதால் யாழ்ப்பாணர் என்னும் பெயர் பெற்றனர்.

இவர்கள் பெரிய யாழ், சிறிய யாழ் முதலிய பலவகை யாழ்களைப் பயன்படுத்தினர்.

பொருநர் என்பார் ஏர்க்களமும் போர்க்களமும் பாடும் கூத்தர்கள். இவர்கள் (சிறு) முரசு ஒலித்துப் பாடி வந்தார்கள்.

## எழுதப்பட்ட இலக்கியங்களும் எழுதா இலக்கியங்களும்

எழுதா இலக்கியங்கள் முதலில் தோன்றின. எழுத்து வடிவமான இலக்கியங்கள் பிறகு எழுந்தன. இவை இரண்டும் ஒன்றையொன்று பாதித்துள்ளன. பிற்காலத்தில் உருவான வாய்மொழி இலக்கியங்கள், எழுத்து வடிவில் வெளிவந்த நூல்களைப் பயன்படுத்தியுள்ளன. எழுதப்பட்ட இலக்கியங்கள், வாய்மொழி இலக்கியங்களின் இயல்புகளையும் போக்குகளையும் பின்பற்றியிருக்கின்றன.

தமிழ் இலக்கியத்திற்கே முன்னோடியாக விளங்கும் தொல்காப்பியம் நாட்டுப்பாடல்களைக் குறிப்பிடுகிறது. 'பண்ணத்தி' என்பது நாட்டுப்பாடல்களுக்குத் தொல்காப்பியம் இட்டிருக்கும் பெயர். இளங்கோவடிகளின் சிலப்பதிகாரமும் கிராமிய ஆடல் பாடல்களைப் பற்றிப் பல இடங்களில் கூறுகிறது. அகநானூற்றிலும் புறநானூற்றிலும் இவற்றைப் பற்றிய பல குறிப்புகள் உள்ளன. தமிழ்த் தாத்தா டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர், 'நாட்டுப்பாடல்களின் அடிப்படையில் தோன்றியனவே குறவஞ்சி, பள்ளு, தாலாட்டு, நொண்டி நாடகம், அம்மானை போன்ற பல பிரபந்த வகைகள்' என்று சொல்லியிருக்கிறார். கவியரசர் சுப்பிரமணிய பாரதியார், நாட்டுப் பாடல்களில் தாம் நெஞ்சைப் பறிகொடுத்ததை, உள்ளம் உருகக் குயில் பாட்டில் குறிப்பிடுகிறார்.

சிலப்பதிகாரத்தில் கடற்கரைப்பாடல்களும், வேடர்களின் பாடல்களும், பசு மேய்க்கும் பெண்களின் பாடல்களும், குறிஞ்சி நிலத்து மங்கையர் பாடல்களும், இடம்பெற்றிருக்கின்றன. தமிழ்மக்களின் வாய்மொழி இலக்கியத்தில் இன்றும் கண்ணகி கதை சிறப்புடன் மிளிர்கிறது. மலையாள வாய்மொழி இலக்கியம், கண்ணகியைப் பத்திரகாளியாகக் காட்டுகிறது ; இவள் புகழையும் வீரத்தையும் மலையாள மொழியில் பல கதைப்பாடல்கள் இயம்புகின்றன. கொடுங்கோளூரில் நிகழும் பரணி விழா, சிலப்பதிகாரத்தின் ஒழுங்குபடுத்தப்பட்ட ஒரு பதிப்பாகக் கருதப்படுகிறது. தமிழ்நாட்டில் சிலப்பதிகாரம் படிக்காத பாமர மக்களுக்கு, நாட்டுப் பாடல்களிலும்

தெருக்கூத்துக்களிலும் வரும் கோவலன் கண்ணகி கதைதான் தெரியும்.

உலகப் பெருங்கவிஞர்கள், பெரும்பாலும் நாட்டுப்பாடல்களில் அமைந்துள்ள அழகான மெட்டினைப் பின்பற்றி, புதிய பாடல்கள் புனைவார்கள். நாட்டுப்பாடல்களில், இசை முழுமை பெற்றிராது, கவிஞர்கள் அந்தக் குறையைப் போக்கிவிடுவார்கள். இரவீந்திரநாத தாகூர், நாட்டுப் பாடல்களின் இசையமைப்பில் பல பாடல்களை இயற்றியுள்ளார். பழைய மெட்டுகளைக் கொண்டு புதுப்பாடல்கள் புனைவது எப்போதும் எங்கும் நிகழும் செயலாகும். இயற்கையாக நாட்டு மக்கள் உள்ளத்தில் தோன்றுவன நாட்டுப்பாடல்களே.

> " ஆயிரம் கண்ணுடையாள் எங்கள் முத்துமாரி
> அகிலமெல்லாம் காத்திடுவாள் சிங்கத்தின் மேல்ஏறி "

என்ற நாட்டுப்பாடலைக் கிராமப் பகுதிகளில் கேட்கலாம். இந்த அழகான மெட்டினைப் பின்பற்றி,

> துணிவெளுக்க மண்ணுண்டு—எங்கள் முத்து
> மாரியம்மா, எங்கள் முத்துமாரி!
> தோல்வெளுக்கச் சாம்பருண்டு, —எங்கள் முத்து
> மாரியம்மா, எங்கள் முத்துமாரி!
> மணிவெளுக்கச் சாணையுண்டு, —எங்கள் முத்து
> மாரியம்மா, எங்கள் முத்துமாரி!
> மனம்வெளுக்க வழியில்லை, —எங்கள் முத்து
> மாரியம்மா, எங்கள் முத்துமாரி!

என்று ஒரு பாடலைக் கவியரசர் சுப்பிரமணிய பாரதியார் பாடியிருக்கிறார்.

இவ்வாறே 'சுதந்தரப் பள்ளு' என்ற பாடலில் பள்ளுப் பாட்டையும், பெண்கள் விடுதலை பற்றிய பாடலில் கும்மி வகையையும் பாரதியார் பயன்படுத்தியிருக்கிறார். நாட்டுப்பாடல்களின் இயல்பு பாரதியாருக்குக் கைகொடுத்திருப்பதை, புதிய கோணங்கியிலும், 'கண்ணன் என் காதலி' யில்வரும் தங்கமே தங்கம், 'உலகத்து நாயகியே எங்கள் முத்துமாரி' என்ற பாடல்களிலும் பார்க்கலாம்.




கன்னியாகுமரி முனை

இந்தியப் பெருங்கடல்

## குறியீடுகள்

- விவசாயப் பாடல்கள்
- ஏற்றப் பாட்டு
- தெம்மாங்குப் பாடல்
- மீன் பிடிக்கும்போது பாடும் பாடல்கள்
- உடுக்குப் பாட்டு
- வில்லுப் பாட்டு
- லாவணி
- ஒப்பாரி
- மலைவாசிகளின் இசையும் நாடகமும்
- லம்பாடிகளின் இசையும் நடனமும்
- மலர் வழிபாடும் நடனமும்
- ஒயில் கும்மி
- கரகம்
- காவடி
- பொய்க்கால் குதிரை
- தெருக்கூத்து
- பொம்மலாட்டம்
- ஜல்லிக்கட்டு
- திருப்பதிக் குடை
- வலம்புரிச் சங்கு

### நடன - நாடகங்கள்

அ. திருக்குற்றாலம் குற்றாலக் குறவஞ்சி
ஆ. விராலிமலை விராலிமலைக் குறவஞ்சி
இ. திருக்கழுக்குன்றம் சரகூர் நாடகம்
ஈ. சிவகிரி மோகினி ஆட்டம்
உ. ஸ்ரீரங்கம் அரயர் அபிநயம்
ஊ. தலமங்கலம் கும்பேசர் குறவஞ்சி
எ. தஞ்சாவூர் சரபேந்திர பூபாலக் குறவஞ்சி
ஏ. வேதாரண்யம் மாவெலி நாடகம்
ஐ. புதுக்கோட்டை கபிலை நாடகம், திருக்கோகர்ணம்
ஒ. ஸ்ரீவில்லிபுத்தூர் அரயர் அபிநயம்
ஓ. எட்டையபுரம் வள்ளி பாரதம்
ஔ. ஆழ்வார் திருநகரி அரயர் அபிநயம்
க. திருச்செந்தூர் செந்தில் குறவஞ்சி
ச. மெலட்டூர் பாகவத மேளா

## வாய்மொழி இலக்கியத்தின் தன்மைகள்

எழுத்தில் ‘வருகிறது’, ‘போகிறது’ என வரும் இடங்களில் வாய்மொழி இலக்கியத்தில் ‘வருது’, ‘போகுது’ என்ற கொச்சைச் சொற்கள் நிகழ்காலத்துக்குப் பயன்படுத்தப்படுகின்றன.

அடித்தல், பிடித்தல், வைதல், என்று எழுத்தில் வருவன, வாய் மொழியில் முறையே அடிச்சல், பிடிச்சல், வசல் என வரும். இன்னும், ‘தீர்த்துவிட்டான்’ என்பது ‘தீச்சுட்டான்’ ஆகிவிடும்.

வாய்மொழி இலக்கியம் தனி ஒருவர் பெயரைக் குறிப்பிடாது. அதை மறைமுகமாக, கேலிப்பெயர் அல்லது பட்டப்பெயராக வெளி யிடும். சில பட்டப் பெயர்கள், ஒருவருடைய தோலின் தோற்றத் தாலும், ஏனைய அவர் வீடு இருக்கும் திக்கினை வைத்தும், வேறு சில, அவருடைய குணம் அல்லது குணமின்மையாலும், ஏற்பட்டிருக்கும். மனைவியின் ஊராலும், மனைவியின் உடல் அமைப்பாலும் ஒருவனை அடையாளம் கூறுவதும் உண்டு.

பேச்சு வழக்கில் அடைமொழிகளை, தாராளமாக உபயோகிப்பது மரபு. மிக நன்றாக ஒருவன் பேசினால், “கொன்னுட்டான்” என்பார்கள். சில சொற்களைத் திரித்தும் இலக்கண மரபு பிறழ்ந்தும் சொல்லுவார்கள். சான்று:

நிரம்ப என்பதை ரொம்ப என்பர்;
இரவு என்பதை ரா என்பர்;
இறக்கை என்பதை றக்கை என்பர்.

சிக்கனமாகத் திருமணம் நிகழ இருப்பது பற்றிய குறிப்பு:

“அய்யாச்சாமிக்கு கலியாணம்
அவரவர் வீட்டில் சாப்பாடு
கொட்டு முழக்கு கோயிலில்
வெற்றிலை பாக்கு கடையிலே
சுண்ணும்பு சூளையிலே”

வாய்மொழி இலக்கியத்துக்கு மேலும் சில சான்றுகள் தருவோம்:

### உரையாடல்களும் நாடோடிக் கதைகளும்

வீர சைவன் ஒருவனும் வைணவத்தில் அளவுகடந்த ஈடுபாடு உடைய ஒருவனும் சந்தித்தார்கள்.

சைவனிடம் ஒரு பசு இருந்தது. பாத்திரத்தில் இருந்த பாலை, கறந்து முடிவதற்குள், அந்தப் பசு உதைத்துக் கொட்டிற்று. இது அந்தப் பசுவுக்கு அன்ருடப் பழக்கமாக ஆகிவிட்டது. ஆகையால் அதை விற்றுவிட அவன் முடிவு செய்தான்.

வைணவனிடம் ஒரு ஜோடி அடங்காத காளைகள் இருந்தன. அவற்றைப் பிடித்து வண்டியின் நகத்தில் கட்ட இயலவில்லை. ஆகையால் அவன் அவற்றை விற்க விரும்பினுன்.

எப்படியோ இருவரும் தங்களிடம் இருந்த கால்நடைகளை மாற்றிக் கொண்டார்கள். ஆறு மாதங்களுக்குப் பின்னர் அவர்கள் இருவரும் சந்தித்தனர். தங்களிடம் முன்னர் இருந்த கால்நடைகள், இடம் மாறிய பிறகு புதிய எஜமானரிடம் ஒழுங்காக இருக்கும் என்று இருவரும் நினைத்துக் கொண்டிருந்தார்கள். ஆனுல்...

பசு எப்போதும்போல, பால் கறக்கும் பாத்திரத்தை எட்டி உதைத்தது. காளை மாடுகளின் குணமும் கடுகளவும் மாறவில்லை.

"உன்னுடைய காளைகளை வண்டியில் பூட்டினுல் சிவா சிவா. அதனுல் இடதுபுறத்தில் பூட்டிய காளையை வலது பக்கமும், வலது பக்கம் பூட்டியிருந்ததை இடதுபக்கமாகவும் மாற்றினேன். அப்போதும் சிவா, சிவா !" என்று சைவன் சொன்ஞனும்.

"உன்னுடைய பசுவைப் பால் கறக்கப்போனுல், கோவிந்தா, கோவிந்தா" என்று வைணவன் சொன்ஞனும்.

### ஆஸ்திகனும் நாஸ்திகனும்: ஓர் உரையாடல்

கடவுள் நம்பிக்கை நிறைந்த ஒருவனும், மூடநம்பிக்கை என்று கோயில்களை வெறுக்கும் பகுத்தறிவாளன் ஒருவனும் வெவ்வேறு திக்குகளில் சென்றனர்.

பக்தன் கோயிலுக்குச் சென்று இறைவனை வழிபட்ட பிறகு தன் தொழிலைக் கவனிக்கச் சென்ருன். செல்லும் வழியில் ஒரு கல் குத்தி, சற்றுக் காயம் அடைந்தான். ஆனுல் பகுத்தறிவாளன், அவன் சென்றுகொண்டிருந்த வழியில் ஒரு ரூபாய் நோட்டைக் கண்டெடுத்தான். அவன் ஆஸ்திகனைச் சந்தித்தபோது, எனக்குக் கடவுள் நம்பிக்கை இல்லாவிட்டாலும், நான் பணத்தைக் கண்டெடுத்தேன். நீ கல் கடவுளை நம்பினுய், காலில் கல் உன்னைக் குத்திவிட்டது" என்று சொன்னுன்.

பக்தனுக்கு இதைக் கேட்டுக்கொண்டு சும்மா இருக்கமுடியவில்லை. உடனே விவரமாகவும் சுடச்சுடவும் பதில் சொன்ஞன். "என்னை இன்று நல்ல பாம்பு கடித்துக் கொன்றிருக்கவேண்டும்'

என்னுடைய தெய்வ நம்பிக்கையாலும் கடவுளின் கருணையாலுமே நான் காப்பாற்றப்பட்டிருக்கிறேன். தலையோடு போகவேண்டியது தலைப்பாகையோடு போனதுபோல, சிறிய காயத்துடன் தப்பி விட்டேன். உன்னைப்போல அதிர்ஷ்டசாலிக்கு எவ்வளவோ பெரிய நன்மைகள் கிடைத்திருக்கவேண்டும். உன் பகுத்தறிவு உனக்கு ஒரு ரூபாயை மட்டுமே தந்திருக்கின்றது. கடவுள் நம்பிக்கை உனக்கு இருந்திருக்குமானால் இன்று உனக்கு ஒரு பெரும் புதையல் அல்லவா கிடைத்திருக்கும்.''

**சோதிடர்**

ஒரு சோதிடர் சொன்னதெல்லாம் பலித்து அவர் பெயரும் புகழும் பெற்றார். ஒரு தடவை அவரிடம் ஒருவன் வந்து தன்னுடைய பசு மாடு காணாமற் போய்விட்டதாகச் சொன்னான். மாட்டின் நிறம், பல், பிற அடையாளங்கள் எல்லாவற்றையும் சோதிடர் விவரமாகக் கேட்டுக்கொண்டு, 'இத்தனை நாட்களுக்குள் வீடு வந்து சேர்ந்து விடும், நீ தட்சிணையை வைத்துவிட்டு தைரியமாய் வீட்டுக்குப் போ' என்று சொன்னாராம்.

தன் புகழுக்கு இழுக்கு வராதிருக்க, அந்த அடையாளங்களுக்கு ஏற்ப அவரே ஒரு பசுவை விலைக்கு வாங்கி நள்ளிரவில் அந்தக் குடியானவன் வீட்டில் கொண்டுபோய்க் கட்டிவிட்டு வந்தாராம்!

**சென்னை மாநகரும் நாட்டுப்புறத்தானும்**

பட்டிக்காட்டிலிருந்து சில பேர் சென்னைக்கு வந்தார்கள். பெரிய பெரிய கட்டிடங்களை எல்லாம் பார்த்து இது என்ன? அது என்ன? என்று கேட்டார்கள். அவை எல்லாம் 'காலேஜ்' என்று கேள்விப் பட்டார்கள். அதனால் பெரிய கட்டிடங்களில் இருந்த மிருகக் காட்சிச்சாலை, கன்னிமரா அரும்பொருட் காட்சிக்கூடம் ஆகிய வற்றுக்கும் காலேஜ் என்ற அடைமொழியை வழங்கினார்கள். மிருகக் காட்சிக் கூடத்தை 'உயிர் காலேஜ்' என்றனர். இறந்துபோன உயிரினங்களைப் பாடம்பண்ணிவைத்த பகுதிகளும் இருப்பதால் அரும்பொருட் காட்சிக்கூடத்தை 'செத்த காலேஜ்' ஆக்கினர்.

பட்டிக்காட்டான் பட்டினத்தைப் பார்த்துக்கொண்டே போனான். பெரிய பெரிய வீடுகள் இருந்தன. அவற்றின் பெயரும் அவற்றின் சொந்தக்காரர்களின் பெயரும் ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்தன. அரை குறையாக ஆங்கிலம் படித்தவன் ஒருவனைத் துணைக்கு அழைத்துச் சென்றான். இது யார் வீடு? அது யார் வீடு? என்று

வினவினுன். வாடகைக்கு விடக் கூடிய காலியாக இருந்த வீடு களில் To Let (வாடகைக்கு விடப்படும்) என்றும், விற்பனைக்கு உரிய விடுகளில் For Sale (இந்த வீடு விற்கப்படும்) என்றும் பலகைகள் தொங்கவிடப்பட்டிருந்தன. அரைகுறைப் படிப்புக்காரன் இது 'பார்சேல்' துரை வீடு, இது 'டு லெட்' துரை பங்களா, என்று சொல்லிக்கொண்டுபோனுன். பார்சேல் துரையைவிட டுலெட் துரை தான் பெரிய பணக்காரனுக இருப்பான் போலிருக்கிறது, என்று பட்டிக்காட்டான் நினைத்தான்.

### பயிர்த்தொழில் குறித்த நாட்டுப் பாடல்கள்

நாட்டுப்பாடலின் பெரும்பகுதி பயிர்த்தொழில் குறித்ததுதான். இந்தத் தலைப்பில் பலவகைப் பாடல்கள் பாடப்பெற்றிருக்கின்றன.

ஒரு மூங்கில் மரமும் இரு காளைமாடுகளையும் கொண்டு பாசனத் திற்காக, கிணற்றிலிருந்து நீர் இறைக்கும்போது பாடும் பாட்டு ஏற்றப் பாட்டு எனப்படும். கவிச்சக்ரவர்த்தி கம்பன் நீர்வளம் நிறைந்த சோழநாட்டில் ஏற்றப்பாட்டுக்களைக் கேட்டு அயர்ந்துவிட்டதாகவும், அப்போது ஒரு பாட்டுப்பாடியதாகவும் சொல்லுவார்கள். ஏற்றத்தின் மீது இலைகளிலிருந்து விழும் பனியையும், சூரிய வெப்பம் முத்தமிட்டு அந்தப் பனியை உறிஞ்சி விடுவதையும் கம்பன் பாடியிருக்கிருன். 'ஏற்றப்பாட்டுக்கு எதிர்ப்பாட்டு இல்லை' என்பது ஒரு பழமொழி.

கதிர் அறுவடை, நாற்று நடவு, இன்னும் உழவுச்சமயத்தில்கூட தனியாகவோ, பலரும் சேர்ந்தோ பாடும் நாட்டுப்பாடல்கள், உள்ளன. இவை யாவும், நிறைந்த விளைச்சல் வேண்டி இறை வனுக்குச் செய்யப்படும் பிரார்த்தனைகளே. பிள்ளையார், முருகன், சிவபெருமான் ஆகியோரை வேண்டும் பாடல்கள் "பிள்ளையாரே வரணும்" என்ற சொற்களுடன் தொடரும். பருவமழை தவறக் கூடாது என்ற வேண்டுகோளும் அதில் இடம்பெறும்.

நாற்று நடும்போது,

'அடுக்கி நடுங்கோடி அழகு சம்பா
நாற்று எடுத்து . . . .'

என்ற பாடலைப் பாடுவார்கள்.

உழவர்களிடம் பல பழமொழிகள் வழங்கி வருகின்றன. இவற்றுள் சிலவற்றைக் கூறுவோம்:

எச்சவன் எள்ளுவிதை
வாடினவன் வரகு விதை

கொளுத்தவன் கொள்ளு விதை
சோத்துக்கு இல்லாதவன் சோளம் விதை.

'ஆடிப்பட்டம் தேடிவிதை' என்பது மற்ருெரு பழமொழி. உழவன் எப்போதும் பருவத்தில் கண்ணும் கருத்துமாக இருந்து, மழை பெய்யத் தொடங்குமுன், வயலைத் தயாராக வைத்திருக்க வேண்டும் என்பது இதன் கருத்து.

"அகல உழுவதைவிட ஆழ உழுவதே மேல்"
"வீட்டுச் செல்வம் மாடு, தோட்டச் செல்வம் முருங்கை"
"இறைத்த கிணறு ஊறும், இறைக்காத கிணறு நாறும்"
"விரை ஒன்று போட, சுரை ஒன்று முளைக்குமா?"

என்பதுபோன்ற பல பழமொழிகள் நிலவுகின்றன. உழவன், தானே கவனமாக வேளாண்மை வேலைகளை மேற்பார்க்க வேண்டும். காலாகாலத்தில் களை எடுக்க வேண்டும், பல வகையான இயற்கை உரங்களின் தராதர்த்தை உணர்ந்து அவற்றைச் சேமித்து வைத் திருந்து உரிய காலங்களில் தக்கவாறு பயன்படுத்தவேண்டும், என்பன எல்லாம் பழமொழிகளில் உள்ளன.

வீட்டுக்கு அருகிலேயே நிலம் இருக்க வேண்டும். கூடுதலான வருவாய் தரும் நெடுந்தொலைவிலுள்ள நிலத்தைவிட, வீட்டோரத்தில் உள்ள நிலமே அதன் வருவாய் குறைவாக இருந்தாலுங்கூடச் சாலச் சிறந்தது.

ஒருவனுடைய நிலங்கள் சேர்ந்தாற்போல ஒரு தொகுதியாக இருக்க வேண்டும் என்பதை வற்புறுத்தும் பழமொழிகளும், நன்செய்ப் பயிர் களுக்குக்கூட இறவை மூலம் தண்ணீர் பாய்ச்சினுல் வீட்டுச் சாப் பாட்டுக்குக்கூட நெல் காணுது என்ற கருத்துள்ள பழமொழிகளும், உள்ளன.

பழையகோட்டைப் பட்டக்காரர், தலைமுறை தலைமுறையாய்த் தமிழ்நாட்டின் பெரிய நிலக்கிழார். இவர்களுக்கு சொந்தமான புகழ் பெற்ற மாட்டுப்பண்ணை காங்கேயத்தில் இருக்கிறது. அங்குதான் 'காங்கேய' இனத்துக் காளைமாடுகள் உருவாக்கப்படுகின்றன. பட்டக்காரர் இந்தப் பண்ணையை நடத்தும் முறை, அதற்காக அவர் அளவுகடந்து செய்யும் செலவுகள், மாட்டு விற்பனைக்காக கண்ண புரம் திருப்பூர்த் தேர்த்திருவிழாச் சந்தைகளில் பட்டக்காரர் போய், பத்து நாட்களுக்கு அங்கு தங்கியிருப்பதற்காகச் செய்யப்படும் பல் வேறு ஏற்பாடுகள், அவருடன் செல்லும் வேலையாட்கள் — எடுபிடி ஆட்கள், சமையல்காரர்கள், கணக்கப்பிள்ளைகள், மாடுபிடிப்ப

வர்கள், மாடு குளிப்பாட்டுபவர்கள், தரகர்கள் — ஆகியவரைப் பற்றியும் விருந்தினர்க்கு அந்தத் தற்காலிக மாளிகைகளில்கூட பட்டக்காரர் செய்யும் விருந்தோம்பலும் நாட்டுப்பாடலில் நயமாக விவரிக்கப்பட்டிருக்கின்றன.

வேளாண்மை வேலையில், காதல் பிறப்பதும் இயல்பே. சில சமயம் அது ஒருதலைக்காதலாக இருந்துவிடும். மாமன் தான் காதலிக்கிருன் என்ருலும், உரிமை உடைய அவன் கள்ளத்தனமாகக் காதலிப்பதை அக்காள் மகள் விரும்பவில்லை. அவள் பாடும் பாட்டுத்தான்: 'வாட வெற்றிலை வதங்க வெற்றிலை......' எனத் தொடங்கும் நாட்டுப்பாடல்.

நாட்டுப்புறங்களில் வாழும் பெண்கள் சண்டையிட்டுக் கொள்ளும் போது, நாட்டுப்பாடல் வெளிவரும். சான்று:

**ஒருத்தி :** "வட்டவட்டத் திட்டையிலே வரகரிசி தீட்டையிலே
ஆர் கொடுத்த சாயச்சோமன் ஆலவட்டம் போடுதடி?"

**மற்ருெருத்தி :**

"ஆருங் கொடுக்கவில்லே அவிசாரியாடவில்லை
கையெரியப் பாடுபட்டுக் கட்டினேண்டி சாயச் சோமன்"

சாயச்சோமன் என்பது கெண்டைபோட்ட சேலையைக் குறிக்கும்.

**வழிநடைச் சிந்து**

மலைமீதும் நெடுந்தொலைவில் நடந்து சென்றும் சேரவேண்டிய கோயில்களுக்குச் செல்லும் பக்தர்கள் கூட்டமாக நடந்துசெல்லும் போது களைப்புத் தெரியாமல் இருப்பதற்காகப் பாடும் பாடல்களும் உண்டு. இவற்றுக்கு வழிநடைச் சிந்து என்று பெயர். இவ்வகையில் சபரிமலைக்குச் செல்லும்போது அய்யப்ப பக்தர்கள் பாடும் பாடல்களையும் குறிப்பிடலாம்.

மதுரை—இராமநாதபுரம் மாவட்டங்களின் எல்லையில் சதுரகிரி மலையிலுள்ள மகாலிங்கசுவாமி கோயிலுக்குச் செல்லும் பக்தர்கள் பாடும் வழிநடைச்சிந்தும்சுவையானது. இது 250 வரிகள் உடையது. வழியிலுள்ள நீராடும் இடங்களான சுனைகள், தெய்வங்களின் கோயில்கள், மற்றும் மலைமீதுள்ள மூலிகைகள் இதில் வர்ணிக்கப் பட்டுள்ளன. கணவனும் மனைவியுமாகச் செல்லுகிருர்கள். கடவு

ளிடம் நம்பிக்கை வைக்கும்படியும் அவரைப் பிரார்த்திக்கும்படியும் மனைவிக்குக் கணவன் சொல்லும் பகுதி இது :

" சித்தி முத்தியைக் கொடுக்கும்
மகாலிங்கநாதரையும், தங்கரத்தினமே
மாட்சிமையைக் கும்பிடுவோம் பொன்னுரத்தினமே
அப்பன் மகாலிங்கருக்கு அன்புடனே பூசாரிகள்
முப்பழ அபிஷேகமும்தான், தங்க ரத்தினமே
முக்கியமாய் நடத்துகிருர், பொன்னுரத்தினமே
அன்புவடிவானதொரு ஆனந்த வல்லிக்கோயில்
முன்பே இருக்குது பாரு, தங்கரத்தினமே
முழுதும் நம்மைக் காத்திடுவாள், பொன்னுரத்தினமே "

அடுத்து நாம் தருவது கொங்குநாட்டு வழிநடைச்சிந்து :

காளியம்மன் கோயிலிலே—மஞ்சப்பானை நூறு
சிறுமாவிளக்கு நூறு—அங்கு
நின்றுகொண்டு கும்மி யடிக்கிற
தண்டியப் பெண்கள் நூறு
காளியம்மன் கோயிலிலே—காந்தலைட்டைப் பொருத்தி
அந்தக் காளியம்மனைப் பாடி
இடுப்பிலொரு சலங்கை கட்டி
இந்தா வாரா காளி
தங்க மலையிலே வேட்டை யாடி
தாமரைப் பூவிலே வந்திறங்கி
தவிச்சு வரமாரியம் மாளுக்குத்
தங்கக் குஞ்சம் கட்டி வீசுங்கடி.

திங்கள் மும்மாரி பெய்யும் நாட்டிலே, ஆண்டுக்கு ஒரு மாரியும் அரிதாகிவிடுகிறது. நீர் உயர்ந்தால்தானே நெல் உயரும்? மழைத் தெய்வத்தை மனங்கனிந்து வேண்டினுல், மழை பொழியும் என்ற நம்பிக்கையோடு வருணதேவனை வேண்டிப் பாடும் பாடல்:

பூமியை நம்பியல்லோ ஐயோ வருணதேவா
பிள்ளைகளைப் பெற்றுவிட்டோம் ,,
பூமி செழிக்கவில்லை ,,
பிள்ளைவயிறு வாடுகிறதே ,,
மேழி பிடிக்கும் —முகம்சோர்ந்து நிற்கிறதே
கலப்பை பிடிக்கும்—கை சோர்ந்து நிற்கிறதே

வேலித் தழைபறித்து—விரல்எல்லாம் கொப்புளமே
காட்டுத் தழைபறித்து—கைஎல்லாம் கொப்புளமே
கல்யாண வாசலிலே ஐயோ வருணதேவா
கையலம்பத் தண்ணியில்லே ,,
பிள்ளைபெற்ற வாசலிலே ,,
பிள்ளை அலம்பத் தண்ணியில்லே ,,

மக்களின் வேண்டுதலுக்கு இரங்கிய வருணதேவன், மழை பொழியத் திருவுளம் கொள்கிறன். கார்மேகங்கள் வந்து கவிகின்றன. வானம் இருளுகிறது. மக்கள் மகிழ, இடிஇடித்து, மின்னல் மின்னி, எங்கும் மழை பொழிகிறது. மக்களின் மகிழ்ச்சி ஆரவாரப் பாடல்களை இச்சந்தர்ப்பத்தில் பாடுகிறர்கள்.

**காதலர் உரையாடல்**

(தன்னன னேனே னேனே அன்னமே குயிலே என்ற பாட்டின் மெட்டு)

தலைவன் : வாய்க்கப் படப்புப் போல அன்னமே குயிலே
வருகுதடி மோட்டா வண்டி தன்னன குயிலே
தலைவி : ஆன வாரது போல் அன்னமே மச்சான்
வருகுதையா ரயில் வண்டி தன்னன மச்சான்
தலைவன் : கட்ட வண்டியிலே அன்னமே குயிலே
கருப்பாயி வாருளே தன்னன குயிலே
தலைவி : காதோரம் கொண்டக்காரி அன்னமே மச்சான்—அவ
கைய அசைக்கிருளே என்னமோ ஏதோ
தலைவன் : கண்ணில் மைக்காரி அன்னமே குயிலே—அவ
கண்ண அடிக்கிருளே என்னமோ ஏதோ.
தலைவி : சேலய வீசுருளே அன்னமே மச்சான்-அவ
சிரிக்கவுஞ் செய்யிருளே என்னமோ ஏதோ.
தலைவன் : எனக்குப் பிடிச்சிருக்கு அன்னமே குயிலே
என்னக்கிக் கல்யாணந்தான் தன்னன குயிலே
தலைவி : என்கதி என்னச்சி அன்னமே மச்சான்
எங்கிருந்து வந்தாளோ என்னமோ ஏதோ.
தலைவன் : எருமக் கெடாமேலே அன்னமே குயிலே
எம்பிள்ளை வாருனே தன்னன குயிலே.
தலைவி : உம்மயுந் தெரிஞ்சு போச்சு அன்னமே மச்சான்-நா
ஒதுவாக்கர பொம்பளதா தன்னன மச்சா

இருவரும் : நம்மபுள்ள கல்யாணத்த அன்னமே ராசா-நாம்
நாலு பேர்க்குச் சொல்லிருவோம் தன்னுன ராசா
நாதசரக் கச்சேரிய அன்னமே ராசா-நாம்
நாளு பூராம் வச்சுருவோம் தன்னுன ராசா.

### வண்டிக்காரன் பாடல்

சரக்கு ஏற்றிச் சந்தைக்கு வண்டிக்காரர்கள் செல்லும்போது, பாடிக்கொண்டே செல்லுவார்கள் :

முதல் ஆள் : சாலையிலே ஆலமரம்—இது
சலுக்காரு வச்ச மரம்
ஓங்கிப் படந்த மரம்—இங்க
ஒத்தையாய் நிக்கி மரம்.
2-ஆவது ஆள் : விழுது நெறஞ்ச மரம்—இது
வெரகுக்கு ஒதவும் மரம்
வெயிலுக்கு நல்ல மரம்—எங்க
வேலப்பர் தங்கு மரம்.
3-ஆவது ஆள் : ஒத்த கொம்பு மயிலக் காள—என்
ஒரு காது அறுந்த காள
ஒத்தப் பட்டி காரிக்காள—என்
ஓழவிலே சண்டிக் காள
4-ஆவது ஆள் : வண்டிக்கு நொண்டிக் காள—என்
வருமானத்த அழிக்குங்காள
வயசும் போன காள—ஒன்
வம்சப்பேரக் கெடுத்த காள
5-ஆவது ஆள் : கருத்தச் சட்டக்காரா
களவிலே கெட்டிக்காரா-எங்
கருத்த காள வெரலுதுடா
காத வழி ஓடிடடா.

[இவ்விருபாடல்களையும் உதவியவர் சைதாப்பேட்டை ஆசிரியர் கல்லூரி உடற்பயிற்சி ஆசிரியர் திரு. சி. சீனி.]

### தாலாட்டு

தாலாட்டுக்கள் கேள்வி அறிவு மட்டும் உடைய தாய்மார்களால் பாடப்பெற்றவை. இருந்தபோதிலுங்கூட இவற்றில் அவர்களுடைய உலகியல் அனுபவத்தையும், இலக்கிய மணம் கமழும் சொற்களையும்

காணலாம். குழந்தைகளை உறங்கவைப்பதற்காகவே தாலாட்டுகள் பாடப்பெறுகின்றன. கிருஷ்ண பகவானைத் தூங்கவைக்க, 'தாலாலோ' என்ற இறுதிச் சொல்லுடன் பெரியாழ்வார் பத்துத் தாலாட்டுப் பாக்கள் பாடியுள்ளார்.

ஒரு மூதாட்டியாரின் தாலாட்டு இது:

ஆரடித்தார் ஏனழுதாய்
கொம்புக் கனியே
கோதுபடா மாங்கனியே
வம்புக் கழுதாயோ
வாயெல்லாம் பால்வடிய.

மாமன் அடிச்சானோ
மல்லிகைப்பூச் செண்டாலே!
அத்தை அடித்தாளோ
அல்லிமலர்ச் செண்டாலே!
அடித்தாரைச் சொல்லியழு
ஆக்கினைகள் செய்துவைப்போம்
தொட்டாரைச் சொல்லியழு
தோள்விலங்கு போட்டுவைப்போம்!

ஆரும் அடிக்கவில்லை
ஐவிரலும் தீண்டவில்லை
தானா அழுகின்றான்
தம்பிதுணை வேணுமென்று
அவனா அழுகின்றான்
ஆத்தாள் மடிதேடி

புண்ணியத் துறைகளாடி இறைவழிபாடு செய்த பிறகு, இறைவனின் அருளால் குழந்தை பிறந்ததையும் தாலாட்டில் பக்தியுடன் தெரிவிப்பது மரபு:

"ஸ்ரீ ரங்கம் ஆடி
திருப்பாற் கடலாடி
மாமாங்கம் ஆடி
மதுரைக் கடலாடி
சங்குமுகம் ஆடி
சாயாவனம் பார்த்து

முக்குளமும் ஆடி
முக்திபெற்று வந்த கண்ணே ''

சந்தனமோ என் பொருளோ
சாமி தந்த தவப்பயனே
கொட்டி வைத்த முத்தோ
குமிச்சு வைத்த ரத்தினமோ

தாலாட்டுக்களில் பிறந்த வீட்டுப் பெருமை பேசப்படும். மாமன் அளிக்கும் அன்பளிப்புப் பொருள்களின் பட்டியல் இது :

நெத்திக்குச் சிட்டி
நிழல் பார்க்கக் கண்ணுடி
காலுக்குத் தண்டை
கைக்குக் கணையாழி

பாட்டன் கடல்கடந்த நாடுகளில் பெற்ற பெருமை கூறும் தாலாட்டுக்கள் செட்டிநாட்டில் உண்டு.

காடுவெட்டி நாடாக்கி
கள்ளரெல்லாம் உள்ளமர்த்தி
நாடு விட்டும் வாராக
ராஜாக்கள் உங்கள் ஐயா.

குழந்தையைத் தாலாட்டும் ஏழைத்தாய், செல்வமும் சிறப்பும் நிறைந்த வீட்டில் பிறந்திருந்தால் இந்தக் குழந்தையின் வாழ்வு செழிப்பாக இருக்குமே என்று ஏங்குகிருள் :

'' முத்துச் சிரிப்பழகா
முத்துப் பல் அழகா
வெத்துக் குடிசையிலே
விளையாட வந்தாயோ
ஏழைக் குடிசையிலே
ஈரத்தரை மேலே
தாழம் பாய் போட்டு
தவழ்ந்தோட வந்தாயோ ?
தரையெல்லாம் மேடுபள்ளம்
தவழ்ந்தால் உறுத்தாதோ ?

பளிங்கால் அரண்மனையும்
பவளத்தூண் மாளிகையும்
பணக்காரன் வீடிருக்க
பஞ்சனிடம் வந்ததேன்?

மதுரைப் பகுதித் தாலாட்டுக்களில் வையையில் வரும் வெள்ளங்களைப் பற்றிய குறிப்புக்கள் சுவையுடன் இணைக்கப்பட்டிருக்கும்.

திருச்செந்தூர்ப் பகுதித் தாலாட்டுக்களில், வள்ளி தெய்வானை பற்றியும், அவர்களுக்கு ஏற்ற வளையல்கள் பற்றியும், சொல்லப் படுகின்றன.

### பள்ளிப் பருவப பாடல்கள்

பால்மணம் மாறியதும் குழந்தைகளைப் பாலர் பள்ளிகளுக்கு அனுப்பும் பழக்கம் பரவிவருகிறது. பள்ளத்தூர் சோலச்சி ஆச்சி நர்சரி பள்ளியில் சொல்லிக் கொடுக்கப்படும் பாட்டு இது: (உதவியவர் குமாரி டி. கிறிஸ்டியானுபாய்)

ஒன்று, இரண்டு, ரோஜாப்பூ
மூணு, நாலு மூலையில்போய் தூங்கு
அஞ்சு, ஆறு பொழுதெல்லாம் கட்டுச்சோறு
ஏழு எட்டு இது லட்டு
ஒன்பது பத்து ஓடிப்போ மீனு

குழந்தைகளுக்கு இறை நம்பிக்கையை வளர்க்க கீழ்க்கண்ட தாலாட்டு, இரவு உறங்குவதற்குமுன் பாடப்பெறும்:

அரியின்னு பாய்விரித்து
அச்சுதான்னு பேர் சொல்லி
கிருஷ்ணன்னு படுத்தவர்க்கு
ஒரு நாளும் கேடில்லை
கோவிந்தான்னு படுத்தவர்க்கு
ஒருநாளும் குறைவில்லை.

படுத்து எழுந்ததும், படுக்கையில் இருந்தவாறே, பாடும் பாட்டு இது:

"பொழுது எப்ப விடியும்?
பூ எப்ப மலரும்?
சிவன் எப்ப வருவார்?
பலன் எப்ப தருவார்?"

பொழுது என்பது சூரியன் அல்லது பகற்பொழுதையும், பூ என்பது தாமரைப் பூவையும், குறிக்கும்.

### அம்மானைப் பாடல்கள்

அம்மானைப் பாடல்கள் என்பன இறைவியர்மீது பாடப்பெறுவன. இவை, சிலப்பதிகாரக் காலத்திலிருந்தே வழங்கி வருகின்றன. 'அம்மானை' என்ற இறுதிச் சொல்லுடன் ஒவ்வொரு பாட்டும் முடிவடைவதால் இவ்வகைப் பாடல்கள் 'அம்மானை' எனப்பட்டன.

அம்மானைப் பாடல்களுள், ஆச்சியர் அல்லது ஆயர் பெண்கள் பாடும் 'கோவாமலை ஓரம், கோத்த மலை ஓரம்...' என்னும் பாட்டும் புகழ்பெற்றது. ஊஞ்சலில் உட்கார்ந்து, (உலோகங்களால் செய்த) பந்துகளை ஆடிக்கொண்டு, அம்மானை பாடுவார்கள். இறைவி, போர் வீரன் அல்லது நெருங்கிய உறவினன் புகழைக் கூறும் அம்மானைகளைப் பாடுவார்கள்.

சிவகங்கை அம்மானை, வரலாற்றுச் செய்திகளையும் கூறி, தேசிய உணர்ச்சி ஊட்டுகிறது. பாஞ்சாலக்குறிச்சியில் அமைச்சராக இருந்த சிவ சுப்பிரமணியம் என்பவரை ஆங்கிலேயர் தூக்கிலிட்ட நிகழ்ச்சியை அது விவரமாகவும், கேட்பவர், படிப்பவர் மனம் உருகவும், வருணிக்கிறது. ஆங்கிலச் சொற்களைச் சிதைத்து கொச்சைத் தமிழில் இந்த அம்மானை வழங்குகிறது. சான்று: மேசன் (மேஜர்), துருப்பு (ட்ரூப்), கெவுனர் (கவர்னர்), பிஷ்டல் (பிஸ்டல்)

'இராமப்பையன் அம்மானை'யும் இவ்வகையில் புகழ்பெற்றது.

### கதைப் பாடல்கள்

*(1) சமுதாயத்தைப் பற்றியவை*

இவற்றில் பெரும்பாலும் கலப்புத் திருமணங்கள் பற்றியும், அவற்றால் உரிய மணமகனும் மணமகளும் அவரவர் உறவினரிடம் பட்ட துன்பமும், சொல்லப்பட்டிருக்கும். சொத்துரிமை பெறப் பெண்கள் மேற்கொண்ட துயரங்களும், மற்றும் சாதிக் கொடுமைகளும், இவற்றில் விவரிக்கப்பட்டிருக்கும். இவ்வகையில் புகழ்பெற்றவை (1) நல்லதங்காள் கதை, (2) முத்துப்பட்டன் கதை.

ஒவ்வொரு சாதியாரும் தண்ணீரைத் தொட்டுவிட்டால் தண்ணீருக்குத் தீட்டு ஏற்படும் என்ற நம்பிக்கை பற்றிய பாட்டு சுவையானது:

கரையிலே அலை மோத
காவேரித்தண்ணி ஆடி வர
சுருள் சுருளாகச் சுற்றி வரும் அழகைப்பார் கண்ணே.
வெள்ளிக் காசாட்டம் மின்னுவதைப் பார்
குடிக்கவும் காவேரித் தண்ணீர்
குளிக்கவும் காவேரித் தண்ணீர்
குடம்குடமாய்ச் செல்லுதே கண்ணே,
தீட்டும் உண்டோ இந்தத் தண்ணிக்குக் கண்ணே!
தீட்டென்று சொன்னாலும்
கேட்போருக்கு மதி எங்கே போச்சு கண்ணே
பாப்பானுக்குக் காவேரி
பறையனுக்கும் அது காவேரிதான் கண்ணே
பதினெட்டுச் சாதியிருக்கும் பட்டியில்
பறையனும் பிராமணன் ஆகலாம்
சக்கிலியனும் ராஜாவாகலாம் கண்ணே
எல்லோரும் கும்பிடும் தண்ணி காவேரித் தண்ணி
வாடி கண்ணே வா; நாமும் கையெடுத்துக் கும்பிடுவோம்.
நமக்கு உயிர் கொடுக்கும் காவேரித்தாயை
கும்பிட்டால் கை நோவுமா என்ன?

*(2) இதிகாச புராணங்கள் பற்றியவை*

பாமர மக்களுக்கு இவற்றில் ஈடுபாடு மிகுதி. ஏணி ஏற்றம், பொன்னுருவி மாசக்காய் முதலியன குறிப்பிடத்தக்கவை. அவற்றை விட முக்கியமானது, அல்லி அரசாணிமாலை. இதில் கண்ணன், குறத்தியாக வந்து, நாட்டுவளத்தைப் பாடுகிறான். ஒரு லேகியம் செய்து அல்லியை அடையலாம் என்று அர்ச்சுனனுக்குச் சொல்லு கிறான்: 'கொச்சி மலை குடகு மலை எங்களது நாடு...' என வரும் பாடல் புகழ்பெற்றது.

"அல்லி பெயரைச் சொல்லிக்கொண்டே இந்த லேகியத்தை பாகம் பண்ணவேண்டும். லேகியம் உருவாகி வரும்போது அவளுடைய புதிய மன நிலையும் உருவாகும். மருந்தில் சேர்க்கும் சரக்குகள் அனைத்தும் அவற்றின் தனி இயல்புகளை இழந்து விடும்போது, அவளும் தன் சொந்த இயல்பை இழந்து, உன் ஆசைக்கு அடிமையாகிவிடுவாள்" என்கிறாள் குறத்தி.

உவமைகள் நிறைந்திருப்பதும், பூத்தோட்டக்கலை, பழத்தோட்டக் கலை ஆகியவை பற்றி அரிய செய்திகள் விடுப்பதும், இப்பாடல் களின் சிறப்பு.

### *(3)* வரலாற்றுச் சிறப்புடையவை

இவை அந்தந்தக் காலத்து அரசியல் நிகழ்ச்சிகளையும், அந்தந்தக் காலத்தில் பிரபலமாக விளங்கிய வீரர்களையும், நேர்த்தியாகவும் நுணுக்கமாகவும் படம் பிடித்துக் காட்டுகின்றன. சிலவற்றில் ஆண்டுகள் தவருக இருக்கும்; ஒரு நூற்ருண்டுக்காலம் கூட, அவர்களுக்கு ஒரு பொருட்டு அன்று. ஆனுல் அவற்றின் கற்பனைத் திறன் நம் பாராட்டுக்கு உரியது.

இப்போது நமக்குக் கிடைத்துள்ளவை ஐவர் ராஜாக்கள் கதை, கன்னடியன் படைப் போர், ராமப்பய்யன் அம்மானை, இரவிக்குட்டி பிள்ளைப் போர், சிவகங்கை அம்மானை, சிவங்கைக் கும்மி, பூலித்தேவன் சிந்து, கட்டப்பொம்மன் கதைப்பாடல்கள், கான் சாகிப் கதைப்பாடல் முதலியன. இவை ஒவ்வொன்றுக்கும் பாட பேதங்கள் உண்டு. பொதுவாக இவை பெரும்பாலும் ஆங்கிலேயப் பேரரசை எதிர்த்த விடுதலை வீரர்களின் புகழைக் கூறுவன. காந்திய இயக்கத்தோடு இவையும் திரளான மக்களிடையே பெரிதும் பரவி, தேசிய உணர்ச்சிக்கு மேலும் வித்திட்டன.

செஞ்சியை ஆண்ட ராஜா தேசிங்கு கதையைக் காண்போம்:

தேசிங்குராஜன் சிறுவனுக இருந்தபோது, தன் தந்தை சிறைப் பட்டதை அறிந்து, டில்லி சென்று நவாப்பைக் கண்டான். நவாப்பின் உத்தரவின்படி, ‘பராசக்தி' என்ற குதிரைமீது சவாரி செய்து அதை அடக்க முற்படுகையில் அக்குதிரை சென்ற வேகத்தை இப்பாட்டு வெளிப்படுத்துகிறது:

“குதிரை போகும் வேகத்தாலே
பூமி குலுங்குது பார்!
பர்வதங்கள் படபட வென்று
பதறி நடுங்குது பார்!
காடு மலைகள் செடிகள் எல்லாம்
கலங்கி நடுங்கிடவே,
மலைகள் இடிந்து தவிடுபொடியாய்
மண்மேல் விழுந்திடவே”

குதிரை விரைந்து செல்லுகிறது.

தேசிங்குராஜன் கதையின் வேறு ஒரு சுவையான பகுதியையும் குறிப்பிடுவோம்.

நவாப்பை எதிர்த்துத் தேசிங்கு போர்க்கோலம் பூண்டு புறப் படுகிறுன். அதை அறிந்து அவன் தாய் அங்கு வந்து மகனிடம் பின்வருமாறு பாடி அவனைத் தடுக்கிருள் :

"நீ பிறந்தது வெள்ளிக்கிழமை
மகனே தேசிங்கு !
உன் குதிரை பிறந்தது வெள்ளிக்கிழமை
ராஜா தேசிங்கு !
சண்டை பிறந்தது வெள்ளிக்கிழமை
ராஜா தேசிங்கு !
இன்றைக்கு இருந்து நாளைக்குப் போடா
மகனே தேசிங்கு !"

இவ்வாறு கூறிய தாய்க்கு வீரச்சேய் கூறும் விடையைக் கேட் போம் :

"ஆறிலும் சாவு நூறிலும் சாவு
என்னைப் பெற்ற தாயே !
பிறந்த அன்றைக்கே சாவு இருக்குது
என்னைப் பெற்ற அம்மா !"

**கன்னடியப் போர்**

குலசேகரன் என்ற பொன்னுப் பாண்டியன் 1265-ல் வள்ளியூரை ஆண்டான். அவனுடைய படத்தைப் பார்த்த வடுக (கன்னடிய) இளவரசி அவன் மீது ஆசை கொண்டாள். அவனுடைய வீரதீரச் செயல்களைப் பற்றிக் கேள்விப்பட்டு, அவனையே திருமணம் செய்து கொள்ள உறுதிபூண்டாள். அவள் தகப்பன் இச்செய்தியை, குலசேகர பாண்டியனுக்குத் தூதர்கள் மூலம் சொல்லியனுப்பினுன். "வடுகர் கீழ்ச் சாதியினர், எனவே, நான் வடுகச்சியைத் திருமணம் செய்துகொள்வதற்கில்லை" என்று சொல்லி, திருமணம் செய்து கொள்ள, பாண்டியன் மறுத்துவிட்டான். சினங்கொண்ட கன்னடியன், தென் திருவாங்கூர் அரசர் துணையுடன் குலசேகரப் பாண்டியன் நாட்டைப்படையெடுத்து, குலசேகரனைச் சிறைப் பிடித்து, இளவரசியை மணக்க அவனைப் பல்லக்கில் அழைத்து வந்தான். வரும் வழியில், குலசேகர பாண்டியன் தற்கொலை செய்து

கொண்டான். மனம் கலங்கிய இளவரசி அவன் பிணத்துக்கு மாலை யிட்டு, அவனோடு உடன்கட்டை ஏறினாள். எனக்கும் என் கணவருக்கும் கோயில் கட்டுக என அவளுடைய ஆவியிட்ட கட்டளையை, கனவில் கேட்ட அவள் தந்தை, அவர்களுக்குக் கட்டிய கோயில், ''வடுகச்சி மலை' என்ற பெயரால் வழங்கிவருகிறது.

## இரவிக்குட்டி பிள்ளை பாடல்

இது, கனியகுளத்தில் பதினேழாம் நூற்றாண்டில் நிகழ்ந்த போரைப் பற்றியது. வேணாட்டு அரசனின் படைத் தளபதியாக இருந்த இரவிக்குட்டி பிள்ளை வீரத்துக்கும் இளமைக்கும் புகழ் பெற்றவன். மதுரைத் திருமலை நாயக்கனின் படைகளுடன் போரிட்டு அவன் உயிர்நீத்தான். வெற்றிபெற்ற வேணாட்டரசன், இரவிக்குட்டி பிள்ளைக்கு வீரக்கல் அமைத்து, தெய்வமாக அவன் வழிபடப்பட வேண்டுமென்று ஆணையிட்டான்.

**வீணாதி வீணன் கதை :** நாட்டுப் பாடல்கள், நாட்டுக் கதைகள் ஆகியவற்றின் ஆராய்ச்சியில் ஈடு இணையற்று விளங்கும் பேராசிரியர் வானமாமலை பல்லாண்டுகள் பொறுமையாக ஆராய்ந்து இந்தக் கதையைத் தமிழ்கூறு நல்லுலகுக்கு வழங்கியுள்ளார்.

நெல்லை மாவட்டத்தின் தென் கோடியில் பல நூற்றாண்டுகளுக்கு முன் வீணாதிவீணன் வாழ்ந்தான். அவனுடைய சொத்துக்களை யெல்லாம் உற்றாரும் உறவினரும் திருடிக்கொண்டு அவனை ஓட்டாண்டி ஆக்கிவிட்டனர். எனவே, ஏதாவது வேலை பார்த்து அவன் பிழைக்கவேண்டியவன் ஆனான். ஒரு வண்ணானிடம் போய், நானும் உன்னோடு சேர்ந்து துணி துவைக்கிறேன் என்று வீணன் சொன்னான். 'நீங்கள் உயர்ந்த சாதிக்காரர், துணி துவைக்கும் தொழிலுக்கு வரக்கூடாது' என்று வண்ணான் தடுத்து விட்டான். வேறு வழியின்றி வீணன் பிச்சை எடுத்துச் சாப்பிட்டு வந்தான். ஆனால் அவ்வாறு கிடைத்த உணவு அவனுக்குச் செறி மானம் ஆகவில்லை. எனவே, அவன் ஒரு துறவி போல நடிப்பது என்ற முடிவுக்கு வந்தான். துறவிக்கு உரிய உடைகளை அணிந்து, 'அரஹரா தெய்வம் குரு, தர்மப்பிச்சை இடு அம்மா' என்று பாடிக் கொண்டு ஊர் ஊராகச் சென்றான். ஆனால் அவனுடைய கெட்ட காலம், அவன் போலிச் சாமியார் என்பது வெளியாகிவிட்டது.

பிறகு, அரசாங்கக் காடுகளில் மரம் வெட்டி விறகு விற்றான். பின்னர் தோட்டங்களில் காய்கறிகளைத் திருடி கூடை தூக்கி காய்கறி வியாபாரம் செய்தான். அவனுடைய திருட்டுச் செயல்களை அறிந்து

காவலர் கையும் களவுமாக அவனைப் பிடித்துவிட்டார்கள். பிறகு அவன் ஏரி, குளம், கிணறு ஆகியவற்றில் காவலன்போல நின்று அரசாங்க அதிகாரியாக நடித்து தண்ணீர் மொண்டு செல்பவரிடம் 'அரசர் கட்டளை' என்று சொல்லி ஒரு குடத்துக்கு ஒரு காசு வீதம் எல்லோரிடமும் வரி வசூலித்து வந்தான். ஆனால் கலிங்கன் என்ற அமைச்சன் வீட்டு வேலைக்காரி இந்த வரியைச் செலுத்த மறுத்தாள். அவள் பாடிய பாடல் இது :

"வாவிக்கரைப் பெண்களை சேவிக்கவோ வந்தாய்
மாப்பிள்ளைக்கு ஆகுவாயோ பேய்ப் பரச்சி மகனே!
நாட்டில் குடக்காசு வாங்கும் பிணமே நீ
நாய்க்கும் பேய்க்கும் வள்ளியூரிலே மூப்பு வந்துபோச்சோ
ஊட்டி தெறிக்க கிணத்துக்குள்ளே தள்ளிப்போட்டு
உண்டை கல்லைத் தானெடுத்து மண்டையிலே போடு"

வீணாதிவீணன் ஒரு கம்பால் அவளை அடித்தான், அதனால் அவள் மயக்கமாகக் கீழே விழுந்தாள். அதைக் கண்டு அஞ்சிய ஏனைய பெண்கள் மூச்சுவிடாமல் வீணாதிவீணனுக்குக் 'காசு' வரி செலுத்தினார்கள்.

அமைச்சர் கலிங்கன் இதைப் பொருட்படுத்தவில்லை. அரசன் சொல்லித்தான் வீணாதிவீணன் வரி வசூலிக்கிறான் என்று அமைச்சன்கூட நினைத்துவிட்டான்!

நாட்கள் செல்லச் செல்ல, வீணாதிவீணன் திருமண வீடுகள், சாவு வீடுகள் எல்லாவற்றிலும் வரி வசூலித்து, பெருஞ் செல்வன் ஆகி விட்டான். அவன் நல்லவனுக்கு நல்லவனாகவும் எதிரிக்கு எதிரியாகவும் நடந்துகொண்டான். அறிஞர்களையும் கலைஞர்களையும் ஆதரிக்கும் புரவலனாகவும் விளங்கினான். அவனிடம் உள்ள பணத்தை எடுத்துவரும்படி அமைச்சர் அவன் வீட்டுக்குப் போர் வீரர்களை அனுப்பினார். "எந்த அதிகாரத்தைக் கொண்டு வரிகளை வசூலிக்கிறீர்?" என்று வீணாதிவீணனை அரசனே நேருக்கு நேராகக் கேட்டான்.

அரசாங்க வருவாயைப் பெருக்கமுடியாத ஆட்களை அமைச்சரவையில் வைத்துக்கொண்டிருந்த அரசனை, வீணாதிவீணன் இகழ்ந்தான்.

"உங்களுக்குப் புத்தி உண்டோ ?
அப்பாவியை மந்திரியாய் வைத்திருக்கும் ராஜாவே!

பண்புடைய என் வீட்டில்
பணப்பெருக்கைப் பாரும்''

என்று வீணன் பாடினுன். தன் வீட்டில் உள்ள பொருள் அனைத்தும் அரசனுக்காகவே திரட்டப்பட்டிருப்பதாயும் கூறினுன். அரசன் அவனுக்கு மரியாதைகள் செய்து, அவனையே தன் அமைச்சனுக நியமித்துக்கொண்டான்.

**ஜம்புலிங்கம் கதை**

இவ்வகையில் சந்தனத்தேவன் கதையும் திருடன் ஜம்புலிங்கம் கதையும் புகழ்மிக்கவை. ஜம்புலிங்கம் வீரத்திற்கும் கருணைக்கும் புகழ் பெற்றவன். அவனைப் பற்றிய ஒரு பாடல் இது:

"பணக்காரனை இளைக்க வைத்துப்
பாவங்களைத் தழைக்க வைத்து
பக்கத்திலேயே உட்கார்ந்து
பசிகளெல்லாம் அமர்த்திவிட்டு
வாரார் சொக்கத் தங்கம்—நம்ம
நாடார் ஜம்புலிங்கம்"

**பலவகைப் பாடல்கள்**

அறிவியல் கண்டுபிடிப்புக்கள் பாமரர் உள்ளங்களை ஈர்க்கின்றன. அவற்றின் எதிரொலியை நாட்டுப்பாடல்களில் பார்க்கிறோம்.

இரயில் வண்டியைப் பற்றிய பாடல் இது:

"இஞ்சினு வண்டிகளாம்
இருபுறமும் சூட்சுமமாம்
மாடில்லாமல் போகுதாம்
வெள்ளைக்காரன் மந்திரவண்டி
தானே ஓடுதாம்
ஒசத்தியான வெள்ளைக்காரன் வண்டி
அந்தா வருகுது
வாடிப்பட்டி சந்தையிலே
தந்தியிலே பேசுருன்
சமயநல்லூர் டேசனிலே."

மருந்து, பிள்ளைப்பேறு, மழை, வாரம் ஒரு முறை கூடும் கிராமச் சந்தை, சந்தையில் வாங்கும் சாமான்கள் பட்டியல், ஆகியவை பற்றியெல்லாம் நாட்டுப்பாடல் உண்டு.

### உழைப்புப் பாட்டு

உழைப்பால் உண்டாகும் உடற் சோர்வு, உள்ளச் சோர்வு, இரண்டையும் நாட்டுப்பாடல்கள் போக்குகின்றன. சான்று :

மலையோரம் கெணறு வெட்டி தில்லாலங்கிடி லேலம்
மானுக் கொம்பு ஏத்தம் வச்சு ,, ,,
மாமன் மகன் இறைத்த தண்ணீ ,, ,,
மஞ்சாத் தோட்டம் பாயுதோடி ,, ,,
குன்னோரம் கெணறு வெட்டி ,, ,,
கொய்யாக் கொம்பு ஏத்தம் வச்சு ,, ,,
கொழுந்தனுரு இறைக்கும் தண்ணி ,, ,,
கொய்யாத் தோட்டம் பாயுதோடி ,, ,,

### மலைச்சாதியாரின் நாட்டுப்பாடல்கள்

#### *(1)* தோதவர்

தோதவரின் வாய்மொழி இலக்கியத்தில் சிறப்பானவை கனவுக் கவிகள். இவற்றை, அண்மையில் இறந்தவர்கள் பாடியதாகத் தோதவர்கள் நம்புகிறார்கள். இறந்துபோனவர்கள், தங்கள் இனத்தின் சாதனைகளைப் புகழ்ந்தும், அவற்றில் தொடர்ந்து பங்குபெறும் வாய்ப்பை இழந்ததை வருந்தியும், இப்பாடல்களைப் பாடுவார்கள். இறந்துபோன பெண்கள் பாடும் பாடல்கள், தங்கள் கணவன் புதிதாகத் திருமணம் செய்துகொள்ளப் போகும் பெண்ணிடம் தங்களுக்கு உள்ள பொருமையை வெளிப்படுத்தும்! இன்னொரு பாட்டில், பெண் குழந்தைகளை மட்டுமே பெற்ற ஒருத்தி, இவர்களை ஆளாக்கித் திருமணம் செய்து வைத்துப் பாராமல் இவன் மறு திருமணம் செய்துகொள்கிறானே, என்று புலம்புகிறாள்.

தோதவர்களின் வாய்மொழி இலக்கியத்தின் தனிச்சிறப்பு, ஆட்களின் பெயர்களைச் சொல்லாமல் உருவகப்படுத்தியும் அடையாளங்களாலும் 'இன்னார்' என்பதைச் சுட்டிக்காட்டுவதாகும். எருமைகளைப் பற்றிய செய்திகள் அவர்களுடைய பாடல்களில் இடையிடையே இருக்கும். காதல் பாக்களில் விடுகதைகளும் இரு பொருள் நிறைந்த சொற்களும் விரவிவரும்.

#### *(2)* பழியர்

பழியர் சில ஆயிரம் பேர் பழனிமலை நெடுக, கோடைக்கானல் வரையில் வாழ்கின்றனர். அவர்களுடைய நாகரிகம் மிகத் தொன்

மையானது என்பதும், அவர்களுக்கு முற்பட்ட இனம் உலகில் இல்லை என்பதும், அவர்களுடைய முடிவு.

'வந்த மேட்டுப் பாதையிலே .....' என்று தொடங்கும் இவர்களுடைய பாட்டு, சமதளத்திலுள்ள மக்கள் மலைப்பகுதிகளுக்கு வந்து காடுகளை அழிப்பதையும், யானைகள் தங்குவதற்கு இடமின்றித் தவிப்பதையும், கூறுகிறது.

(3) மண்ணுடிகள்

மலைச்சாதி மக்களுடைய வாழ்க்கையும் மழையும் ஒன்ருேடொன்று இணைந்தன, பிணைந்தன. ஆகையால் அவர்கள் எந்தச் சடங்கிலும் மழைவேண்டும் என்று பிரார்த்தனை செய்து பாடுவார்கள். மாதம் தவருமல் மழை பெய்தால், தெய்வம் கேட்கும் உயிர்ப்பலிகளைக் கொடுக்க அவர்கள் தயாராக இருக்கிருர்களாம்:

மாசமொரு மழை
பெய்யட்டும் மண்ணுடி
மந்தைக்கொரு கிடா
வெட்டிக்கோ மண்ணுடி
தேசமொரு மழை
பேயட்டும் மண்ணுடி
தெத்துக்கு ஒரு கிடா
வெட்டிக்கோ மண்ணுடி (தேலேலோ)

பள்ளுப்பாடல்கள்

மதுரைப் பள்ளர் வகுப்பினர் பாடும் பாடல்கள் சிலவற்றைப் பார்ப்போம். இவை கணவனின் ஒழுங்கு தவறிய வாழ்க்கையைப் பற்றி மனைவி வருத்தத்துடன் கூறுபவை: மீனுக்கு வாலையும் பாம்புக்குத் தலையையும் காட்டுவதுபோல தன் கணவன் இரு வேறு வாழ்க்கை நடத்துகிருன். தன்னிடமிருந்து பணத்தை எல்லாம் பறித்து 'இன்னெருத்தி'க்கு முகப்பூச்சுக்காகச் செலவழித்து, இவளைத் தெருவில் தவிக்கவிட்டிருக்கிருன்—இப்படி ஒரு பாட்டு.

இவள் பங்கு வெட்கம், அவள் பங்கு செல்வம், கனவிலும் இவள் நினைவுதானும் அவருக்கு. அடுக்குமா அழகரே, என்று கேட்கிருள். அணைக்கு மேல் வெள்ளம் போய்விட்டது. இனி அவருக்கு அச்சம் உண்டாலுல்தான் திருந்துவார் என்று அழகரிடம் முறையிடுகிருள்—இப்படி இன்னெரு பாட்டு.

### அத்தான் பாட்டு

இவை தவிர, குழந்தைகளுடைய வயதுக்கேற்றவாறு வெவ்வேறு வகைப் பாடல்களும், விளையாட்டுக்களைப்பற்றிய பாடல்களும், திருமணப் பருவத்தில் உள்ளவர்களுக்கும் திருமணம் அண்மையில் நடந்தவர்களுக்கும் உரிய பாடல்களும், உள்ளன. அத்தானைப் பற்றிச் சில பெண்கள் பாடும் பாட்டு இது :

தஞ்சாவூர் மாப்பிள்ளை
தாசில்தார் என்று சொன்னார்கள்
தஞ்சாவூருக்குப் போனேன்
முரசுகொட்டி விளையாண்ட
தாசில்தாரைப் பார்த்தேன்
கள்ளிக்கோட்டை மாப்பிள்ளை
கலெக்டர் என்று சொன்னார்கள்
கள்ளிக்கோட்டைக்குப் போனேன்
கழுதைகளை அவர் மேய்க்கக் கண்டேன்

### காதல் பாட்டு

சுண்டெலிக்கும் சுண்டெலிக்கும் கல்யாணம் என்ற பாட்டில், ஆண் சுண்டெலி தன் காதலிக்குச் சொல்லுவது :

நீ சமையல் செய்யவேண்டாம்
வீட்டு வேலையும் ஒன்றும் செய்யவேண்டாம், அன்பே
என்னுடன் கூடவே இருந்தால் அதுவே போதும்
எப்போதும் என்னோடு பேசினால் அதுபோதும்
கிணற்றில் தண்ணீர் இறைப்பது, துணிவெளுப்பது
அந்த வேலை எல்லாம் இல்லை, காதலியே !
என் பக்கத்தில் இரு, பாடிக் கொண்டே இரு
அதுவே போதும், என் காதலியே !

### இணையும் இதயங்களின் எண்ணப் பரிமாற்றம்

ஆண் : ரோட்டோரம் தோட்டக்காரி
மல்லிகைப்பூ சேலைக்காரி
நீ இறைக்கும் தண்ணியிலே
மல்லிகைப்பூ மணக்குதடி

பெண் : குத்துக் கல்லு மேலிருந்து
குறும்பு பேசும் மச்சானே
அத்தை மகன் முறையாலே
அடக்கிக் கொண்டேன் மையலிலே

## ஒப்பாரிப்பாடல்கள்

தமிழில் ஏராளமான ஒப்பாரிப் பாடல்கள் உள்ளன. இவை இலக்கியச் சிறப்புடையனவாகவும் இருக்கின்றன.

இளமையில் கணவரைப் பறிகொடுத்தவளின் ஒப்பாரியிலிருந்து ஒரு பகுதி :

சில்லென்று பூத்த
சிறு நெருஞ்சிக் காட்டுடே
நில்லென்று சொல்லி
நிறுத்திவழி போனீரே

சிறு குழந்தை இறந்தபோது, பெற்ற தாய் பாடியது :

ஈ கடிக்கச் சம்மதியோம்
எமன் வரச் சம்மதியோம்
காற்றடிக்கச் சம்மதியோம்
காலன் வரச் சம்மதித்தோம்

விதியில் நம்பிக்கை இழந்து, தலைவி பாடும் பாட்டு இது :

" தாலிக்கு அரும்பெடுத்த
தட்டானும் கண்குருடோ
சேலைக்கு நூலெடுத்த
சேணியனும் கண் குருடோ
பஞ்சாங்கம் பார்க்கவந்த
பார்ப்பானும் கண் குருடோ
எழுதினவன் தான் குருடோ
எழுத்தாணி கூரிலையோ "

**பிற பாடல்கள்**

## ஞானக்கும்மி

குதிரைகட்டி லாயத்திலே மனக்
கோட்டையிலே சந்தைப்பேட்டையிலே
எதிரிதான்வந்து தட்டுகிறனதை
ஏதென்றுகேளடி ஞானப்பெண்ணே.
காமனெவருக்கும் மூத்தவன—மவன்
கற்றிடும் வித்தைகள் மெத்தவுண்டாம்
தாழதமான குரோதனும்—லோபனுந்
தம்பியாம்கேளடி ஞானப்பெண்ணே.
மோகமிதமரண் பிள்ளைகளாம்—ஒரு
மூர்க்கமசியக் காரனெடு
சேகரவீரஷை டம்பனுஞ்சம்பனுஞ்
சினேகிதமாவது ஞானப்பெண்ணே.
சிநேகிதனுக்கேற்ற வுறவாளி—பொல்லாத்
தீயவனுமோ ராங்காரி
அநேகத்தைச்செய்யு மதியில்ரோஷனு
மத்தைமகனடி ஞானப்பெண்ணே.
பெண்ணே கேளுபதின்—மூன்று
பேர்களுண்டு பகையாளி
ஒன்றேயொன்று வசமானுலவ
ரொடுங்குவாரடி ஞானப்பெண்ணே.
ஒடுக்கமில்லை யிவராலே—பல
னேட்டமெல்லாமனக் கோட்டையிலே
படுகளத்துக்குமே யதுவரப்பசு
பற்றுகிருயடி ஞானப்பெண்ணே.
பாம்பிருக்குது புற்றுக்குள்ளே – சக
பந்தமிருக்குது நெஞ்சுக்குள்ளே
வீம்பையடக்கி யுயர்ந்தாக்கால்பசு
வேடிக்கை பார்க்கலாம் ஞானப்பெண்ணே.
பித்துபிடித்த மனக்குரங்கு - வைறிப்
பேயும்பிடித்துக் கொண்டாட்டமிட்டால்
அத்தையடக்க மருந்துசெதாற்பரி
யன்று நடத்தலாம் ஞானப்பெண்ணே.

**—பெரியஞானக்கோவை, பக். 567, 568.**

நின்னொரு நாள் வாழலியே
பாதி நாள் வாழவில்லை

பாலூத்தில் பாத்தி கட்டி
பாக்குமரம் உண்டாக்கி
பாக்கும் தழையிலையே
பாதிநாள் வாழலையே
நெய்யூத்திப் பாத்தி கட்டி
நெல்லி மரம் உண்டாக்கி
நெல்லியும் தழையலையே - நான்
நின்னொரு நாள் வாழலையே
ஒப்புத் தெரியலிண்ணு
கொப்பு நிறுத்தி வச்சேன்
கொப்பைத் திருப்ப எனக்கு ஒரு
கோடை மழை பெய்யலியே
சீரகம் பூப்பூக்கும்
செடி முறிக்கி பிஞ்செறங்கும்..
சீராளன் இல்லாம - நான்
செடியோட வாடுதென !
கொத்தமல்லி பூப்பூக்கும்
கொடி முறுக்கிப் பிஞ்செறங்கும்
கூர் வாளான் இல்லாமே - நான்
கொடியோடு வாடுதனே !
ரோட்டா வெளக்கி வச்சு
ரோசாப்பூ உள்ளடச்சேன்
ரோசாப்பூ கவுந்ததென்ன ? - நான்
ரோசாப்பூ வாடுதனே
செம்பு விளக்கி வச்சு
செம்பகப்பூ உள்ளடச்சு
செம்பு கவுந்ததென்ன ?—நான்
செம்பகப்பூ வாடுதனே !

—(தமிழர் நாட்டுப் பாடல்கள். பக். 562, 563. நா. வானமாமலை.)

நின்ஞெரு நாள் வாழலியே

அண்ணச்சி மண்டபங்கள்

(அண்ணன் வீடு)

பழனி மலையோரம் பனிப்புல்லாப் பொய்கையிலே—நான்
பாவி குளிப்பேனிண்ணு எனக்கும் பாஷாணத்தை ஊற்றினுர்கள்
இலஞ்சிமலைமேலே இனிப்புல்லாப் பொய்கையிலே
ஏழைகுளிப்பேன்என்று எனக்கு இடிமருந்தைத் தூற்றினுர்கள்.
அரைச்ச மஞ்சள் கொண்டு நான் ஆற்றுக்கே போனுலும்
அரும்பாவி வாராளென்று எனக்கு ஆறும் கலங்கிடுமே
குளிக்க மஞ்சள் கொண்டு நான் குளத்துக்கே போனுலும்
கொடும்பாவி வாராளென்று குளமும் கலங்கிடுமே
பூமியைக்கீறி எனக்குப் புதுப்பானைப் பொங்கலிட்டு
பூமி இளகலியே எனக்குப் புதுப்பானை பொங்கலையே
நிலத்தைக்கீறி எனக்கு நிறைப்பானைப் பொங்கலிட்டு
நிலமும் இளகலியே எனக்கு நிறைபானை பொங்கலியே.

—(தமிழர் நாட்டுப்பாடல், பக். 604, 605)

## பக்திப் பாடல்கள்

ஒவ்வொரு கிராமத்துக்கும் சில பக்திப் பாடல்கள் உள்ளன. இவ்வாறே ஒவ்வொரு கோயிலுக்கென்றும் சில பாடல்கள் உண்டு. அந்தந்தப் பகுதித் திருவிழாக்களைப்பற்றி அவற்றில் சொல்லப்பட்டி ருக்கும்.

## சித்தர் பாடல்கள்

தமிழ்நாட்டில் முறைப்படி படிக்காத மக்களிடமும் சித்தர் பாடல்கள் பரவியிருக்கின்றன.

சித்தர்கள் எனப்படுவோர் மக்களினத்தில் தோன்றியவர் களேயாயினும், தம் தவயோக ஆற்றலால் அனிமா (அணுபோலச் சிறிதாதல்), மகிமா (மேரு போலப் பெரிதாதல்), இலகுமா (காற்றுப் போல இலேசாதல்), கரிமா (பொன்போல் பளுவாதல்); பிராப்தி (எல்லாவற்றையும் ஆளல்), வசித்துவம் (அனைவரையும் வசப்படுத் தல்), பிராகாமியம் (கூடுவிட்டுக் கூடு பாய்தல்), ஈசத்துவம் (விரும் பியதைச் செய்து முடித்து அனுபவித்தல்) ஆகிய எண்வகைப் பேராற்றலும் (அட்டமா சித்திகளும்) கைவரப் பெற்றவர்கள்.

ஆகையால் பொதுமக்களிடம் சித்தர்கள் மதிப்பும் செல்வாக்கும் பெற்றிருக்கிருர்கள்.

**போகர் என்ற சித்தர்** பழநியாண்டவர் திருமேனியை உருவாக்கியவர் என்றும், மருத்துவக்கலேயில் அவர் சிறந்து விளங்கினுர் என்றும், நம்பப்படுகிறது. ''யோக வைத்தியம் சொல் ரசவாத மெலாக் கலேயும் தேகநிலே பெருங்காய கற்பங்களெண் சித்தியும் சொல் போகர்'' என்று கொங்கு மண்டல சதகம் அவரைச் சிறப்பிக்கிறது.

சித்தர் பாடல்கள் சிலவற்றைப் பார்ப்போம்.

பாம்பாட்டிச் சித்தர் பாடல்

**பாம்பினது சிறப்பு**

நாதர்முடி மேலிருக்கும் நாகப் பாம்பே!
நச்சுப்பையை வைத்திருக்கும் நல்லபாம்பே!
பாதளத்திற் குடிபுகும் பைகொள் பாம்பே!
பாடிப்பாடி நின்றுவிளே யாடு பாம்பே!
வளேபுகும் போதேதலே வாங்கும் பாம்பே!
மண்டலமிட் டுடல்வளே வண்ணப் பாம்பே!
தளேக்கஞ்சி நின்றிடுஞ் சத்தியப் பாம்பே!
தலேயெடுத் தேநீவிளே யாடு பாம்பே!
குற்றமற்ற சிவனுக்குக் குண்டல மானுய்;
கூறுந்திரு மாலினுக்குக் குடையு மானுய்;
கற்றைக்குழல் பார்வதிக் குக் கங்கண மானுய்;
காவாமல் உளங்களித் தாடு பாம்பே!
மண்டலத்தைத் தாங்குமிக வல்லமை கொண்டாய்;
மாயனுக்குப் படுக்கைக்கு வண்ணப் பாயானுய்;
கண்டபடை நடுங்கிடக் காட்சியும் பெற்ருய்;
கண்ணேசெவி யாகக்கொண்டாய் ஆடு பாம்பே!
சந்திரனேச் சூரியனேத் தாவித் தீண்டினுய்;
சங்கரனும் காபரணந் தானு மாகினுய்;
மந்திரத்துக் கடங்கினுய் மண்டலமிட்டாய்;
வளேந்து வளேந்துநின் ருடுபாம்பே!

—(சித்தர் ஞானக்கோவை, பக். 183. 184).

## குதம்பைச் சித்தர் பாடல்

மாங்காய்ப்பா லுண்டு மலைமே லிருப்போர்க்குத்
தேங்காய்ப்பா லேதுக்கடி? — குதம்பாய்!
தேங்காய்ப்பா லேதுக்கடி?
பட்டணஞ் சுற்றிப் பகலே திரிவார்க்கு
முட்டாக் கேதுக்கடி? — குதம்பாய்!
முட்டாக் கேதுக்கடி?
தாவார மில்லை தனக்கொரு வீடில்லை
தேவார மேதுக்கடி! — குதம்பாய்!
தேவார மேதுக்கடி?
தன்னை யறிந்த தலைவனைச் சேர்ந்தோர்க்குப்
பின்னாசை யேதுக்கடி? — குதம்பாய்!
பின்னாசை யேதுக்கடி?
பத்தாவுந் தானும் பதியோ டிருப்பார்க்கு
உத்தார மேதுக்கடி? — குதம்பாய்!
உத்தார மேதுக்கடி?

— (சித்தர் ஞானக்கோவை, பக். 233, 234.)

## அழுகணிச் சித்தர் பாடல்

ஊற்றைச் சடலமடி உப்பிருந்த பாண்டமடி;
மாற்றிப் பிறக்க மருந்தெனக்குக் கிட்டுதில்லை;
மாற்றிப் பிறக்க மருந்தெனக்குக் கிட்டுமென்றால்
ஊற்றைச் சடலம்விட்டே என்கண்ணம்மா!
உன்பாதஞ் சேரேனோ!
வாழைப் பழந்தின்றால் வாய்நோகு மென்றுசொல்லித்
தாழைப் பழந்தின்று சாவெனக்கு வந்ததடி;
தாழைப் பழத்தைவிட்டுச் சாகாமற் சாகவல்லோ
வாழைப் பழந்தின்றால் என்கண்ணம்மா!
வாழ்வெனக்கு வாராதோ!
பையூரி லேயிருந்து பாழூரி லேபிறந்து
மெய்யூரில் போவதற்கு வேதாந்த வீடறியேன்;
மெய்யூரிற் போவதற்கு வேதாந்த வீடறிந்தால்
பையூரும் மெய்யூரும் என்கண்ணம்மா!
பாழாய் முடியாவோ!

மாமன் மகளடியோ மச்சினியோ நானறியேன்!
காமன் கணையெனக்குக் கனலாக வேகுதடி!
மாமன் மகளாகி மச்சினியும் நீயானால்
காமன் கணைகளெல்லாம் என் கண்ணம்மா!
கண்விழிக்க வேகாவோ!

—(சித்தர் ஞானக்கோவை, பக். 291)

## பொதுவான இயல்புகள்

தனிப்பாடல்களும், கதை தழுவிய பாடல்களும், நிலாப்பாட்டு, பழமொழி, விடுகதை முதலிய பலவும் நாடோடி இலக்கியத்தில் அடங்கியவை. இவை படிப்பில்லாத மக்களால்—பெரும்பாலும் பெண்களால்—இயற்றப்பெற்றவை. எனினும் இவை பொருட் செறிவும் சுவையும் உள்ளன. எனவே, இவை என்றும் நின்று நிலவும் ஆற்றல் பெற்றிருக்கின்றன.

சில சொற்கள் மீண்டும் மீண்டும் வருவது நாட்டுப்பாடலின் இயல்பு. இவ்வாறு வரும் சொற்களாக, ராசாத்தி, பொன்னு ரத்தினமே, தங்க ரத்தினமே, ஐலசா, தாலேலோ, ஏலேலோ; தில்லாலக்கிடி லேலம் என்பவற்றைக் குறிப்பிடலாம்.

## இசை அமைப்பு

நாட்டுப்பாடல்கள் எளிதான இசை அமைப்பு உடையவை. இவற்றுக்கு ஐரோப்பிய இசைப் பாடல்களுக்கு இயற்றுவது போன்ற சிக்கலான இசை அமைப்புத் தேவையில்லை. பலரும் அறிந்த இராகங்களில் சிலவற்றில் ஓசைநயம் குன்றாமலும் இசைச் சிறப்புச் சிதையாமலும் இவற்றைப் பாடலாம்.

## இன்றைய நிலை

சென்ற நூற்றாண்டில், படித்த பெருமக்கள்—குறிப்பாகத் தமிழ்ப் புலவருலகம்—நாட்டுப் பாடல்களை மதிக்கவில்லை. ஆனால் ஐரோப் பியர்களும் அவர்களோடு தொடர்புகொண்டிருந்த எஸ். எம். நடேச சாஸ்திரி போன்ற ஓரிரு தமிழர்களும் பெரிதும் முயன்று இவற்றைத் தொகுத்துவெளியிட்டனர். இதனால் இப்போது தமிழிலக்கிய உலகில் நாட்டுப்பாடல்கள் ஒரு மதிப்பும் மரியாதையும் பெற்றுள்ளன. பலர்

இத்துறையில் ஈடுபட்டு உழைத்து வருகின்றனர். குறிப்பாக, 'தாமரை' இதழ் இந்த வகைப் பாடல்களை வெளியிட்டு வருகிறது. பேராசிரியர் வானமாமலை, நாட்டுப்பாடல்களைப் பரப்பப் பெரிதும் பாடுபட்டிருக்கிறார். தமிழ்மக்கள் அவருக்கு நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளனர்.

பேராசிரியர் நா. வானமாமலை அவர்களும், நெல்லை நாட்டுப் பாடல் ஆய்வுக் குழுவினரும் மிக முயன்று நீண்ட கதைப் பாடல்கள் சிலவற்றை ஏட்டிலிருந்தும் பழைய கையெழுத்துப் பிரதிகளிலிருந்தும் பெயர்த்தெழுதி இலக்கிய, சமுதாய, வரலாற்று ஆய்வுகள் செய்து, ஆய்வு முன்னுரையும் அடிக்குறிப்புக்களும் தயாரித்து மதுரைப் பல்கலைக்கழகத்தின் வாயிலாக வெளியிட்டிருக்கிறார்கள். இவ்வாறு வெளிவந்துள்ளவை :

1. வீரபாண்டியக் கட்டபொம்மு கதைப்பாடல்
2. முத்துப்பட்டன் கதை
3. காத்தவராயன் கதைப் பாடல்
4. கட்டபொம்மு கூத்து
5. கான் சாகிபு சண்டை
6. ஐவர் ராசாக்கள் கதை

ஒருகாலத்தில் இகழப்பட்ட நாட்டுப்பாடல்கள், இப்போது தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களில் படிக்கப்பட்டும் ஆராயப் பட்டும் ஆராய்ச்சிப் பட்டங்கள் பெறுவதற்குரிய பொருளாக ஏற்கப்பட்டும் இருப்பது பெருமைக்கு உரியது.

# 7. பாமர மக்களின் இசையும் நடனமும்

தமிழ்நாட்டு இசையும் நடனமும் கோயில்களில் தோன்றின.

மிக ஆரம்ப காலத்திலேயே பக்திப்பாடல்கள் பாடுவதற்கென்று வெவ்வேறு வகைப் பாடகர்கள் கோயில் ஊழியர்களாக நியமிக்கப் பட்டிருந்தனர். இதற்கு, ஒரு சான்று தருவோம். திருவாமாத்தூர்க் கோயிலில், காலையிலும் மாலையிலும் வழிபாட்டு நேரங்களில் பாடுவ தற்கென, அந்தகர் பதினறு பேர் நியமிக்கப்பட்டிருந்தனர். அவர் களுக்கும் அவர்களுக்கு உதவியாக நியமிக்கப்பெற்றிருந்த கண் பார்வையுள்ளவர் இருவருக்கும், நில மானியங்கள் கொடுக்கப் பட்டிருந்தன. அரசர்கள் கோயிலுக்கு வரும்போது வழிபாடு நடைபெறவும் குழுவினராகப் பாடவும் வேண்டிய ஏற்பாடுகள் செய்ய, **தேவார நாயகம்** என்ற அதிகாரிகள் இருந்தனர்.

முதற் குலோத்துங்கன் ஆட்சியில், கோயிலில் பக்திப்பாடல் பாடும் உரிமை ஒரு பெருமையாகக் கருதப்பட்டது. பெரும் செல்வர் கூட, தங்கள் கலை ஆர்வத்தால் இந்த உரிமையை விரும்பி வேண்டினர்.

## மரபுவழி வந்த இசைவாணர்

கோயில்களில் தேவாரப் பாடல்களை ஓதுவதற்காக ஓதுவார்கள், ஸ்தானிகர், கட்டளையர் என்ற மூவகை இசைவாணர் இருந்தனர். சாரங்கி என்னும் இசைக்கருவி முழங்க, அவர்கள் பக்திப்பாடல் களைப் பாடுவதும், பக்தர்கள் கூட்டமாகக் குழுமி ஒருசேர அப்பாடல்களை அவர்களோடு சேர்ந்து பாடுவதும் வழக்கமாக இருந்தது. இதன் விளைவே இன்று நாம் காணும் கூட்டுப் பிரார்த்தனை.

19-ம் நூற்றுண்டுவரை தமிழ்நாட்டுக் கோயில்களில் சாரங்கி வாசிக்கப்பட்டது. கல்வெட்டுக்களில், சாரங்கி அல்லது வில் யாழ் என்ற இசைக்கருவியை வழிவழியாக இசைத்து வந்த கலைஞர் களுக்கு நிலமானியம் கொடுத்த செய்திகள் உள்ளன. இவர்கள் வில் சேர்ந்த வீணையைப் பயன்படுத்தி வந்தனர் போலும்.

மதுரை, திருநெல்வேலி, சுசீந்திரம், ஆழ்வார்திருநகரி போன்ற பல ஊர்களில் இசைத் தூண்கள் இருக்கின்றன. இவை அர்த்த மண்டபத்தில் காணப்படுவதும், அர்த்தமண்டபங்களில் கல்தூண் களிலிருந்து உண்டாகும் இசையைப் பின்னணியாகக் கொண்டு தேவாரம் பாடப்பெற்றதும் குறிப்பிடத்தக்கன.

## தெய்வ அருள்

இசைவாணர்கள் கலைமகளின் அருள்பெற்றவர்கள் என்பது மக்களின் நம்பிக்கை. வரகுண பாண்டிய மன்னனின் அரசவையில் இசைப்புலவனுக இருந்த பாணபத்திரனைப்பற்றி ஒரு கதை வழங்கி வருகிறது. ஏமநாதன் என்ற வெளியூர்ப் புலவன் அங்கு வந்து 'யானே பாணபத்திரனைவிட இசையில் வல்லவன்' என்று வாதிட்டான். பாண்டிய மன்னனின் ஆதரவுபெற்றிருந்த பாண பத்திரன், மீனுட்சி அம்மையும் சொக்கநாதரையும் வழிபட்டான். 'கவலைப்படாதே' என்று அசரீரி வாக்கு கூறிற்று. விறகுவெட்டி போலக் காட்சி தந்து, இறைவனே அங்கு எழுந்தருளி, இசை வாசித்தார். "நான் பாணபத்திரனின் மாணவன்; இனி என் ஆசிரியப் பெருமானே பாடுவார்" என்று இறைவன் சொன்னதும் ஏமநாதன் ஓட்டம் பிடித்துப் பாண்டிய நாட்டை விட்டு வெளி யேறினுன் என்பது மரபுவழி நிலவும் கதை.

## ராகமும் தாளமும்

தமிழில் வழங்கும் நாட்டுப்பாடல்கள் தாள நயம் உடையவை. மஞ்சி, சாமா, நவரோஜ், கல்யாணி, கரகரப்பிரியா, தோடி, நடனக் கிரியா ராகங்களில் பாடக்கூடிய நாட்டுப்பாடல்கள் உள்ளன. இனி பாமரர் இசையில் பயன்படும் இசைக் கருவிகளைக் காண்போம்.



படம் 7—காவடி நடனம்



படம் 8—கரகம் ஆடுதல்

### அடித்து ஒலி எழுப்பும் கருவிகள் (துளைக்கருவிகள்)

நகரா என்பது கோயில்களில் உள்ள இசைக்கருவி, உருவில் பெரியது. இரண்டு குச்சிகள் வைத்து இதை அடிப்பது வழக்கம். இந்த இசைக்கருவியை யானைமீது ஏற்றி, முக்கியமான அறிவிப்புக் களைச் சொல்லு முன்பும், சொன்ன பிறகும், வாசிப்பது வழக்கம்.

டமாரம் என்பது மரக்கட்டையால் ஆனது, கூம்பு வடிவம் கொண்டது. திருப்பும் சட்டம் மட்டும் தோலால் செய்யப்பட் டிருக்கும். இந்தக் கருவியை மாட்டுவண்டியில் ஏற்றி நேரான குச்சி ஒன்றையும், வளைந்த குச்சி ஒன்றையும் கொண்டு, அடிப்பது வழக்கம்.

### உடுக்கை முதலியன

உடுக்கை என்பது இடது கையில் வைத்துக்கொண்டு வலது கை விரலால் வாசிக்கும் இசைக்கருவி. இது சிவபிரானின் இலச்சினை. எல்லாக் கோயில்களிலும் உடுக்கை இருக்கும்.

தவண்டை என்பது பெரிய உடுக்கை; கைவிரலால் வாசிக்காமல் குச்சியைக்கொண்டு வாசிக்கப்படுவது.

கும்மட்டி என்பது பானைவடிவிலுள்ள முரசு. இதைச் செங்குத் தாக வைத்துக்கொண்டு வாசிப்பது வழக்கம்.

எக்காளம் என்பது 'S' போன்ற வடிவத்திலுள்ள குழாய். இதன் ஒலி, பாண்டு [BAND] முழக்கம்போன்றது.

பம்பை என்பது கோயில் திருவிழாக்களில் வாசிக்கப்படும். அது உருளை வடிவமான நீண்ட கருவிகளின் ஜோடி.

## திரைப்படங்களில் நாட்டுப் பாடல்கள்

திரைப்பாடல்கள் எழுதுபவர்கள், நாட்டுப்பாடல்களை மிகவும் நன்ருகவும், அவர்களுடைய படம் வெற்றிபெறுவதற்குத் தேவை யான சில மாறுதல்களைச் செய்தும், திரைப்பாடல்களில் பயன்படுத்தி வருகிருர்கள். இவ்வாறே கிராமியக் கலைகளும் திரைப்படங்களில் இடம்பெற்று வருகின்றன. கிராமியக் கலைகளுக்குப் படத்தில் பொருத்தமான இடம் கொடுப்பதற்காகவே கதையின் அமைப்பிலும் போக்கிலும் வேண்டுமென்றே பல மாறுதல்கள் செய்யப்படுகின்றன.

சோகக் காட்சிகளில், ஒப்பாரிப்பாடல்கள் பாடப்படுகின்றன. காதலர்களுக்குள் நிகழும் உரையாடல்களில் "நீ பாம்பு ஆனுல்,

நான் பருந்து ஆவேன். நீ புல் ஆனால், நான் பசு ஆவேன்" என்ற நாட்டுப் பாடற்பகுதிகள் பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

திரைப்படங்கள் நாட்டுப்பாடல்களின் மெட்டுக்களைப் பின்பற்றுகின்றன. சான்று :

" தாழம்பூ முடித்து
தடம் பார்த்து வழிநடந்து
சாலைவழி போனவளே பொன்னம்மா."

நாட்டுப்பாடல்களின் இசைச் சிறப்பு, ஒலிச்சிறப்பு, தாளச் சிறப்பு, உணர்ச்சியான பொருள், பேச்சு நடைப்பாணி, இயற்கையோடு இணைந்த தன்மை, ஆகியவை எந்தத் திரைப்படத்துக்கும் ஏற்றம் தருகின்றன.

## மலைச் சாதியாரின் இசைக் குறிப்புக்கள்

பொதுவாக, ஏனையவர்களைவிட மலைச்சாதியினருக்கு இசையில் இயல்பான ஈடுபாடு இருக்கிறது. பழமையான பண்பாட்டைப் பேணிக்காக்கவேண்டும் என்ற எண்ணமும் அவர்களுக்கு உண்டு. சான்றாக, புலயர் இனத்தைப் பற்றிக் கூறுவோம்.

புலயர் தங்களுடைய இசை அமைப்பை, தாளம் என்று சொல்லுகிறார்கள். கானமயில், கானக்கோழி, ஆகியவற்றின் குரல்களைப் பின்பற்றி அவை அமைக்கப்பெற்றிருப்பதாகச் சொல்லுகிறார்கள். தாளங்களின் பெயர்கள், புலயர்கள் வணங்கும் தெய்வங்களின் பெயர்களால் வழங்குகின்றன. சான்றாக, கரகநாச்சி தாளம், மங்கள நாத தாளம், குன்றநாத தாளம் ஆகிய மூன்றையும் கூறலாம். சுத்தச் சாவேரி, சரஸ்வதி, சங்கராபரணம், அண்டோலகம், பிருந்தாவன சாரங்கம் முதலிய ராகங்களின் சாயல்களை இந்தத் தாளங்களில் பார்க்கலாம். அவற்றைக் கேட்பது காதுக்கு இனிமையும் உள்ளத்துக்கு உணர்ச்சியும் ஊட்டும். அவர்களுடைய கூட்டு வாத்தியத்துக்கு சிங்காரம் என்று பெயர். அது இரண்டு சிறு நாதசுவரங்கள் அல்லது சத்தக்குழல்களும், இரண்டு மேளங்களும், கைமணிகள் இரண்டும், மத்தளம் ஒன்றும்கூடியது. இறைவனைப் பிரார்த்திக்க இந்தக் கருவிகள் அனைத்தையும் ஒருசேர இயைப்பது மரபு. நடனம் ஆடும்போது பாடுவது அவர்களுடைய பழக்கம். அவர்களுடைய நடனம் கர்ண கொடூரமானது என்பது சிலருடைய அபிப்பிராயம்.

### குலவையின் இனிமை

குலவையின் ஓசை ஊதுவதுபோன்று இருக்கும். குலவையிடுதல் என்பது வயலில் வேலைசெய்யும்போது பெண்கள் தங்கள் வாய் களால் எழுப்பும் ஒருவகை ஒலி. லய வளமும் இசைவளமும் இணைந்த தஞ்சை மாவட்டம் குலவைக்குப் புகழ்பெற்றது. பெண்களின் முழங்கால்வரை அப்போது வயலுக்குள் இருக்கும்; அவர்கள் எழுப்பும் குரல் நாற்று நடுவதற்கு அவர்களை ஊக்கு-விக்கும். வரப்புக்களில் யாராவது அப்பக்கம் வந்தாலும் அவர்கள் குலவையிடுவார்கள். அது ஒருவகை மரியாதை. குலவை ஒலி கேட்டதும், அவ்வழி செல்லுபவர் அங்கு நின்று அவர்களுக்கு வெற்றிலைபாக்கு முதலியன வாங்குவதற்காகச் சிறு நன்கொடைகள் கொடுத்து பதிலுக்கு மரியாதை செய்வது, தமிழ்நாட்டில் தொன்று தொட்ட பழக்கம்.

### நையாண்டி மேளம்

நையாண்டி மேளம் என்றும் சின்னமேளம் என்றும் சொல்லப் படுவது நாதசுவரத்தைப் பின்பற்றியது. அது தெருக்கூத்தில், பக்க வாத்தியமாக வாசிக்கப்படுகிறது. எழுதப்படிக்கத் தெரியாத வர்களை நையாண்டி மேளம் பெரிதும் கவர்ந்திருக்கிறது.

இதில் வாசிக்கப்படும் வாத்தியங்களாவன: நாதசுவரம்-2, தவுல்-2, பம்பை-1, தமுக்கு-1, தாளம்போட சாலரா-2. இசைப்புலவர்கள் நடனமாடிக்கொண்டே இந்த வாத்தியங்களை வாசிப்பார்கள். கரகம், காவடி, பொய்க்கால் குதிரை, குறவன்-குறத்தி முதலிய ஆட்டங்களிலும் நையாண்டி மேளம் வாசிக்கப்படுகிறது.

### வில்லுப்பாட்டு

இதைப்பற்றி முதலில் சுருக்கமான முன்னுரையும், பிறகு விரிவாக வும் கூறுவோம்.

பனைக்கம்பு ஒன்றை வில்போல வளைத்து, கெட்டியான பானை ஒன்றின்மீது வைத்துக் கட்டுவர். வில்லின்மீது இரண்டு 'வீசுகோல்' களாலும் பானையின்மேல் 'குடம்பற்றி' யிலும் அடிப்பார்கள். இவற்றோடு உடுக்கு, தாளம், கட்டை—ஆகிய பக்க மேளங்களும் தாள வாத்தியங்களும் உண்டு. கதையைப் பாட்டாகப் பாடுவார் புலவர். ஏனையோர் பின்பாட்டுப் பாடுவார்கள்.

குறிப்பாக, திருநெல்வேலி, கன்னியாகுமரி மாவட்டங்களை வில்லுப்பாட்டின் தாயகம் என்று சொல்லலாம். இங்கு, தென்பாங்

குப் பாடல்கள் (தெம்மாங்கு) மிகுதியாகப் பாடப்பெறுகின்றன. கட்டபொம்மனின் வீர வாழ்க்கையை உணர்ச்சியோடு உரைப் பதற்குப் பயன் பட்டதால் வில்லுப்பாட்டுக் கலை பெரிதும் பரவிற்று. இசக்கியம்மன், பேச்சியம்மன், சுடலைமாடன், சாஸ்தா கோயில்களில் நடைபெறும் கொடை விழாக்களில் வில்லுப்பாட்டு இல்லாத விழா ஒன்றேனும் இல்லை. சிறு தெய்வங்களை வழிபட, வில்லுப்பாட்டு நன்கு அமைகிறது. இது கற்றோர்க்கும் கல்லார்க்கும் களிப்பூட்டுவ தாகும். வேட்டையாடிய வில்வீரன் களைப்புற்ற நிலையில் பாடிய பாடல்களே இவை. இக் காலத்தில் புகழ்மிக்க வரலாறுகளையும் வில்லுப்பாட்டாக அமைத்து நெல்லை அருணகிரி இசைக்கழகத்தார் அரங்கேற்றியுள்ளனர்.

திருமலைநாயக்கரின் பிரதிநிதியாக இராமப்பய்யன், இன்றைய கன்னியாகுமரி மாவட்டப் பகுதிக்குப் படையெடுத்தபோது, அவரை எதிர்த்துப் பொருதிய போராட்ட நிகழ்ச்சிகள் "இரவிக்குட்டிப் பிள்ளை போர் சரித்திரம்" என்ற பெயரில் இன்றும் வில்லுப்பாட்டாகச் சித்திரிக்கப்பட்டு, கன்னியாகுமரி மாவட்டத்தார் உள்ளங்களை ஈர்த்து வருகின்றன. இம்மாவட்டத்தினரும் இவ்விருபதாம் நூற்றுண்டின் முற்பகுதியில் சிறப்புடன் வாழ்ந்தவருமாகிய கலைஞர் என். எஸ். கிருஷ்ணன் வில்லுப்பாட்டினைத் தமிழ்நாடெங்கும் பரப்பினர்.

வில்லுப்பாட்டை உருவாக்கியவர் அரசப் புலவர் என்பர். அவர் 15-ம் நூற்றுண்டில் வாழ்ந்ததாகக் கூறுவர். வில்லில் ஏராளமான வெண்கல மணிகளைக் கட்டி இந்தக் கலையை அவர் படைத்தார் என்பர்.

கதை சொல்லுபவர், வில்லுக்கு முன்னால், மேடையில் வீற்றிருப்பவர் கள் அனைவருக்கும் நடுநாயகமாக அமருவார். அவர்தம் கைகளில் ஒவ்வொரு வீசுகோல் வைத்துக்கொண்டு கதை சொல்லும்போது, பாட்டுக்களையும் பாடுவார். பாடுகின்ற பாட்டின் பொருள், இயல்பு, தொனி, பாவம் ஆகியவற்றுக்கு ஏற்ப அவர் உரிய வினாடிகளில் வீசுகோலை வீசுவார். இதன் எதிரொலியாக, வில்லிலுள்ள வெண்கல மணிகள் எதிரொலிக்கும். அதே நேரத்தில் பானை வைத்திருக்கும் கலைஞர், சில ஒலிகளை எழுப்புவார். அப்போது பானையிலிருந்து வெளிவரும் இசை, மிருதங்கம், டோலக், கஞ்சிரா ஆகியவற்றைவிடச் சிறப்பாக அமையும்.

இன்னொருவர் உடுக்கு வாசிப்பார். மற்றொருவர் இரு மரக் கட்டைகளைக் கொண்டு தாளம் போடுவார். வேறு ஒருவர் சாலரா

வாசிப்பார். வில்லுப்பாட்டு நிகழ்ச்சி முழுமூச்சாக நடைபெற்று, மக்கள் அனைவரும் உணர்சிவயப்பட்டு வரலாற்றுக் கதையை சுவைத் தின்புறும்போது, கலைஞர்கள் அனைவரும் இணைந்து ஓர் இசையை உண்டாக்குவார்கள். மெய்மறந்து, அவர்கள் வில்லுப்பாட்டுக் கலைக்கு உயிர் ஊட்டுவார்கள். கதையை புலவர் சொல்லும்போது, ஏனையோர் அவரவர் கருவிகளை வாசிப்பார்கள். பிறகு அவர்கள் பின்பாட்டுப் பாடும்போது, புலவர் வீசுகோலை வீசுவார்.

வில்லுப்பாட்டைக் கேட்கும் திரளான மக்கள் அனுபவித்துக் கேட்பார்கள். அவர்களும் தாளம் போடுவார்கள். கலைஞர்களையும் ஊக்குவிப்பார்கள். பெரும்பாலும் இவை கோயில் முற்றங்களிலும். கிராமங்களின் திறந்த வெளிகளிலும் நிகழும். பெரும்பாலும், கோயில் திருவிழாக்களை ஒட்டியே இவை நடத்தப்பெறும். இப்போது பள்ளிக் கூட ஆண்டுவிழாக்களை முன்னிட்டும் வில்லுப்பாட்டு நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்யப்படுகின்றன.

புலவர், கதை அல்லது பாட்டைச் சொல்லும்போது, உடுக்கு முதலிய பக்கவாத்தியக்காரர்கள் கடைசி வரியைத் திரும்பச் சொல்லு வார்கள். அல்லது 'ஆமா' 'ஆமா' என்பார்கள்.

பொதுவாக, வில்லுப்பாட்டுக் குழுவில் எண்மர் இருப்பார்கள். நிகழ்ச்சி எவ்வளவு நேரம் நடைபெறும் என்பது அன்றைய கதையைப் பொருத்தது. சிறு கதைகள் ஒன்றரை மணி நேரத்தில் முடிந்துவிடும். புராணக் கதைகள் நெடுநேரம் நடைபெறும். இராமாயண, மகாபாரதக் கதைகளை நான்கு நாட்களுக்கு நடத்துவது நடைமுறை. இந்தக் குழுவின் தலைவரான புலவர், அனுபவத்தால் மக்களின் உள்ளப்பாங்கையும், அந்தந்த ஊர் ரசிகர்களின் போக்கை யும் அவர்கள் விரும்புவன எவை? விரும்பாதவை எவை? என்பதை யும் தெரிந்துவைத்திருப்பார். எனவே, இடத்திற்கும், சூழ்நிலைக்கும் ஏற்ப, கதையில் மாறுதல்கள் செய்துகொள்வார். எந்தக் கட்டத்தில் இடைவேளை வைத்துக்கொள்ளலாம் என்பதையும் நிலைமைக்குத் தக்கவாறு முடிவு செய்வார்.

பாட்டுக்களின் வாசகம் எளிதாகவும் தடங்கல் இன்றியும் நாட்டுப் புற மக்கள் விரும்பும் நடையிலும் கிளைமொழியிலும், பழமொழிகள் நிரம்பியும் இருக்கும். வில்லுப்பாட்டுக்களில் கையாளப்படும் சொற் றொடர்கள், உவமைகள் ஆகியவை கிராம மக்களுக்குத் தனிக் கருத்துக்கள் சிலவற்றை வழங்குகின்றன. ஒவ்வொரு பாட்டுக்கு அல்லது இரண்டிரண்டு வரிகளுக்கு ஒரு தடவை சில சொற்களும் திருப்பிச் சொல்லப்படுவதும் ஒரு மரபு. கடைசியாகச் சொன்ன

சொல்லை மட்டும் பக்கவாத்தியக்காரர்கள் சொல்லித் தொடர்ந்து பாடுவார்கள்.

கதைகள் புராண, தெய்வீக, வரலாற்று, சமுதாய நிகழ்ச்சிகளைக் கொண்டவை. சூழ்நிலையும் இசைக்கருவிகளும் இவற்றுக்கு ஏற்றவை. பேய், பிசாசு, கெட்ட ஆவி, சிறு தெய்வங்கள் முதலிய எல்லாம் இவற்றில் இடம்பெறும். தீமை நீங்கி நன்மை வெற்றி பெற்றது என்ற கருத்துடன் எல்லாக் கதைகளும் முடிவடையும்.

## பழையனூர் நீலி கதை

பழையனூர் என்பது செங்கற்பட்டு மாவட்டத்தில் திருத்தணிகை வட்டத்தில் திருவாலங்காட்டுக்கு அருகே உள்ள சிற்றூர். இங்கு பழையனூர் நீலி கோயில் உள்ளது. பழையனூர் நீலியின் கதை சேக்கிழாரால் பெரியபுராணத்தில் கூறப்பட்டிருக்கிறது. நீலிக்கும் அவள் கணவனுக்கும் ஏற்பட்ட சச்சரவைத் தீர்க்கவேண்டுமென்ற நீலியின் வேண்டுகோளுக்குப் பழையனூர் வேளாளர் இசைந்து தீர்ப்பளித்தனர். ஆனால் அன்றிரவே நீலி உயிர் நீத்துவிட்டாள். தாங்கள் நீதி தவறித் தீர்ப்புக் கூறியதால் ஏற்பட்ட தீய விளைவு என்று எண்ணி வேளாளர் எழுபது பேரும் தீப்பாய்ந்து உயிர்நீத்தனர். நீலிக்குத் தாங்கள் கொடுத்த வாக்கைக் காப்பாற்றுவதற்காக, வேளாளர் தீக்குழியில் உயிர்துறந்த காட்சி சிற்பமாகச் செதுக்கப் பட்டுள்ளது.

பல நூற்றாண்டுகளுக்குமுன் நடந்த இந் நிகழ்ச்சியை இவ்வூர் மக்கள் இன்றும் பயபக்தியோடு சொல்லி வருகிறார்கள். திருநெல்வேலி மாவட்டத்தில் இது வில்லுப்பாட்டின் வழியாகப் பெரும்புகழ் பெற்று விளங்குகிறது.

இனி, இக்கதையை விவரமாகக் கூறுவோம்.

வணிக சமூகத்தைச் சேர்ந்த ஓர் இளைஞன் நீலி என்பவளை மணந்துகொள்கிறான். திருமணமாகிச் சில மாதங்களே ஆயின. அதற்குள் இன்னொருத்தியிடம் அவனுக்கு ஆசையும் மோகமும் உண்டாகிவிட்டன. கிளி போன்ற இளம் மனைவியைப் புறக்கணித்து விடுகிறான். ஒரு நாள் காதலி தன் காதலனைக் காண நீலியின் வீட்டிற்கே போய்விடுகிறாள். அவளைக் கண்டதும் நீலிக்கு ஆத்திரம் ஏற்பட்டது. அவளை உள்ளேவிடாமல் கதவைத் தாழிட்டாள். நீலியைப் பழிவாங்கிவிடுவது என்று காதலி முடிவு செய்து விட்டாள். அவளுடைய கோபத்தை, காதலனிடம் காட்டினாள். அவன் அவள் வீட்டுக்கு வந்து கதவைத் தட்டினபோது, அவள் திறக்க மறுத்தாள்.

'ஏன்' என்று அவன் வினவினுன். நீலி நடந்துகொண்ட விதத்தை அவள் விளக்கினுள். காதல் நோயால் வருந்திய காதலன், உடனே, 'அதற்கு நான் அவளைத் தண்டிப்பேன். உனக்கு நீதி வழங்கு வேன். இப்போது கதவைத் திற' என்று கெஞ்சினுன். 'நீ, நீலி வீட்டிற்குச் சென்று அவள் அணிந்திருக்கும் தாலியைக் கழற்றிக் கொண்டு இங்கு வந்தால் இந்தக் கதவு திறக்கப்படும்' என்ருள் காதலி.

காதலன் தன் வீடு சென்ருன். மனைவியாகிய நீலியுடன் சில மாதங்கள் தங்கி, அவளுக்குத் தன்னிடம் நம்பிக்கையேற்படச் சில பொய்களைச் சொல்லிவைத்தான். காதலியின் நினைவு நீங்க, இரு வரும் வெளியூர் சென்று அங்கு வாழ முடிவுசெய்தனர். அவ்வாறே புறப்பட்டனர். வழியில் ஓர் இரவு, படுபாதாளமான ஒரு கிணற்றின் அருகே கணவனும் மனைவியும் படுத்திருந்தனர். நள்ளிரவில் கண வனே தாலியைத் திருடி, மனைவியைக் கிணற்றில் தள்ளிவிட்டுத் தாலியும் கையுமாகத் தன் காதலி வீட்டுக்குச் சென்று அவளை (காதலியை) நாடுகிருன்.

அடுத்த பிறப்பில், கொலைகாரனுகிய கணவன் மீண்டும் வணிகனுகப் பிறந்து முன்னைப் பிறவியில் வாழ்ந்த ஊருக்குச் செல்லு கிருன். அதே பாழுங் கிணற்றின் அருகே அவன் தங்க நேரிடுகிறது. நீலியின் பேய், அழகிய மனைவியாக உருவம் எடுத்து, நீ தான் என் கணவன் என்று உறுதி கூறி அவனைத் தொடருகிறது. ஆனுல் அவன் அவளை ஏற்கவில்லை. அவளும் அவனை விடுவதாக இல்லை. ஊரிலுள்ள மூதறிஞர்கள் கூடி, வழிப்போக்கன் நீலியின் கணவனே, என்று தீர்ப்புக் கூறுகின்றனர். அவர்கள் இவ்விருவருக்கும் ஒரு வீடு கொடுத்து அந்த வீட்டில் தங்கியிருக்குமாறு பணித்தார்கள். கணவனும் மனைவியும் அவ்வீட்டிற்குள் புகுந்தனர். நீலியின் முகம் அன்றலர்ந்த செந்தாமரைபோல் மலர்ந்தது. முன்னைய பிறப்பில் எஞ்சியிருந்த கனவுகள், நிறைவேருத ஆசைகள் யாவும் அவளுக்கு அன்றிரவு தோன்றுகின்றன. ஆசை தீர அவனை அணைக்கிருள். விடிந்ததும் அவன் பிணமாகக் கிடக்கிருன். அவளை ஆளையே காணேம்.

### ஏனைய கதைகள்

மயானத்துப் பேயான சுடலைமாடன் கதையும் மிகவும் பரவியிருக் கிறது. இதுபோன்ற பல கதைகளும் ஏராளமான வரலாற்று நிகழ்ச்சி களும் வில்லுப்பாட்டுக்களில் இடம்பெற்றிருப்பதால் வில்லுப்பாட்டு,

பாமர மக்கள் பயிலும் வரலாற்று வகுப்பாக விளங்குகிறது. இந்தியா, விடுதலை பெற்ற பிறகு, கொத்தமங்கலம் சுப்பு, காந்தி மகான் கதையை வில்லுப்பாட்டாக வடித்துத்தந்தார். காந்தியக் கொள்கைகளை மிகச்சிறப்பாகப் பரப்பியிருக்கும் அவர்தம் கலைத்திறம் போற்றுதலுக்கும் பாராட்டுதலுக்கும் உரியது.

கோயில் திருவிழாக்களை முன்னிட்டு, வில்லுப்பாட்டு நிகழ்ச்சிகளாகச் சமயத் தொடர்பான கதைகள் சொல்லப்படுகின்றன. இவற்றைக் கேட்பதில் மக்களும் கோயில் ஊழியர்களும் அளவுகடந்த ஆர்வம் காட்டுவதால் கோயிலில் விளக்கேற்றவும் மறந்துவிடுவார்களாம். 'வில்லடிச்சான் கோயிலிலே விளக்கேற்ற நேரமில்லை' என்பது பழமொழி.

மருதநாயகம்பிள்ளை என்பவர் கதையும், வில்லுப்பாட்டின் பொருளாக அமைகிறது. இவர், தம் அண்ணன் மனைவியைக் காதலித்த கொடியவர். இவர் கதை சுவையாகச் சொல்லப்படும்.

நெல்லை மாவட்டத்தில் மக்கள் விரும்பிக் கேட்கும் கதைகளில் ஒன்று : சின்னத்தம்பி வரலாறு. இவன் பணக்காரன். ஒரு பூதத்திடமிருந்து பெரும் செல்வம் பெறுவதற்காக தன்னுடைய வேலைக்காரனுடைய ஒரே மகனைப் பலி கொடுப்பதை இந்தக் கதை உணர்ச்சியுடன் சித்திரித்துக் காட்டுகிறது.

## ஏனைய இயல்புகள்

வில்லுப்பாட்டின் பிறிதோர் இயல்பு, வினுவிடை வடிவமாகவே பாட்டுக்கள் அனைத்தும் அமைந்திருப்பது. இத்தகைய வில்லுப்பாட்டு நிகழ்ச்சிகள் பட்டிமண்டபம் போன்றிருக்கும். கலைஞர்கள் இரு குழுக்களாகப் பிரிந்து கொள்வர். ஒரு சாரார் **வலதே பாடுபவர்** என்றும், பிறிதொரு சாரார் **இடதே பாடுபவர்** என்றும், பெயர் பெறுவர். வேதாந்தம், சித்தாந்தம் உட்பட உலகத்திலுள்ள எப்பொருளைப் பற்றியும் இந்த வாக்குவாதம் நிகழும்.

சான்றாக, வலதே பாடுபவர் கேட்கும் சில கேள்விகளைக் கூறுவோம்.

> நேருக்கு நேராகச் சொல்லு
> ஐந்து எழுத்துக்களின் நிலைமை என்ன ?
> நேருக்கு நேராகச் சொல்லு
> அரி என்பதன் தெளிவான பொருள் என்ன ?

நேருக்கு நேராகச் சொல்லு
வில்லு பிறந்த கதையைச் சொல்லு

ஐந்து எழுத்துக்கள் என்பவை ந ம சி வா ய

இரவிக்குட்டிப்பிள்ளை நாஞ்சில் நாட்டு மக்களின் மானங்காக்கப் போரிட்டதைக் கன்னியாகுமரி மக்கள் இன்றும் வில்லுப்பாட்டில் பாராட்டிவருகிறார்கள். இந்தக் கதையை வெண்கலத்துக்கும் வெள்ளிக்கும் நிகழும் போட்டிப் பட்டிமண்டபமாகவும் வில்லுப் பாட்டில் நிகழ்த்துவார்கள். வெண்கலக் கட்சியார், இரவிக்குட்டிப் பிள்ளையின் குதிரைகள் மீதும் யானைகள் மீதும் இருந்த போர்க்கருவி களும் போர்வீரர்களின் இசைக்கருவிகளும் வெண்கலத்தால் ஆனவை என்பர். அதற்குப் பதில் சொல்லும் வெள்ளிக் கட்சியார், இரவிக்குட்டிப்பிள்ளை வெள்ளிப்பூண் பிடித்த குடை உபயோகித்தார் என்றும், அவருடைய வேலையாட்கள் வெள்ளி விசிறியால் வீசி அவர் வேர்வையைப் போக்கினர் என்றும், அவர் பயன்படுத்திய வாள் வெள்ளியால் ஆனது என்றும், வெள்ளி வெற்றிலைப் பெட்டியும் வெள்ளியால் ஆன, பொடி டப்பியும் இரவிக்குட்டிப்பிள்ளை கூடவே பயணம் செய்யும் என்றும், வெள்ளியால் சீனுக்காரர் செய்த புல்லாங் குழல் ஒன்றும் அவரிடம் இருந்தது என்றும், சொல்லுவார்கள்.

**லாவணி**

லாவணி என்பது இசைப்பாடலாக நடைபெறும் விவாதம். இவ் வகையில் இது ஓரளவு வில்லுப்பாட்டுப் போன்றது. குறிப்பாக, சித்திரை மாதத்தில் கோடை மழையை வருவிக்க, வசந்த உற்ச வத்தின்போது, லாவணி நாடகம் தஞ்சை திருச்சி மாவட்டங்களிலும் மதுரை மாநகரிலும் மிகச் சிறப்பாக நடத்தப்படுகிறது.

மன்மதன் அல்லது காமனைச் சிவபெருமான் எரித்துச் சுடுசாம்ப லாக்கினார் என்பது ஒரு கட்சியின் வாதம்.

எரிக்கப்பட்டதாகச் சொல்லுவது வெறும் உருவகம். எரிந்தது காமம் அல்லது உடலின்ப உணர்ச்சியே. காமன் ஒருபோதும் சாக வில்லை. மக்கள் நெஞ்சங்களில் அவன் வாழ்கிறான், காமன் என்னும் மலமே எரிந்தது என்பது மாற்றுக் கட்சியினரின் வாதம்.

இந்தச் சொற்போரில் மதம், நன்னெறி முதலியவைபற்றிப் பல கருத்துக்களையும் விளக்கங்களையும், புராணங்கள் சாத்திரங்கள் ஆகியவற்றிலிருந்து மேற்கோள்களையும், இருகட்சியாரும் கொடுப் பார்கள். இசைக்கருவிகளின் முழக்கங்களுடன், சொல்லோட்டம்,

நடையழகு ஆகியவற்றுடன், இரவெல்லாம் நிகழ்ந்து லாவணி கேட்பாருக்கு மகிழ்ச்சியூட்டுகின்றது. இறுதியாக மன்மதனின் உருவும் எரிக்கப்படும்.

லாவணி மஹாராஷ்டிரத்தில் ஏற்பட்டு, தஞ்சை சரபோஜி மன்னர் ஆட்சியில் தமிழ்நாட்டில் மிக விரிவாக வளர்ச்சி பெற்றது, என்பது பொதுவான கருத்து. பழங்காலத் தமிழர்கள் கொண்டாடிய காமன் பண்டிகை, மன்மதனின் சின்னம் ஒன்றின் முன்பாக ஒப்பாரி பாடுவதாக மட்டும் அமைந்திருந்தது.

### கும்மி

பெண் குழந்தைகள் பள்ளிப்பருவத்தில் கும்மி, ஒயில் கும்மி முதலிய விளையாட்டுகளை, பலர் சேர்ந்து எதுகை மோனை நிரம்பிய இசைப் பாடல்களுடன் ஆடுவர். பாட்டின் இசை, கைகள் கூடுவதால் உண்டான ஓசை, ஆகியவற்றால் காதுக்கும், ஆடுகின்ற பாணியும் கூடி நடந்து செல்லும் பாங்கும் கண்களுக்கும், கலைவிருந்தாக அமையும். கும்மி நடனத்துக்கு ஏற்றவாறு கைகொட்டியும் பாட்டுப் பாடியும் நடனமாடுவது கொம்மாய் எனப்பெறும். இச் சொல் லிருந்தே கும்மி என்னும் சொல் ஏற்பட்டது என்பர்.

### ஒயில்கும்மி

ஒயில் கும்மி என்றும் ஒயிலாட்டம் என்றும் சொல்லப்படும் ஆட்டத்தை ஆடவரும் ஆடுவர். கால்களில் சலங்கைகள் கட்டிக் கொண்டு புராணக் கதைகளைச் சொல்லியவாறு ஆடுவது மரபு. முதலில் பாடப்பெறும் பாடல், பிரார்த்தனையோடு நின்றுவிடாது. அதில் கலந்துகொள்பவர்கள் ஒருவர் கால்களுடன் ஏனையோரின் கால்கள் மோதுவதைத் தவிர்க்க, இடைவெளிவிட்டு ஒவ்வொருவரும் நிற்கவேண்டும் என்ற அறிவுரையும், பிரார்த்தனைப்பாடலில் இருக்கும்,

> "சிறகை விரித்தால் மயிலாட்டம்
> சேர்ந்து குதித்தால் ஒயிலாட்டம்
> சீறிப்பாய்ந்தால் புலியாட்டம்
> திரையில் மறைந்தால் நிழலாட்டம்
> கோஷ்டிகள் சேர்ந்தால் வாலாட்டம்
> குழப்பம் வந்தால் போராட்டம்!

திருடர்கள் ஆட்டம் நரி ஆட்டம்
சேஷ்டைகள் மிகுந்தால் குரங்காட்டம்''

என்பது ஒரு நாட்டுப்பாடல்.

### கப்பல் பாட்டு

கப்பல்பாட்டு அல்லது படகுப்பாட்டு என்பது ஏரிகளிலும் ஆறுகளிலும் நெடுந்தூரம் பயணம் செய்தவர்கள் தங்களுடைய களைப்பையும் அலுப்பையும் போக்கிக் கொள்ளப் பாடுகின்ற பாடல்களைக் குறிக்கும்.

### கோலாட்டம்

கோல்—ஒரு சிறு குச்சி. கோல் கொண்டே சிறுமிகள் கூட்டம் கூட்டமாக ஆடுவது கோலாட்டம். பள்ளிக்கூட விழாக்களிலும் வானொலித் துறையினரின் விழாக்களிலும் கோலாட்டம் ஆடப்படுகிறது.

இதனோடு தொடர்புடைய ஒரு விழா சமயச் சார்பும் கலைப்பண்பும் கொண்டது. இதுபற்றி ஒரு மரபுக்கதை உண்டு. பாசவ அசுரன் என்ற பெயரில் ஓர் அசுரன் இருந்தானும். அவன் அடங்காப் பிடாரியாம். அவனிடம் இளம்பெண்கள் ஒரு கூட்டமாகச் சென்று கோலாட்டம் ஆடிக் காட்டினார்களாம். அதில் அவன் மயங்கி, தன்னுடைய தீய குணங்கள் அனைத்தையும் கைவிட்டானும். இந்த நிகழ்ச்சி கோலாட்டத் திருவிழாவாகத் தமிழ்நாட்டில் சில இடங்களில் கொண்டாடப்படுகிறது.

பாசவன் என்பது நந்தி என்று பொருள்படும். நந்தி சிவ பெருமானின் வாகனம். கோலாட்டத் திருவிழாவில் நந்திக்குச் சிறப்பு உண்டு. இவ்விழா ஐப்பசி மாதத்தில் தீபாவளியன்று தொடங்கி, பௌர்ணமி வரை 15 நாட்கள் நிகழும். ஒவ்வொரு நாளும் பெண்கள் ஆறுகளில் நீராடி கையில் புல்லும் நீரும் பூவும் ஏந்தி அவற்றைத் தாங்களே களிமண்ணில் செய்யும் நந்தி உருவத்துக்கு வழங்குவார்கள். கோலாட்டம் ஆடி அந்த உருவத்தை வழிபடுவார்கள். பிறகு, ஊர் முழுவதும் வீடு வீடாகச் சென்று கோலாட்டம் ஆடி, பரிசுப் பொருள்களைப் பெறுவார்கள். முழு நிலா நாளில், அந்தக் களிமண் விக்கிரகங்களை, பல்லக்கில் ஊர்வலமாக வைத்துச் சென்று, ஆற்றில் போடுவார்கள். ஒவ்வொரு கட்டத்திலும் கோலாட்டம் ஆடுவர். பெண்கள் சுற்றிச் சுற்றி வந்து, மாறிமாறி

வேறு ஒருவர் கைகளிலுள்ள குச்சிகளுடன் கோலாட்டம் ஆடுவது காண்பதற்கும், அவற்றிலிருந்து பிறக்கும் ஒலிகள் கேட்பதற்கும், இன்பம் பயக்கும்.

### ஹரிகதா காலட்சேபம்

மூன்று-நான்கு மணி நேரங்களுக்குக் கதை சொல்லும் இந்தக் கலையை மஹாராஷ்டிரத்திலிருந்து தஞ்சையை ஆண்ட மராட்டிய அரசர்கள் தமிழ்நாட்டில் பரப்பினர். கல்விப் பயிற்சி இல்லாதவர்க்குக் கேள்வி வாயிலாக அறிவு புகட்டுவதற்காகத் தஞ்சையில் சில நூற்றுண்டுகளாகக் கதாகாலட்சேபம் பயன்பட்டு வந்திருக்கிறது. இப்போது இது தமிழ் நாடெங்கும் பரவியிருக்கிறது.

கதாகாலட்சேபம், கேட்பவர்களைப் பாகவதர்பால் ஈர்க்கும் ஒரு பதத்துடன் தொடங்குகிறது. அடுத்தது ஒரு நீளமான பாட்டு, பின்னர் சுருதி, அதன் பிறகு சொற்பொழிவின் உட்கருத்து அமைந்த பகுதி (கதையில் சொல்லப்படும் 'நீதி') என்ற வகையில் இந்நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன.

கதா காலட்சேபம், இசையில் ஆர்வம் உடையவர்களுக்கும், கதை கேட்க ஆவலுடையவர்களுக்கும் பக்திநெறியில் மனத்தைப் பறி கொடுப்பவர்களுக்கும், இலக்கிய ஆர்வம் உடையவர்களுக்கும் கூடப் பயன்தரத்தக்கது. பாகவதம், பாரதம், இராமாயணம் ஆகியவை இவ்வாறு பரப்பப்பட்டுள்ளன. இவற்றைச் சொல்லும் கலைஞர்கள் நகைச்சுவை மிளிர உலகியல் உவமைகள் சொல்லுவார்கள். அவ்வப்போது நடைமுறை அரசியல், சமூக நிகழ்ச்சிகளை இடையே பின்னிப் பிணைத்துப் புராணக்கதைகளை விளக்குவார்கள். கீர்த்தனைகள் பாடி அவற்றுக்குப் பொருளும் சொல்லுவர். பல மொழிகளில் புலமையும், இதிகாசங்கள் புராணங்கள் காவியங்கள் ஏனைய இலக்கியங்கள் ஆகியவற்றில் ஆழ்ந்த பயிற்சியும், வேதம், வேதாந்தங்கள் ஆகியவற்றில் தேர்ச்சியும், இசை அறிவும், சப்பலாக் கட்டையைப் பயன்படுத்தும் திறனும் பெற்று விளங்கும் இந்தக் கலைஞர்கள் எல்லாவற்றுக்கும் மேலாக இன்றைய உலகியல் அனுபவமும் நிறையப் பெற்றிருக்கிறார்கள்.

மீனாட்சி கல்யாணம், சீதா கல்யாணம், ருக்மிணி கல்யாணம் முதலியவற்றை மக்கள் விரும்பிக் கேட்கின்றனர். பெரியபுராணம் முதலியவற்றை 30 நாள் 45 நாள் என்று தொடர்ந்து சொல்லுவதும், ஒரு நாள்கூடத் தவறவிடாமல் அவற்றை மக்கள் கேட்பதும், வழக்கம். இருவர் உரையாடும் கட்டம் வரும்போது, பாகவதரே

வெவ்வேறு குரல்களில் பேசியும் பாடியும் காட்டுவது சுவையாக இருக்கும். ருக்மிணியைத் தூக்கிச் செல்ல கிருஷ்ண பரமாத்மாவின் தேர்ச்சக்கரங்கள் பறக்கும் வேகத்தில் செல்லுவது சொற்களிலும் இசையிலும் கூடி அதே வேகத்தில் படம் பிடித்துக் காட்டப்படும்.

இந்தக் கலைஞர்களின் நகைச்சுவைத் துணுக்குகளும் சொல்லாட்சிகளும் கேட்பவர்கட்கு இன்பம் தரும். சென்னை மாநகரிலும் பிற ஊர்களிலும் திரு முருக கிருபானந்தவாரியார் கந்தபுராணம் முதலியவற்றைப் பல நாட்கள், பல வாரங்கள் கதா காலட்சேபமாக நடத்தி இந்தக் கலையின் தரத்தையே உயர்த்தியிருப்பது வரலாற்றில் குறிப்பிடத் தக்கதாகும்.

பாமரரின் பல்கலைக் கழகமாகத் தொடங்கிய இந்தக் கலை, இப்போது படித்துப்பட்டம்பெற்றவர்களும் பயிலும் பல்கலைக் கழகமாக உள்ளது. வெறும் பொழுதுபோக்காக இல்லாமல், இந்நிகழ்ச்சிகளில் தாளும் பேனவும் வைத்துக்கொண்டு குறிப்பு எடுத்து 'வாரியார் விருந்து' என வார இதழ்களுக்கு எழுதியனுப்பும் அளவுக்கு மக்களுடைய ஆர்வம் வளர்ந்திருப்பது வரவேற்புக்கு உரியது.

### காவடி நடனம்

முருகன் வழிபாடு, தமிழ் நாட்டில் தொன்றுதொட்டு நடந்து வருகிறது. வீரர்களுக்குள் ஒரு பெரும் வீரனாக அவன் விளங்குகிறன். குழந்தைகளுக்குக் குழந்தை வேலனாகவும், இளைஞர்களுக்குப் பால சுப்பிரமணியன் ஆகவும், கலைஞர்களுக்கு மயிலேறி ஆறு முகங்களையுடைய அண்ணலாகவும், வீரர்களுக்கு தேவசேனாதிபதி என்ற பதவிப் பெயர்கொண்ட போர்ப்படைத் தலைவனாகவும், இல்லறத்தார்க்கு வள்ளி தெய்வயானை என்னும் இரு மனைவியர் சூழ்ந்த சுப்பிரமணியராகவும், துறவிகளுக்குப் பழநியாண்டவராகவும் காட்சிதருவது முருகனின் சிறப்பு.

அசுரர்களின் கொடுமையை ஒழித்து வெற்றிகண்ட போர்வீரன் முருகன். எனவே, படைவீரர்களிலேயே தலைசிறந்த படைவீரன் ஆன அவன் கோயில் கொண்டிருக்கும் சிறப்புத் தலங்கள் ஆறும், படைவீடுகள் எனப்படுகின்றன. இவற்றில் பழநி மலையும் இடும்பன் மலையும் சிறப்புடையன. இவை சிவகிரி, சத்திகிரி எனக் கயிலாயத்தில் இருந்தன என்பர். இவற்றை அகத்திய முனிவரிடம் சேர்ப்பிக்கப் பொதிகை மலைக்குக் கொண்டு போகுமாறு இடும்பாசுரனுக்கு ஆணையிட்டார் இறைவன். இவைகளைக் காவடிபோல் கட்டித் தூக்கிவந்த இடும்பன், பழநியில் களைப்படைந்து இறக்கிவைத்தான்.

பிறகு, இந்த இடும்பன் முருகனின் வாயில் காவலனுக இருக்க வரம் வேண்டி, அவ்வாறே கேட்ட வரத்தைப் பெற்ருன். தான் இரு மலைகளையும் காவடியாகத் தூக்கி வந்ததுபோலவே காவடிகள் தூக்கி வரும், அடியவர்களது வேண்டுதல்களுக்கு, முருகன் செவிசாய்த்து அருள்புரிய வேண்டுமென இடும்பன் கேட்டுக் கொண்டான். இதுவே காவடி எடுக்கும் வழக்கம் தோன்றிய வரலாறு. காவடி எடுத்து, பழநிமலைக்குச் செல்லுபவர்கள் இடும்பன் சந்நிதியில் இளைப்பாறி இடும்பனை வழிபட்ட பின்னரே மேலே செல்லுவது மரபு.

காவடிகள் பலவகையின. பால் காவடியும் பன்னீர்க் காவடியும் மிகவும் பரவியுள்ளன. காவடிகளின் அளவு, அமைப்பு, அதில் எடுத்துச் செல்லவேண்டிய பொருள்கள், தூக்கிச் செல்லும் முறை ஆகிய அனைத்துக்கும் தலைமுறை தலைமுறையாகச் சில நியதிகள் உண்டு. காவடி எடுப்பவர்கள் பெரும்பாலும் தங்கள் நாக்கில் வேல் குத்திக் கொண்டு செல்லுவதும் மரபு. மனிதனின் அகந்தையையும் நாவையும் அடக்க இந்த ஏற்பாடு தோன்றியிருக்கவேண்டும்.

காவடியைத் தொடர்ந்து வருபவர்கள் காவடிச்சிந்து பாடுவர். அந்தப் பாடல்களைக் கேட்டு, காவடி எடுப்பவர் காவடி தன் தலையிலும் கழுத்திலும் தோளிலும் உருளுமாறு நடனம் ஆடிச் செல்லுவது பயிற்சியாலும் பக்தியாலும் வளர்ந்துள்ள ஒரு கலை என்றே சொல்லவேண்டும்.

காவடிச்சிந்து, என்பது சிறந்த இலக்கிய வகையாகும். எளிய சொற்களில் அமைந்து, கேட்பதற்கு இனிமை பயப்பதும், காவடியைத் தாங்குபவனின் களைப்பைப் போக்குவதும், இதன் சிறப்புக்கள்.

காவடிச்சிந்து காவடிகளின் பின்னே செல்லுபவர்களால் மட்டுமன்றி, கோயில்களிலும் பாடப்பெறுகிறது. சில கோயில்களில், நவராத்திரி விழாவின் இறுதி நாளில் பல பண்களில் காவடிச் சிந்தினைப் பாடுகிருர்கள்; திருச்செந்தூரிலும் பழநியிலும், சுவாமி புறப்பாட்டுக்கு முன் நாதசுர முழக்கத்துடன் காவடிச்சிந்து பாடுவதை இன்றும் காணலாம். இவை முருகன்—வள்ளி காதல் உறவுகளை விவரிப்பதால் பக்தர்கள் ஆவலுடன் கேட்டு மகிழ்வார்கள்.

25க்கு மேற்பட்ட காவடிச்சிந்துக்கள் உண்டு. இவற்றில் புகழ் பெற்றது சென்னிகுளம் அண்ணுமலை ரெட்டியார் பாடிய காவடிச் சிந்து.

இந்நாளிலும் காவடிச்சிந்து புதிதாகப் பாடப்பெறுகிறது. இதோ ஒரு சான்று.

## பழநி முருகன் காவடிச் சிந்து

### (பெ. தூரன்)

சிந்து மெட்டு கரஹரப்பிரியாவில்
தாளம் : ஆதி பிறந்தது

அழகுத்தெய்வ மாகவந்து பழநிமலை மீதில்நிற்போன்
ஆதிசக்தி அன்னை தந்த பாலன்—அவன்
அசுரர்தம்மை வென்றவடி வேலன்—நல்ல
அமுதமென்னுமோர் தமிழில்பாடிடும் அன்பர்வாழவே
கருணைசெய்குகன்
அரனுகந்த குருவாம் உயர்சீலன்—என்றும்
அருள் சுரந்தே காக்கும் அனு கூலன்
குழந்தையாகக் குமரனாகக் கோவணுடைத் துறவியாக
கோலங்கொள்ளும் காட்சிஎன்ன சொல்வேன்—கண்டு
கூறும்மாய வினைகள்யாவும் வெல்வேன்—இந்தக்
குவலயத்திலோர் கலியுகப்பெரு வரதனய்த்திகழ்ந்
தருளும்கந்தனை க
கும்பிட்டென்றன் பிணிகள்நீங்கிம கிழ்வேன்—உள்ளக்
குமுறல் ஓய்ந்தே நல்லவழி செல்வேன்
நீலமயில் மீதில்ஏறி ஆவினன்கு டியில்தோன்றும்
நிமலனும்கு ழந்தைமுரு கேசன்—உயர்
நித்திலப்புன் முறுவல்வள்ளி நேசன்—அவன்
நீள்நிலந்தனில் அன்புசெய்திடும் அடியர்யாரையும்
காத்துநின்றிடும்
நித்யஜோதி வடிவமாம்ப்ர காசன்—தூரன்
நெஞ்சை நீங்கா தென்றும்அங்கு வாசன்

### கரக ஆட்டம்

கரக ஆட்டம் மாரியம்மன் வழிபாட்டால் பிறந்தது. இது இரு வகையானது: (1) தெய்வ வழிபாட்டுடன் இணைந்தது, (2) தொழிலாக நடத்தப்படுவது.

தெய்வ வழிபாட்டுக்கான கரகாட்டம் சக்தி கரகாட்டம் எனப் படும். சிறுகுடம் ஒன்றில் நீர் நிரப்பி, தேங்காயை வைத்து மூடி யிருப்பார்கள். அதைச் சுற்றிப் பூ அலங்காரம் செய்து உச்சியில் ஓர் எலுமிச்சைப்பழமும் வைத்திருப்பார்கள். இதன் பெயர் கரகம்.

கரகத்தைக் கோயில் பூசாரியோ சாமியாடியோ அல்லது அவர்கள் குறிப்பிடும் ஆட்களோ தூக்கி வருவார்கள். கரகம் எடுத்து வருவது ஒரு பேருகக் கருதப்படுகிறது. சாதாரணமாக யாரும் தங்கள் உரிமையை விட்டுக் கொடுப்பதில்லை.

தொழிலாக, அதாவது வருவாய்க்கு ஆடுவது **ஆட்டக் கரகம்.** ஆற்றல் உள்ள எவரும் இதை ஆடலாம். எங்கு வேண்டுமானுலும் ஆடலாம். புது தில்லியில் இந்தியக் குடியரசு விழாக் கொண்டாட்டத்தின் ஒரு பகுதியாக ஆண்டுதோறும் இந்த ஆட்டம் நிகழ்கிறது.

கரகத்தைத் தலையில் தாங்கி ஆடுபவருக்குத் துணையாக பம்படை, உருமி, தவுல், நாதசுரம், தமுக்கு ஆகிய பக்கவாத்தியங்களும் வாசிப்பது பழக்கம். கரக ஆட்டக்காரர்கள் தம் உடம்பை இறுகப் பிடிக்கும் உடை உடுத்தி, போர்வீரர்போலவும் சிலப்பதிகாரத்தில் சொல்லப்படும் குடக்கூத்து ஆட்டக்காரர் போன்றும் காட்சியளிப்பார்கள்.

ஏற்கெனவே நாம் கூறியிருப்பதுபோல, கரகம் அல்லது கும்பம் புண்ணியச் செயலுக்காகப் புனித நீர் வைக்கப்பட்டுள்ள குடம் ஆகும். சாதாரணச் சடங்குகளின்போது, வருண பகவானுக்குரிய கடல்களும் புனித ஆறுகளும் கரகத்தில் அடங்கியிருப்பதாக ஐதிகம். எனவே, இறைவனை வழிபடுபவர்கள் கரகத்திலிருந்து அல்லது கும்பத்திலிருந்து வெளிவரும் நீர் தங்கள் தலைமீது பட்டதும், புனித நீராடிய பயனைப் பெற்றதாகத் தலைமுறை தலைமுறையாகக் கருதி வருகிருர்கள்.

மேய்ச்சலை முக்கிய தொழில்களுள் ஒன்ருகக் கொண்ட பழந் தமிழர்கள், தண்ணீரைத் தங்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாப் பொருளாகக்கொண்டது இயல்பே. எனவே அவர்கள் மழைத் தெய்வமாக மாரி (மாரி—மழை) அம்மனையும், ஆற்றுக் கடவுளர்களாக கங்கை அம்மனையும் காவிரி அம்மனையும் வழிபடத் தொடங்கினர். இந்தத் தெய்வங்களைப்போற்ற, கரக ஆட்டம் ஏற்பட்டது. படிப்படியாக இதை ஒட்டிய சடங்குகள் பல்கிப் பெருகின. ஆரம்பத்தில் கிராமப்புறத்து அழகிகள் மட்டுமே கரகம் ஆடினர். இப்போது அழகு, பால் என்ற வேறுபாடுகள் இன்றி அனைவரும் கரகம் ஆடுகின்றனர்.

நெல்லை மாவட்டத்தில் கரகத்துக்கு **அம்மன் கொண்டாடி** (அம்மன் அருள் பெறும் வழி) என்ற பெயர் நிலவி வருகிறது.

கரகம் ஆடுபவன் சட்டை அணிவது கிடையாது. வேட்டியையும் முழங்கால் அளவுக்குத்தான் பெரும்பாலோர் கட்டிக்கொள்வர்.

அவன் தன் உடல் முழுவதும் திருநீறும் சந்தனமும் பூசிக் கொள்வான். தலையில் கரகத்தை வைத்துக்கொண்டு ஆடுவான். தண்ணீருக்குப் பதிலாக, கரகம் நிறைய அரிசியை வைத்துக் கொண்டு ஆடுவதும் உண்டு. ஒரு பொது இடத்திலிருந்து புறப் பட்டு, கரகக்காரன் கோயிலுக்கு ஊர்வலமாகச் செல்லுவான். பக்க வாத்தியங்களின் முழக்கத்திற்கு ஏற்ப, கரகம் ஆடுபவனின் நடனத் திலும் வேகமும் விறுவிறுப்பும் உற்சாகமும் இருக்கும். எப்படித்தான் அவன் தலைகீழாக ஆடினாலும் தலையில் இருக்கும் கரகம் விழாது, அவன் அதைக் கையால் தொடுவதும் இல்லை. ஆனால் கரகம் கீழே விழக்கூடாது என்பதிலேயே அவனுடைய எண்ணம், சிந்தனை அனைத்தும் இருக்கும். 'ஆரியக் கூத்தாடினாலும் காரியத்திலே கருத்தாக இருக்கிறான்' என்று சொல்லுவது உண்டு. இறைவனே அவன் உடலுட்புகுந்து கரகத்தைத் தாங்கிக்கொள்வதாகவும் சிலர் கருதுவர். முன்னரே குறிப்பிட்டது போல, கரகத்துக்குப் பின்னணி இசையாக நையாண்டி மேளம் வாசிக்கப்படுகிறது.

உபநிடத்திலும் கரக ஆட்டம் சொல்லப்பட்டிருக்கிறது.

### புறப்பாட்டு

புறம் என்பது நகரின் வெளிப்பகுதியிலுள்ள மருத நிலத்தைக் குறிக்கும். புறப்பாட்டு என்பது ஒருவகைக் குருவிகளின் பாடல் எனலாம். இது 11-ம் நூற்றாண்டில் தோன்றிற்று. காதல் நோயால் வாடும் காதலி, தன் நிலையைக் காதலனுக்குப் பறவைகள் மூலமாகவும் ஏர், காற்று ஆகிய இயற்கைப் பொருள்கள் வாயிலாகவும்கூடத் தெரிவிப்பாள்.

### புரவி ஆட்டம்

இது பொய்க்கால் குதிரை ஆட்டம் என்றும் பெயர்பெறும். 20 கிலோகிராம் எடையுள்ளதும், பல வண்ணங்களில் தீட்டப் பட்டதுமான மரக்குதிரைக் கூடுகளை அணிந்துகொண்டு ஆடுவது வழக்கம். இந்தக் குதிரையைச் செய்ய சணல், அட்டை, காகிதம், கண்ணாடி ஆகியவை பயன்படுத்தப்படுகின்றன. இதன் விலை ரூ. 8,000-ஆகும் (1974). ஆடவரும் பெண்டிரும் சேர்ந்து ஒரு ஜோடியாக ஆடுவார்கள். பார்ப்பதற்கு குதிரைமீது ஏறி வருவது போலத் தெரியும். ஆனால் இந்தப் பொம்மையிலுள்ள துவாரங் களுக்குள் காலை விட்டுக்கொண்டு ஆடுவார்கள். புராணக் கதைகளைக் கூறி இசைப் பாடல்களுக்கேற்பத் திறமையுடன் ஆடப்

படும் இந்த ஆட்டம் திருவிழாக்களில் கண்டு இன்புறத்தக்கது. இந்தக் கலை, சோழர்களால் தோற்றுவிக்கப்பெற்றது. சிலப்பதிகாரத்தில் மரக்கால் ஆட்டம் என்று பெயர்பெறும் ஆட்டம் இதுவே.

பிற்காலத்தில் தஞ்சையை ஆண்ட மராட்டிய மன்னர்கள் இந்தக் கலைக்குப் பேராதரவு கொடுத்து, இதில் சில மாறுதல்களைச் செய்தார்கள். பரத நாட்டியம், கதக் நடனம் ஆகியவற்றின் இயல்புகளையும் இக்காலத்தில் பொய்க்கால் குதிரை ஆட்டக்காரர்கள் கையாளுகிறார்கள். இந்த ஆட்டத்திற்கு நிறைந்த பயிற்சி வேண்டும். காலுக்கு அடியில் மரக்கட்டைகளைக் கட்டிக்கொண்டு ஆடுவது என்பது எளிதன்று. ஆட்டம் நடக்கும் திடலில், தேள், பாம்பு முதலியன இருந்தால் ஆட்டக்காரருக்கு அவற்றால் எவ்வித இடையூறும் ஏற்படக்கூடாது என்பதற்காகவே மரக் கட்டைகளைக் கட்டிக்கொள்ளும் வழக்கம் உண்டாயிற்று.

பல மணி நேரங்களுக்கு பொய்க்கால் ஆட்டத்து ராஜாவும் ராணியும் சுவைபட உரையாடுவர்.

இந்த ஆட்டம் இப்போது வெளி மாநிலத்தாரையும் வெளி நாட்டினரையும் கவர்ந்து தமிழர்களின் கலைச் சிறப்புக்கு எடுத்துக் காட்டாகத் திகழ்கிறது.

## பொம்மலாட்டம் (பாவைக்கூத்து)

தமிழ் நாடகத்துறை வளர்ச்சியின் முதற் கட்டங்களாக பொம்மலாட்டமும் தோற்பாவைக் கூத்தும் இருந்ததாக நாடக அறிஞர் கூறுவர். திருக்குறளும் பொம்மலாட்டத்தைப் பற்றி உரைக்கிறது.

மரத்தால் பாவைகள் செய்து அவற்றை வைத்துக்கொண்டு ஓடி விளையாடச் செய்யும் கலை 'மரப்பாவைக் கூத்து' எனப்படும். இதில் படிப்படியாகப் பல மாறுதல்கள் உண்டாயின ; மண்ணாலும் துணியாலும் உயிருள்ள மனிதர்களைப் போலவே தோன்றும் அழகான பொம்மைகளைச் செய்வார்கள். அவற்றின் உறுப்புக்களைக் கயிற்றால் கட்டி, பின்னால் திரைமறைவில் இருந்து உரிய கயிறுகளை இழுத்துப் பொம்மைகளை ஆடவும் பாடவும் செய்யும் திறமையே பொம்மலாட்டம். இராமாயணம், மகாபாரதம், பாகவதம், மற்றும் அரிச்சந்திரன் கதையும், சீதா கல்யாணம் ஆகியவை பொம்மலாட்டத்தில் நன்கு காட்டப்படுகின்றன. தருமபுர ஆதீன விழாக்களிலும், காஞ்சி காமகோடிபீடத்து ஆசாரிய சுவாமிகள் நடத்தி வரும் சதஸ்களிலும், பொம்மலாட்ட நிகழ்ச்சிகள் உண்டு.

பொம்மலாட்டம் இரவு 10 மணி முதல் காலை 4 மணி வரை நடக்கும். நீதிநெறிகளை இளைஞர் உள்ளங்களில் நிலைபெறச் செய்ய இந்தக் கலை சிறந்த வாய்ப்பாக அமைகிறது.

திருமகளான இலக்குமிதேவியே பொம்மலாட்டம் ஆடி, பேய்களையும் அசுரர்களையும் விரட்டியடித்ததாகக் கூறுவர்.

### தோல் பொம்மலாட்டம்

தோல் பொம்மலாட்டம் மஹாராஷ்டிரத்திலிருந்து தமிழ் நாட்டுக்கு வந்த கலைகளுள் ஒன்று. வெளிநாட்டுத் தோலால் இந்த பொம்மைகள் மிக உயரமாகச் செய்யப்படுகின்றன. வெட்டிச் சேர்க்கப்பட்டிருப்பதால், உறுப்புக்களை விரும்பியவாறு ஆட்டவும் அசைக்கவும் வசதியாக இருக்கிறது. ஆடவர், பெண்டிர், மற்றும் கடவுளர், பேய், அசுரர், உயிரினங்கள் போலத் தோன்றுமாறு அந்தந்தப் பொம்மைகளுக்கு ஏற்றவாறு வண்ணங்கள் தீட்டப்படுகின்றன. இதனுல் உயிரோட்டமுள்ள கலையாக இது அமைந்திருக்கிறது.

### குறவஞ்சி

குறவஞ்சி என்பது இசை நாடக நிகழ்ச்சி; இது பழமையான நாட்டிய நாடகம். அரசர்களுடைய ஆதரவில் தமிழ்நாட்டுக் கோயில் திருவிழாக்களில் இவை அரங்கேற்றப்பெற்றன. பக்தியுடன் கூடிய காதல் காட்சிகள் இவற்றில் நிலவுகின்றன.

தமிழில் நூற்றுக்கணக்கான குறவஞ்சிகள் உள்ளன. இவற்றுள் பலவற்றை இயற்றியவர்களின் பெயரும் காலமும் திட்டமாகத் தெரியவில்லை. சுவடிகளில் அதற்கு வேண்டிய குறிப்புக்கள் இல்லை. ஆனுல் எல்லாக் குறவஞ்சிகளும் மக்களால் பெரிதும் போற்றப்பெற்று வருகின்றன.

தஞ்சைப் பெரிய கோயிலின் உட்சுற்று வட்டத்தில் குறவஞ்சி மேடை ஒன்று இருக்கிறது. ராஜராஜ சோழன் குறவஞ்சி நிகழ்ச்சிகளை ஆதரித்தான். அவனைத் தொடர்ந்து சரபோஜி மன்னர், சிவக்கொழுந்து தேசிகரை, சரபேந்திர பூபாலக் குறவஞ்சி இயற்றச் செய்தார். இந்நாடகம் தஞ்சைப் பெரிய கோயிலில் நடிக்கப்பட்டு வந்தது.

குறவஞ்சியைப் பரப்பும் பணியில் திருமதி ருக்மிணிதேவி அருண்டேல் அவர்கள், கலாக்ஷேத்திரத்தின் வாயிலாகப் பெரிதும் பாடுபட்டு வருகிருர்கள். தமிழ் இசைச் சங்கத்தார் நடத்தும் பண் ஆராய்ச்சிக் கூட்டம் தொடங்கிய காலம் முதல் கடந்த 25 ஆண்டு

களாக, ஒரு குறவஞ்சியை ஆண்டுதோறும் அரங்கேற்றுவதையும், ஓலைச்சுவடியாக இருந்த அந்தக் குறவஞ்சியை அச்சிட்டு வழங்கு வதையும், வழக்கமாகக் கொண்டிருக்கிருர்கள். இவ்வகையில் தமிழ் இசைச் சங்கமும் பேராசிரியர் சாம்பமூர்த்தியும் அவர் காலமான பிறகு, இசை அறிஞர் ம. ப. பெரியசாமித் தூரனும் சென்னையில் செய்து வரும் தொண்டு பாராட்டுக்கு உரியது. மதுரைத் தமிழ் இசைச் சங்கமும் இத்தகைய பணிகளில் ஈடுபட்டுவருகிறது.

ஒவ்வொரு குறவஞ்சியிலும் (1) இறைவன் தோத்திரம் (2) கட்டியக்காரன் வருதல், (3) மோகினி வருதல், (4) நகர வருணனை, (5) இறைவன் உலா வருதல், (6) மோகினி காதல் கொண்டு வருந்துதல், (7) குறத்தி வருதல், (8) குறத்தி கூறுதல் (9) குறத்தி குறி சொல்லுதல் முதலியனவும், பிறகு சிங்கன் சிங்கியை வினவுதல் முதலியனவும் உண்டு. நல்ல குரல்வளத்தோடு பாடுபவர்களும் பயிற்சி பெற்று ஆடுபவர்களும் சேர்ந்து தங்கள் தங்கள் பங்கினைச் செய்தால் குறவஞ்சி அதைக் கேட்பார் காண்பார் மகிழும் வண்ணம் சிறப்பான கலை விருந்தாக அமையும். இயல் இசை நாட்டியக் கூறுகள் நிறைந்து, தொன்றுதொட்டு இது மக்கள் கலையாக, மரபு காத்து, வாழ்க்கை மரபுகளை விளக்கி நிற்கும் சிறப்புடன் விளங்கி வருகிறது.

திருக்குற்ருலக் குறவஞ்சி, விராலிமலைக் குறவஞ்சி, அழகர் குறவஞ்சி முதலியன புகழ்பெற்றவை. திருக்குற்ருலக் குறவஞ்சியை இயற்றிய திரிகூடராசப்பக் கவிராயர் பிறந்த ஊரான மேலகரத்தில், அவருக்கு வழங்கப்பெற்ற குறவஞ்சி மேடு எனப்படும் இறையிலி நிலத்தை, இன்றும் காணலாம். இவர் வழியினருக்கு இன்றும் குற்ருலநாதர் கோயிலில் மரியாதைகள் இருந்து வருகின்றன.

அர்த்தநாரீசுவரக் குறவஞ்சியிலிருந்து ஒரு பகுதி தருவோம் :—

வசனம்

அகோவாரும் பெண்ணே தெய்வக் குறமகளே உங்கள் சாதிவித்தை யெல்லாஞ் சொல்லக் கேட்டு மெத்தவுஞ் சந்தோஷமாச்சுது நீ சஞ்சரித்த மலைகளையெல்லாம் சொல்லடி பெண்ணே ஆனல் சொல்லுகிறேன் கேளடியம்மே.

### மலை வளம் கூறல்

இராகம்: நாதநாமக்கிரியா தாளம்: ஆதி திச்ரகதி

கனமலை வெள்ளிமலை கருணைகரு சோலைமலை
இனியகா ளத்திமலை எழில்பழனி மலையும்
அருணகிரி ரத்தினகிரி அதிகபரங் கிரியும்
சதுரகிரி நாமகிரி சங்ககிரி நீலகிரி
வெள்ளிமலை யீசருக்கு வேங்கடமலை நாரணர்க்கு
உள்ளமகிழ்ந் திமையர்க்கு மேரு கிரியும்
புரவலர்விண் ணவர்முனிவர் புகழுமர்த்த நாரீசர்
அரவகிரி நாங்கள்குடி யிருப்பதடி யம்மே

### அரயர் நடனம்

மார்கழி மாதத்தில் ஸ்ரீரங்கத்திலும் வைஷ்ணவர்களின் மற்ற கோயில்களிலும் இசை வல்லுநர் குழுவும் ஒரு நடனக்காரரும் திருவாய்மொழி பாடி, அரயர் நடனம் ஆடுவர்.

அரயர் என்பவர் சிவன் கோயில்களில் உள்ள ஓதுவாமூர்த்திகள் போன்றவர்கள். அவர்கள் கோயில் ஊழியர்கள். பிரபந்தம் ஓதும் போது அவர்கள் ஒரு குறிப்பிட்ட உடையும் தலையில் கிரீடம் என்று ஒருவகைக் கூம்பிய தொப்பியும் அணிவர். அவர்களே சாலராவும் போட்டுக்கொண்டு பாடுவது அரயர் மரபு. ஒரு பிரபந்தம் பாடுவதற்கும் மற்றொரு பிரபந்தம் பாடுவதற்கும் உள்ள இடைவெளியில் ‘கொண்டாட்டம்’ என்ற பெயராலும் இறைவன் புகழைப் பாடுவார்கள்.

அரயர் நடனத்தில் கிருஷ்ண லீலைகளைக் காணலாம்.

### பொடிக்கழி ஆட்டம்

புதுச்சேரிப் பகுதியில் கடலோரத்தில் வாழும் மீனவர் முருகன் திருவிழாக்களில் ஆடும் ஆட்டத்திற்குப் பொடிக்கழி ஆட்டம் என்று பெயர். 8 பேர் முதல் 16 பேர் வரை ஆடுவார்கள். முருகன் முரசுகள் முழங்க, பெண்கள் இசைபாட, ஆடவர் தங்களுக்கு மரபான ஒருவகை உடை அணிந்து ஆடுவார்கள்.

### பாகவத மேளம்

இக்கலை நான்காம் நூற்றாண்டில் தோன்றியது. பதினோராம் நூற்றாண்டில் தஞ்சை மாவட்டத்தில் பெரிதும் பரவியது. இங்கிருந்து

ராஜராஜ சோழன் காலத்தில் பாலி, ஜாவா போன்ற இந்தோனேசியத் தீவுகளுக்கும் பரவி அங்கே இன்றும் நிலவி வருகிறது.

இடையே சில நூற்றுண்டுகள் ஒடுங்கிவிட்டிருந்த இக் கலை, 18 – 19-ம் நூற்ருண்டுகளில் வாழ்ந்த மெலட்டூர் வெங்கட்ராம் சாஸ்திரியாரால் மறுமலர்ச்சி பெற்றது.

இக்கலையின் தாயகம் தஞ்சையிலிருந்து 15 கி.மீ. தொலைவிலும் பசுபதிகோயிலுக்கு அருகேயும் உள்ள மெலட்டூர் என்னும் சிற்றூராகும். தேப்பெருமாள் நல்லூர், சூலமங்கலம், ஒரத்தனுடு, ஊத்துக்காடு, காளிமங்கலம், நீடாமங்கலம் போன்ற ஊர்கள் பலவற்றில் பாகவத மேளக் கலை வேரூன்றிற்று. அக்கலைஞர்களுக்கு சரபோஜி பொன்னும் மண்ணும் வாரி வழங்கினர்.

மெலட்டூரில் இப்போதும் ஸ்ரீ வரதராசப் பெருமாள் கோயில் வாயிலில் லெட்சுமிநரசிம்ம சுவாமி ஜெயந்தியில் பாகவத மேள விழா ஆண்டுதோறும் சித்திரை மாதத்தில் கொண்டாடப்படுகிறது. விடியும் வரை இந்நிகழ்ச்சி நடைபெறும்.

இந்த இசை நாடக நிகழ்ச்சியில் பிரகலாதன் கதைதான் அடிக்கடி நடத்தப்படுகிறது. நாடகத்தின் இடையே நடிகர்கள் பொழுது போக்குப் பாடல்களையும் பாடுவார்கள். இப்பாடல்களுக்கு ‘துவபதா’ என்றும் ‘தரு’ என்றும் பெயர். நடிகர்களை அறிமுகப் படுத்த நர்த்தனம், அபிநயம் இரண்டும் கடைப்பிடிக்கப்படுகின்றன.

வடுவூருக்கு அருகில் உள்ள பாகவதமேளம் என்ற ஊர் இக் கலைஞர்களுக்கு முற்றூட்டாக வழங்கிய ஊர்களில் ஒன்ருகும்.

போர், கொலை என்ற காட்சிகளை நடிக்காமல், அந்த நிகழ்ச்சியை வாயால் உரைப்பது மட்டுமே பாகவத மேளத்தில் வழக்கம். ஒவ்வொரு நடிகரும் பரதநாட்டியப் பயிற்சி பெற்றிருப்பதும் மரபு.

கோணங்கி வருவதோடு நிகழ்ச்சி ஆரம்பமாகாது. அவன் சில நிமிடங்கள் ஆடி, பொறுமையாக நாடகத்தைப் பார்த்து அனுபவிக்கும்படி சபையோரை வேண்டுவான். பிறகு ஒரு குழுவினர் பிரார்த்தனை பாடுவார்கள். அதன் பின்னர், நடக்க இருக்கும் நாடகம் அறிமுகப்படுத்தப்படும். விநாயகக் கடவுள் மேடையில் தோன்றி, “ஒரு விக்கினமும் இல்லாமல் நாடகம் நடப்பதாக” என ஆசீர்வதிப்பார். ஒரு சிறு பையன் விநாயகர் வேடம் தாங்கி, பின்னணி இசைக்கேற்ப நடிப்பது வழக்கம். இதன் பின்னர், ஒவ்வொரு நடிகரும் அறிமுகப்படுத்தப்பட்டு, நாடகம் தொடங்கும்.

## சங்கு வாத்தியம்

பாமர மக்கள் சங்கை வணக்கத்திற்குரிய பொருளாகக் கருதுவர். வெள்ளிப்பூண் பிடித்த சங்கை இசைக்கருவியாக உபயோகிப்பர். வாயால் சங்கை ஊதினால், ஊதுபவர் உள்ளே விடும் காற்றின் அளவுக்கு ஏற்ப, சங்கிலிருந்து ஓசை பிறக்கும். கிளாரினெட், முக வீணை ஆகிய இரண்டும் சேர்ந்து உண்டாக்கும் ஓசைக்குச் சமமாக சங்கின் ஒலியைச் சொல்லலாம்.

பழனியில், பயிற்சிபெற்ற பண்டாரங்களின் குடும்பங்கள் பல ராகங்களைச் சங்கு வாத்தியத்தில் உண்டாக்குகிறார்கள்.

சங்கில் வாசித்து, இசைக்கச்சேரிகளும் செய்யலாம். இதற்குப் பயன்படுத்தும் சங்குக்கு, தவளச் சங்கு என்று பெயர். அதில் சங்கின் வாய்க்கு அருகே 5 அங்குலக் குழாய் ஒன்று பொருத்தப் பட்டிருக்கும். சங்குகள் ஊதப்படும் காற்றைத் தந்திரமாகக் கட்டுப் படுத்தி, இந்தச் சங்கை வாசிப்பார்கள்.

வயல்களிலும் முக்கியமான கட்டங்களில் சங்கு ஊதுவது வழக்கம். சங்கு ஊதுவதால், பயிர்களின் விளைவு பெருகும் என்று அறிவியல் சோதனைகளும் உறுதிப்படுத்தியிருக்கின்றன. வலம்புரிச் சங்கு ஊதி, அதன் பிறகே நிலத்தைச் செல்வர் சிலர் உழுதனர் என்று ஐங்குறு நூறு கூறுகிறது. சங்கு ஊதி வேளாண்மை வேலைகளைத் தொடங்கும் பழக்கம் கோயில் நிலங்களில் இன்றும் நிலவுகிறது.

## நவசக்தி நடனம்

நவசக்தி என்பது ஒன்பது திக்குகளைக் குறிக்கும். இசை ஒளி களுடன் நிகழும் நடனம் திருச்செந்தூர்க் கோயிலில் திருவிழாவின் தொடக்க நாளான கொடி ஏற்றத்தின்போது ஆடப்படும். தமிழ் நாட்டின் பல கோயில்களிலும் இதுபோன்ற பல்வேறு நடனங்கள், ஆங்காங்கே தக்க மாறுதல்களுடன், நடத்தப்படுகின்றன. சில இடங்களில் இறை விக்கிரகங்களின் பல்லக்குகளைத் தூக்குபவர்களும் சிலவகை நடனங்களை ஆடுகிறார்கள்.

## பாமரர் நடனங்கள்

இனி, பாமர மக்களிடம் நிலவும் நடனங்களையும் நடன நாடகங் களையும் குறிப்பிடுவோம். இவற்றை அடிப்படையாகக் கொண்டே, தமிழ்நாட்டில் திரைப்படக்கலை வளர்ச்சி அடைந்திருக்கிறது.

**குரவைக் கூத்து**

இளம் பெண்கள் எழுவர் வட்ட வடிவமாக நின்று, கைகோத்து ஆடும் கூத்து, குரவைக் கூத்து எனப்படும். இடையர் குலப் பெண்டிரான ஆய்ச்சியர்களின் குரவை என்று இதைச் சிலப்பதிகாரம் சுட்டுகிறது.

இந்த ஆட்டத்திற்கு இசை அமைப்பு மிகச்சிறப்பானது. இசையின் ஏழு வகைகளுக்கும் அடையாளமாக இதில் கலந்து கொள்ளும் பெண்கள் குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் முதலிய இசைப் பெயர்களால் அழைக்கப்படுகிறார்கள்.

இப்போது வழக்கொழிந்துவிட்ட இந்த நடனத்தின் சாயலை 'அச்சோ பொங்க' என்ற பாமரர் நடனத்தில் காணலாம். பெண்கள் வட்டமாக நின்று சேர்ந்து ஆடியும் கை கொட்டியும் பாடியும் உண்டாக்கும் காட்சியைக் கவியரசர் பாரதியார் மகிழ்ந்து பாடியுள்ளார். 'ஓசை அவர்களால் மட்டும் ஒலிக்கவில்லை; அவர்கள் அணிந்திருக்கும் வண்ண வளையல்களும் அவர்கள் ஆட்டம் ஆடும் போது அவர்களோடு சேர்ந்து ஒலிக்கின்றன' என்கிறார்.

**கழைக்கூத்து**

இது, மூங்கில் மீது நின்றாடும் கூத்து. ஸ்ரீ வில்லிபுத்தூரில் ஆண்டாள் திருக்கோயிலில் இதைக் கல்லில் செதுக்கிக் காட்டியிருக்கிறார்கள். ஒவ்வொன்றும் இரண்டு மீட்டர் நீளமுள்ள இரண்டு மூங்கில்களின்மீது நின்றுகொண்டு, கழைக்கூத்தாடி ஆடுவான். அதற்கேற்ப அவன் மனைவி இரு முகங்கள் கொண்ட ஒரு முரசை ஒலிப்பாள்.

**கணியன் ஆட்டம்**

கணவன் மனைவியரான இரண்டு கோமாளிகள் நடந்துகொண்டே சில வருணனைப் பாடல்களைப் பாடுவார்கள். எனவே இந்த ஆட்டத்திற்கு மேடை கிடையாது. ஒரு காலத்தில் கிராம தேவதைகளின் கோயில்களில் சீரும் சிறப்புமாக நடந்த கணியன் ஆட்டம் இப்போது வழக்கொழிந்த நிலையில் உளது.

## நடன பாரம்பரியம்

தமிழ்நாட்டில் நடனமும் நடன நாடகமும் மத அடிப்படை கொண்டவை. நடனத்தில் வல்லவராகச் சிவபெருமானையே கருது



படம் 9—பொய்க்கால் குதிரையாட்டம்

வர் ; அவருக்கு நடராசர் என்று அவர் ஆடும் நடனத்துக்கும் ஆனந்ததாண்டவம் என்று பெயர். ஆனந்த தாண்டவத்தால், யோகியர்களுள் யோகியாகிய நடராசர் இவ்வுலகத்தையும் மேலுலகத்தையும் இணைத்து மோட்சத்துக்கு வழிகாட்டுகிறர். நடராசர் திருவுருவம் ஓயாத மாறுதலுக்குச் சான்று ; தில்லையிலுள்ள நடராசர் கோயில் நடனக்கலை தோன்றிய இடமாகக் கருதப்படுகிறது.

இந்த மாபெரும் கோயிலின் உட்கோயிலான சிவகாமசுந்தரி அம்மன் கோயிலில் நடன வகைகளான 108 தாண்டவ வகைகளும் மிக விவரமாகவும் நுணுக்கமாகவும் செதுக்கப்பட்டுள்ளன. ஒன்றின் மேல் ஒன்ருக ஒவ்வொரு கரணமும் காட்டப்பட்டிருக்கிறது.

பழங்காலத்தில் தமிழ்நாட்டுப் பெருங்கோயில்களில் அதிகாலை முதல் நள்ளிரவு வரை இசையும் கூத்தும் நடந்தவண்ணமாக இருந்தன. காலையில் இறைவனை எழுப்ப, திருப்பள்ளி எழுச்சி பாடப்பெற்றது. இரவில் பள்ளியறைப் பாட்டுப் பாடப்பெற்றது. இவ்விரண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் நடன நிகழ்ச்சிகள் நடந்தன.

கலைப் புலமையும் பயிற்சியும் பெற்ற நடன மங்கையரை, ராஜராஜ சோழன் ஒவ்வொரு கோயிலிலும் நியமித்தான். அவர்கள் இந்தக் கலையைத் தங்கள் குழந்தைகளுக்கும் ஆர்வம் நிறைந்த ஏனையோருக்கும் கற்பித்தனர். இளம்பெண்கள் தங்கள் வாழ்க்கையையே இறைவனுக்குப் படைத்து, தேவதாசிகள் என்று பெயர் பெற்று, நட்டுவனுர்கள் என்ற ஆசிரியர்களிடம் இசைப்பயிற்சியும் நடனப் பயிற்சியும் பெற்றுர்கள். ஏழு ஆண்டுக்காலம் பயிற்சிபெற்ற பிறகு அரசன் முன்னிலையில் கோயிலில் அரங்கேற்றுவிழா நடத்தி அவர்களுக்குப் பட்டங்கள் வழங்கப்பெற்றன.

நடனமாடவும் பல்வேறு வகையான கோயிற் பணிகள் செய்யவும் தஞ்சைப் பெரிய கோயிலில் மட்டும் 400 தேவதாசிகள் இருந்தார்கள். அரிசியில் கல் பொறுக்குவது, கோயில் தரைகளைக் கூட்டி மெழுகுவது, மதிற்சுவர்களைச் சுத்தம் செய்வது, தாம்பாளங்களில் மலரும் திருநீறும் ஏந்தி நிற்பது, ஆகிய பணிகளை அவர்கள் செய்தனர். வேறு சில நடன மங்கையர் அரண்மனைகளை அலங்கரித்தனர். அவர்கள் சம்பளம்பெறும் ஊழியராக, அரசனின் திருமேனிப் பணி புரிந்தனர் ; அரசிக்கும் ஏவலாளராக இருந்தனர். பணவசதியும் செல்வாக்கும் நிறைந்த பெரிய குடும்பங்களைச்சேர்ந்த பெண்கள்கூட, தங்களுடைய கலைப் புலமையையும் ஆற்றலையும் கோயிலுக்கே பயன்

படுத்த உறுதிகொண்டு வாழ்நாள் முழுவதையும் கோயிற் பணிக்கே கொடுத்தனர்.

நடன மங்கை ஒருத்தியின் விருப்பத்தை நிறைவேற்றுவதற்காகத் தான் ராஜராஜச்சோழன் தஞ்சைப் பெரிய கோயிலைக் கட்டினான் என்றும் நாடோடிக் கதை ஒன்று தலைமுறை தலைமுறையாக வழங்கி வருகிறது. ஒரு நடனமங்கை மிக அழகாக இருந்தளாம். கடவுள் சந்நிதியில் மட்டுமே ஆடுவதாக அவள் பிடிவாதம் கொண்டாளாம். சிறந்த கல்தச்சனாக (சிற்பி) விளங்கிய அவள் தந்தை இச்செய்தியை அரசனிடம் கூறினான். உடனே அரசன் ஒரு கோயிலைக் கட்டி முடித்தான்: அந்தக் கோயிலில்தான் அவளுடைய நடன அரங் கேற்றம் நடைபெற்றது, என்பது கதை.

தமிழ்நாட்டு நடனம் தேவதாசி முறையுடன் தொடர்பு கொண்டிருந்ததால் அதை இழிவாகச் சிலர் கருதினர். இது, தவறான கருத்து. தேவதாசி முறை, சிறந்த கலைப் பாரம்பரியத்தைப் பாதுகாத்து வந்தது, என்பதை மறைக்கவோ மறுக்கவோ இயலாது. தேவதாசி எதிர்ப்பு, சமூக சீர்திருத்தம் போன்ற இயக்கங்களால் பழைய முறை ஒழிக்கப்பட்டு, நடனக்கலையே அழிந்துபோகும் நிலை 1945 அளவில் நிலவியது. பரத நாட்டியத்திற்கு 'சதிர் ஆட்டம்' என்ற பெயர் ஏற்பட்டு, கேவலமாக—ஒழுக்கம் குறைந்தவர்களின் தொழிலாக—அது கருதப்பட்டது.

இந்த நிலை, இந்தியாவின் விடுதலைக்குப் பிறகு மாறிவிட்டது. நடுத்தரக் குடும்பங்கள், புகழ்பெற்ற குடும்பங்கள் ஆகியவற்றைச் சேர்ந்த பெண்கள் பரதநாட்டியம் பயின்று ஆட முன்வந்திருக்கிறார் கள். கலாக்ஷேத்திரமும், தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றமும் நடனக்கலையில் ஈடுபாடு உள்ளவர்களுக்கு முறையான பயிற்சி கொடுத்து இக்கலைக்குப் புத்துயிர் ஊட்டியிருக்கின்றன.

நடனம் ஆடுவது வெட்கப்பட வேண்டிய தொழில் என்ற எண்ணம் பரவியதால், சிலர் இத்தொழிலைக் கைவிட்டு, வாழ்க்கைச் செலவைச் சரிக்கட்ட வேறு தொழில்களில் புகுந்தார்கள். பந்தணை நல்லூர் மீனாட்சிசுந்தரம் பிள்ளை போன்ற ஒரு சிலரின் குடும்பங்கள் மட்டும் மரபு அறுந்துவிடாதவாறு தங்கள் கலைத் தொண்டினை இடையறாது புரிந்து வந்திருக்கின்றன. பந்தணைநல்லூர் மீனாட்சி சுந்தரம்பிள்ளை பரதநாட்டியக் கலையை முறையாகக் கற்றுத் தேர்ந்து முதிய பருவத்திலும் தம் சிற்றூரில் இருந்தவாறே இந்தியாவெங்கு முள்ள கலைஞர்களுக்கும் மேனாட்டு மாணவ மாணக்கியர்க்கும் பரத நாட்டியத்தைக் கற்பித்திருக்கிறார். அவர் புகட்டிய அரிய நடனக்

கலையைப் பற்றி இலண்டனில் பெரியதொரு நூல் 1953-ல் வெளியிடப் பெற்றது. இந்நாளில் தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றம் ஆண்டு தோறும் சிறந்த பரதநாட்டிய ஆசிரியர்களுக்கு விருது வழங்குகிறது. இந்தியக் குடியரசுத் தலைவர் அவர்களும் குடியரசு நாளில் பரத நாட்டிய அறிஞர்களுக்குப் பட்டம் வழங்கிப் பாராட்டி வருகிறார்.

நடனக்கலையில் மக்களுடைய ஆர்வம் பெருகியிருக்கிறது. பயிற்சி பெற்று அரங்கேற்றம் நடந்த பிறகு வெற்றியடையும் நடன மங்கையரின் பெற்றோர்கள் பெரிதும் மகிழ்ந்து மேன்மேலும் அவர்களை ஊக்குவிக்கின்றனர். சுற்றுலா விழாக்களில் இந்நிகழ்ச்சிகளைக் காணும் வெளிநாட்டார் பெரிதும் இவற்றில் ஈடுபட்டு, இக் கலைஞர்களைத் தங்கள் நாடுகளுக்கும் அழைக்கின்றனர். எனவே புகழுடன் பணமும் பெறும் வாய்ப்பு, நடனக் கலைஞர்களுக்கு இப்போது உளது. பலரும் தங்கள் திறமைகளை வளர்த்துக்கொள்ள நேரமும் பணமும் செலவிடத் தயங்கவில்லை, விளம்பரக் கலையின் வளர்ச்சியும் இவர்கள் முயற்சிக்கு ஆதரவாக இருக்கிறது. வெற்றிமுரசு கொட்டும் திரைப் படங்களிலும் பரதநாட்டியக் கலைஞர்கள் நடித்துள்ளனர். எனினும் நாட்டியமணிகளின் வெற்றிக்கு அடிப்படை, முன்னோர் மரபு வழியைப் பாதுகாத்து அவர்களைப் பயிற்றுவிக்கும் நட்டுவனார்களே. இவர்களுடைய புகழும் தொண்டும் வாழ்க! வளர்க!

# 8. தெருக்கூத்தும் பிற பொழுதுபோக்குகளும்

தமிழ்நாட்டில் நாட்டுப்புற மக்கள் தங்களுக்கென்று வழிவழியாக, தெருக்கூத்தையும் பொழுதுபோக்குக்கான ஏனைய கலைகள் பலவற்றையும் முறையாக வளர்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

## நாடகம்

முதல் ராஜராஜ சோழன் காலத்தில் இன்றைய மேடைநாடக முறை தோன்றியதாகத் தெரிகிறது. அதற்குமுன் நிலவிய நடன நாடகங்கள், கிருஷ்ண லீலை முதலிய புராணக் கதைகளையே பின்னணியாகக் கொண்டிருந்தன. அவை கோயில்களுக்குள்ளேயே நடந்தன ; எனவே மதப்பற்றினை வளர்க்கும் வகையில் தெய்வீக நாடகங்களாகவே விளங்கின.

ஒவ்வொரு கோயிலிலும் ஒரு நாடக அரங்கு அல்லது மேடை இருந்தது. கோயில் திருவிழாக்களின்போது அங்கு நாடகங்கள் நடிக்கப் பெற்றன. அவை பாமர மக்களுக்காகவே ஏற்பாடு செய்யப்பட்டன. 'அரசனுக்குக் கட்டுப்பட்டு நடக்கவேண்டும், மதக் கொள்கைகளை மீறக்கூடாது, பொழுதுபோக்காகப் பயன்படுவதால் நாடகக்கலையை நாமும் ஆதரிக்கவேண்டும்' என்ற மூன்று கருத்துக்களையும் மக்கள் உள்ளங்களில் பதியவைக்கும் பிரசாரக் கருவியாக நாடகம் பயன்படுத்தப்பட்டது.

ராஜராஜ நாடகம் என்பது முதலில் ராஜராஜ சோழன் அடைந்த போர் வெற்றிகளையும் அவன் தஞ்சைப் பெருங்கோயில் கட்டி, கலைத் துறையிலும் சமயத்துறையிலும் கண்ட வெற்றிகளையும் கூறி அவனுடைய வாழ்க்கை வரலாற்றை எடுத்துரைக்கும் நாடகமாக

இயற்றப்பெற்றது. அதில் நடித்தவர்களுக்கு ராஜராஜன் பட்டங்கள் வழங்கி நன்செய் நிலங்களை மானியமாகவும் கொடுத்தான்.

இன்றைய கிராமிய நாடகங்களில் இசை நிகழ்ச்சிகளும் நடன நிகழ்ச்சிகளும் நீண்ட உரையாடல்களும் இடம்பெற்று அது தெருக் கூத்து என்ற பெயருடன் மிளிர்கிறது. இசைக் கருவியாக ஆர்மோனியமும் மிருதங்கமும் புல்லாங்குழலும் எல்லாத் தெருக் கூத்துக்களிலும் வாசிக்கப்படுகின்றன. பாடல்களை, உரக்கக் கத்திப் பாடுவதும் தெருக்கூத்து மரபு. அவ்வப்போது மக்கள் மனத்தைக் கவரும் திரைப்படங்களில் வரும் சில பாடல்களை, தெருக்கூத்துக் களில் பாடுவார்கள். ரசிகர்கள் அவற்றை மீண்டும் கேட்க ஆவலாக 'ஒன்ஸ் மோர்' என்று கத்துவார்கள். அந்த வேண்டு கோளை நடிகர்கள் நிறைவேற்றுவர்.

தெருக்கூத்து இரவு 10 மணி அளவில் தொடங்கும். விடிவதற்குச் சற்று முன்னர்வரை அது நடைபெறும். இதனால் "கூத்தாடி கிழக்கே பார்ப்பான்; கூலிக்காரன் மேற்கே பார்ப்பான்" என்ற பழமொழி ஏற்பட்டிருக்கிறது. சூரியன் தோன்றினால்தான் நாடக நடிகர்கள் தங்கள் கடமை முடிந்து வீடு செல்ல இயலும். அது போல, கூலி வேலை செய்பவர்கள், பகற்பொழுது முழுவதும் வேலை பார்த்துத்தான் தீரவேண்டும் என்பது முன்னைய வழக்கம்.

கோயில் திருவிழாக்களை முன்னிட்டும், பருவம் தவறிவிட்ட மழையை வரவழைக்கவும், தெருக்கூத்து ஏற்பாடு செய்யப்படும். ஒரு கிராமத்தில் கட்சிகள் வளர்ந்து ஊருக்குப் பல கேடுகள் விளையும் அல்லது ஊரின் முன்னேற்றம் தடைப்படும்; இரண்டு கட்சியினரும் ராசி செய்துகொண்டு மீண்டும் கூடுவாராயின் அந்த நிகழ்ச்சியைக் கொண்டாடவும் கூத்து வைப்பது மரபு. ஊரில் உள்ள திடல், அல்லது கோயில் வாயில், அல்லது (வேனிற் காலத்தில்) ஏரி, அல்லது கண்மாயில், கூத்து மேடையை அமைப் பார்கள். தெருக்கூத்தைக் காண்பவர்களிடம் கட்டணம் வசூலிக்கும் பழக்கம் கிடையாது. கூத்துக்கு ஏற்படும் செலவுகளை நன்கொடை யாக வசூலிப்பதுதான் மரபு.

தெருக்கூத்துக்களில் நடிகர்கள் குறைந்த ஆடைகள் உடுத்தியே நடித்துவந்தனர். எளிய முறையில் அதன் அமைப்பு இருந்து வந்தது. இந்த நிலை மாறி, திரைப்பட நாடக இயல்புகளைப் பின்பற்றித் தெருக்கூத்துக்களிலும் பல திரைகளும், விலை மிகுந்த உடைகளும், அலங்காரப் பொருள்களும் பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

வள்ளி திருமணம், பவளக்கொடி, அல்லி அர்ச்சுனன், நல்ல தங்காள், மதுரைவீரன், பத்மாசுரன், காத்தவராயன், இராமாயணம், அரிச்சந்திர மயான காண்டம், ஆகியவற்றைத்தான் நாட்டுப்புற மக்கள் விரும்புகின்றனர். இவற்றையே தெருக்கூத்துக்களில் பெரும்பாலும் காணலாம். ஒரு நாள் மட்டும் தெருக்கூத்து நடந்தால், அரிச்சந்திரன் கதையை நடிப்பது வழக்கமன்று. இதன் துன்பியல் முடிவு காரணமாக, திருவிழாவின் இறுதிக்கட்டமாக இதை வைத்துக்கொள்ள மக்கள் விரும்புவதில்லை. மூன்று நாள் கூத்து நடந்தால் இரண்டாம் நாள் இரவில் அரிச்சந்திர மயான காண்டம் நடிக்கப்படும்.

### மாவெலி நாடகம்

மாவெலி நாடகம் தஞ்சை மாவட்டத்திலுள்ள திருமறைக்காடு என்னும் வேதாரண்யத்துக்கு உரியது. இந்நாடகத்தின் தோற்றத் துக்குக் காரணமான ஒரு நிகழ்ச்சி திருநாவுக்கரசர் தேவாரத்தில் குறிப்பிடப்படுகிறது. கோயிலில் இருந்த விளக்கு ஒன்றின் ஒளி குறைவதைக் கண்ட ஓர் எலி, விளக்குத் திரியைத் தூண்டிவிட்டது. அப்போது, எலியின் மூக்கை விளக்குத் தீ சுட்டுவிட்டது. இறைவன் மூவுலக ஆட்சியையும் அந்த எலிக்கு வழங்கி அதைச் சக்கரவர்த்தியாகப் பிறக்கச் செய்தார். கார்த்திகை மாதத்தில் தீபம் ஏற்றி வைப்பவர்கட்காக மாவெலி வரம் கேட்டார்.

இந்நிகழ்ச்சிகளைச் சித்திரிக்கும் மாவெலி நாடகத்தை, தேவ தாசிகள் நடித்து வந்தார்கள். தேவதாசி ஒழிப்புச் சட்டத்துடன் இந்த நாடகமும் வழக்கொழிந்துவிட்டது.

### நொண்டி நாடகம்

நொண்டி நாடகம் என்பது தாசி ஒருத்தியிடம் மயங்கி தன் பணத்தை எல்லாம் இழந்ததோடு ஒரு காலையும் இழந்து நொண்டியான ஒருவனின் கதை. பணத்தை இழந்து, திருட்டுத் தொழில் புரிந்தபோது, தண்டனையாக அவனுடைய காலும் கையும் வெட்டப்பட்டன. பிறகு அவன் சுப்பிரமணிய பக்தனாகி, அங்குலம் அங்குலமாக நொண்டி இன்னல்களைத் தாங்கி சுப்பிரமணியர் படை வீடுகளுக்கெல்லாம் சென்று மனமுருக வழிபட்டான். அவனுடைய பக்தியை மெச்சி அவன்பால் கருணைகொண்ட இறைவன், அவனுக்கு மீண்டும் காலையும் கையையும் பணத்தையும்

அருளினுன். இந்த நாடகம் 'சிந்து' என்னும் இலக்கிய வகையில் இயற்றப்பெற்றிருப்பதால் நொண்டிச்சிந்து என்னும் பெயர் பெறும்.

### பகல் வேஷம்

தங்களை அடையாளம் கண்டுகொள்ள முடியாதவாறு, நடை உடை பாவனைகள் தோற்றங்கள் குரல் முதலிய எல்லாவற்றிலும் வேடம் போட்டுக்கொள்ளக்கூடிய சிறந்த நடிகர்கள் பகல்வேஷம் என்ற கலையைத் தங்கள் திறமையால் காட்டுவார்கள்.

பட்டப் பகலில் அவன் ஒரு பிச்சைக்காரனுக அல்லது பள்ளி ஆசிரியனுக அல்லது ஆருடக்காரனுக நடுத்தெருவில் வருவான். அவன் மனைவியும் அவனுடன் வருவாள். கணவனும் மனைவியும் நடுத்தெருவில் சண்டை போட்டுக் கொள்ளுவர். அவன் உரத்த குரலில் அவளைப் பயமுறுத்துவான். அடிக்கவும் செய்வான். உடனே அவள் குய்யோ முறையோ என்று அழுவாள். அவளது அழுகுரல் கேட்டு தெருப் போக்கர்கள் கூட்டமாகக் கூடி அவர்களைச் சமாதானப் படுத்துவார்கள். ஆயினும், சண்டை ஓயாது. செலவுக்கு ஒன்றும் கொடுக்காமல் மனைவியைத் தனியே விட்டு விட்டு, அவளிடமிருந்து மண விலக்குப் பெற்றதாகக் கூறி அவன் அங்கிருந்து நடையைக் கட்டிவிடுவான். கூடியிருக்கும் தெருப் போக்கர்கள் மனம் இரங்கி, அவளுக்கு நிதி சேர்த்துக் கொடுப்-பார்கள்.

### இருளர் நாடகங்கள்

நீலகிரி மாவட்டத்து இருளர்களில் சிலர் ஓரளவே படித்தவர்கள் ; ஏனையோர் மழைக்குக்கூடப் பள்ளிக்கூடத்தில் ஒண்டாதவர்கள். கோயில் திருவிழாக்களில் அவர்கள் நாடகங்களை நடத்துவார்கள். வீட்டுத் திண்ணைதான் நாடக அரங்கு. அரிக்கன் விளக்கு ஒளியில் திரை எதுவும் இல்லாமல் புராணக் கதைகளை நடித்துக் காட்டுவார் கள். இவற்றில் நடிப்பவர்கள் நாடக ஆசிரியர் ஒருவரிடம் பயிற்சி பெற்று, பல நாட்களுக்கு ஒத்திகை பார்ப்பார்கள். மகாபாரதத்தில் அர்ச்சுனன் தவத்தை நடிப்பதில் அவர்கள் ஆர்வம் மிகுந்து காணப் படுகின்றனர். அர்ச்சுனனின் தவத்தைக் கலைக்கும் பெண்ணின் அழகை உறுப்பு உறுப்பாக, கொச்சை மொழியில் அடைமொழிக ளுடன் விரிவாக வர்ணிப்பது வழக்கம். குறிப்பாக, பெண்கள் இதை மிகவும் கூர்ந்து கேட்டு மகிழ்வார்கள்.

### மோடி

மோடி ஆட்டத்தில் ஒருவன், மணல் மேட்டுக்குள் ஒரு முட்டையை மறைத்து வைத்து ஏழு வரிகளை வரைவான். அந்த முட்டையைக் கண்டு பிடிக்க முயலுபவனுக்கு மோடி என்று பெயர். சிலர் அவனை அடித்துத் தடுப்பார்கள். ஒரு கோமாளி தலையிட்டு, இனிய பாடல்கள் பாடியதும் சிரிப்பும் விளையாட்டுமான சூழ்நிலை உருவாகிவிடும்.

## ஏனைய பொழுதுபோக்குகள்

### பச்சை குத்துதல்

பச்சை குத்துவதில் குறத்திகள் வல்லவர்களாக உள்ளனர். கடவுளர், தேள், பாம்பு முதலிய எந்த உருவத்தையும் ஒருவருடைய கை, நெற்றி, முழங்கைக்கு மேல் உள்ள பகுதி முதலியவற்றில் வரைந்து கொடுப்பார்கள். நாம் விரும்பும் பெயரையும் உடற்பகுதிகளில் பொறித்துத் தருவார்கள்.

அகத்திக்கீரை இலைகளை அம்மியில் வைத்து அறைத்து, மென்மையான துணியில் பரப்பி, திரிபோல அதைச் சுற்றி அந்தத் திரியை விளக்கின் நெருப்பில் ஏற்றுவார்கள். இந்த நெருப்பிலிருந்து வரும் சத்துடன் புகையிலைச் சாம்பலையும் செங்கொட்டைப் பாலையும் சேர்ப்பார்கள். உரிய நிறம் பெற, சில சாயங்களைச் சேர்ப்பார்கள்.

குத்துவதற்குச் சிறிய தையல் ஊசிகளை உபயோகிப்பார்கள். வரைபடங்களை ஏராளமாக வைத்திருப்பார்கள். அவற்றிலிருந்து ஒரு படத்தைத் தேர்ந்தெடுத்து, முதலில் உடல்பகுதியில் மேற்போக்காகக் கோடுகள் போடுவார்கள். மைக்குள் ஊசியை அழுத்தி எடுத்து, ஊசியால் அந்தக் கோடுகளை வரைவார்கள். பிறகு உடற்பகுதியை குளிர்ந்த நீரில் நன்கு கழுவி மை தடவுவார்கள். வலி நிங்குவதற்காக, தேங்காய் எண்ணெயையும் தடவுவார்கள். மஞ்சள்தூள் தடவினால் நிறம் பிரகாசமாகத் தெரியும்; வீக்கமும் ஏற்படாது.

### கோலம்

தமிழ்நாட்டில் கோலம் என்ற கலை பெரும்புகழ் பெற்றிருக்கிறது. பெருவிரலுக்கும் அதற்கு அடுத்த விரலுக்கும் இடையே கோல மா அல்லது கோலப் பொடியை வைத்துக்கொண்டு பல கோணங்களிலும் வட்டங்களிலும் மலர் வகைகளை வரைவதில் சின்னஞ் சிறு

வயதிலேயே பெண் குழந்தைகளுக்குப் பயிற்சி கொடுக்கப்படுகிறது. ஒவ்வொரு நாளும் காலையில் எழுந்ததும் வீட்டு வாயிலின் முன்பாகத் தெருவில் கோலம் போடுவது வழக்கம். திருவிழா நாட்களில் தெரு வெல்லாம் கோல வரைபடங்களாகக் காட்சி தரும்.

கோலம் போடும் கலையைத் தாயிடமிருந்து மகளும் அவளிடமிருந்து அவளுடைய மகளுமாக, தலைமுறை தலைமுறையாகப் பயிலுகிறார்கள். ஐந்து வயதாக இருக்கும்போது சிறுமிகளுக்கு இதில் ஆர்வம் ஏற்பட்டு, 13-14 வயது வந்து பருவம் அடையும்போது இந்தக் கலையில் அவர்கள் வல்லவர்களாகத் தேர்ச்சி பெற்று விடுகின்றனர். பல வகையான மலர்கள் மட்டுமின்றி, சங்குகள், முக்கோண அல்லது நாற்கோணச் சித்திரங்கள், மயில், மீன், கோயில்களில் தீபம் காட்ட உபயோகிக்கப்படும் விளக்கு வகைகள், மாம்பழம் மற்றும் பெண்பாற் தெய்வங்களின் உருவங்களையெல்லாம் அவர்களுடைய மென்மை யான விரல்களால், மண் தரையில் நளினமாக வரைந்து விடுவார்கள்.

நாள்தோறும் சாணிபோட்டு மெழுகுவதால், அந்தத் தரை சிமிண்டு போடப்பெற்ற தளத்தைப் போன்ற மென்மையையும் தன்மையையும் பெற்றுவிடும்.

குறிப்பாக, வெள்ளிக்கிழமையன்று கட்டாயம் கோலம் போட வேண்டும் என்பது நியதி. திருவிழா நாட்களில் தெருக்களின் கோலங்கள் கோலாகலக் காட்சி தரும். பெண்கள் தங்களுடைய கைத்திறமையையும் கலை ஈடுபாட்டையும் மண் தரையில் மட்டுந் தானா காட்டுகிறார்கள்? மண் பானைகள், வெண்கலக் குடங்கள், வீட்டின் முற்றங்கள், மணமக்கள் உட்காரும் மேடைகள் ஆகியவற்றி லெல்லாம் இவர்கள்—இள நங்கையர் மட்டுமின்றி வயது வந்த பெரிய பெண்டிரும்—தங்கள் கைவரிசையைக் காட்டத் தவறு வதில்லை. திருமணம், திருவிழா முதலிய நிகழ்ச்சிகளுக்கெல்லாம் கோலம் மேலும் மங்கலத்தை நல்கும். எனவே, அந்த விழாக்களில் போடப் பெறும் கோலத்தை அழிக்கவும் கூடாது, தாண்டவும் கூடாது. அங்கு கோலம் இடுவதற்கு, முகூர்த்தம் பார்ப்பது வழக்கம். அந்தக் கோலங்களை நீக்குவதற்கும் சில சடங்குகள் உண்டு.

நாள்தோறும் வீட்டு வாசலில் போடும் கோலத்திற்கு இத்தகைய விதி முறைகள் இல்லை. அந்தக் கோலத்தை மிதிப்பதிலும் தவறு இல்லை. வீட்டு வாசலில் உள்ள கோலம் கால் படாது இருந்தால், அந்த வீடு குழந்தையில்லாத வீடாகத்தான் இருக்கும்.

ஒவ்வொரு கிழமைக்கும் ஒரு வகைக் கோலம் உண்டு. ஞாயிற்றுக் கிழமைக்கு உரிய கோலம் முக்கோண வடிவமாகவும், திங்கட் கிழமைக்கு உரியது சதுர வடிவமாகவும், செவ்வாய்க்கிழமைக்கு உரியது பந்துபோன்ற பதின்மூன்று வட்டங்களினூடே செல்லும் பெரிய வட்ட வடிவமாகவும் இருக்கும். இதுபோல ஒவ்வொரு கிழமைக்கும் குறிப்பிட்ட ஓர் உருவம் உண்டு. வெளிக்கோடுகள் வெள்ளை அரிசியாலான கோல மாவில் இருக்கும். நடுக்கோடுகள் மாவகைகளிலான பல நிறப் பொடிகளைக் கொண்டும் குங்குமத்தைக் கொண்டும் வரையப்படும். ஆதி சங்கரர் படைத்த சௌந்தரிய லஹரியில், நவராத்திரி விழாவின்போது ஒவ்வொரு நாளிலும் இன்ன இன்ன கோலம் வரையவேண்டும் என்று விவரிக்கப்பட்டிருக்கிறது.

மாதங்களில் சிறந்தது மார்கழி. அந்த மாதத்தில் கோலம் போடுவது, தனிச் சிறப்பு உடையது. அந்த முப்பது நாட்களிலும் கோலத்தின்மீது சிவப்பு அல்லது வெள்ளை நிறப் பூசனிப் பூவை வைப்பது வழக்கம். இந்த மலர் கிடைப்பது அரிதாக உள்ள இடங் களில் ஒரு பூவை மட்டும் வைப்பார்கள். எளிதில் கிடைத்தால், ஐந்து பூக்கள் கோலத்தை அலங்கரிக்கும். சாணி பிடித்து அதைப் பீடமாக்கி அதனுள் பூவின் அடிப்பகுதியை ஊன்றுவது நெடுநாளைய நடைமுறை. சாணி, காசு செலவிடாமல் செய்யக்கூடிய பூப்பேழை (Flower Stand) ஆகிவிடுகிறது!

கோலம் கண்ணுக்கு அழகு. ஆனால் தமிழ் மக்கள் அதை வெறும் அலங்காரமாக மட்டும் கருதவில்லை. நம்மை வாழவைக்கின்ற பூமிக்கு நாம் நன்றி கூறுவதற்காக ஏற்பட்ட இப்பழக்கம், காலப் போக்கில் இனியதொரு கலையாக வளர்ச்சியடைந்திருக்கின்றது. எறும்புகள், பறவைகள், அணில்கள் ஆகியவற்றுக்கு உணவாகப் பயன்படட்டும் என்று எண்ணி, அரிசி மா மட்டுமே கோலப் பொடி யாகப் பயன்படுத்தப்படுவது வழக்கம்.

கோலம், அதைப் பார்ப்பவர்களை ஈர்க்கும். மனிதர்களைப் போல, தெய்வங்களையும் அது மயக்கும். வீட்டிலுள்ளவர்களுக்கு லெட்சுமி கடாட்சத்தை—தனத்தை, ஒரு நாளும் தளர்வறியா மனத்தை, தெய்வ வடிவத்தை, நல்லன எல்லாவற்றையும்—அருளும் ஆற்றல் கோலத்துக்கு உண்டு. வீடுகளில் லெட்சுமி கடாட்சம் இருந்தால், நாடும் நகரமும் செழித்துக் கொழிக்கும்.

கோலம் போடுவது எப்படி என்று வரை படங்களுடன் விளக்கும் மேற்போக்கான மலிவான சிறு நூல்கள் வெளிவந்திருக்கின்றன. சல்லடையிலுள்ளது போன்ற துவாரங்கள் உடையதும் தகரத்தா

லானதுமான சிறு கருவிகள் வைத்தும் சிலர் கோலம்போடப் பழகு கின்றனர். இவ்விருவகை ஏட்டுச் சுரைக்காய்களுடனும் போடப் பெறும் கோலங்கள் கான மயிலாடக் கண்டிருந்த வான் கோழியை நினைவூட்டும்!

கோலம் என்று தமிழ்நாட்டில் வழங்குவது மஹாராஷ்டிரத்தில் ரங்கோலி என்றும் வங்காளத்தில் அல்பனு என்றும் பெயர் பெறு கிறது. இவற்றுக்கிடையே ஒற்றுமையும் உண்டு; வேற்றுமையும் உண்டு. ரங்கோலி வண்ணக் கோலம்; அதில் கருத்துச் செறிவு மிகுதி. அல்பனுவில், கலையம்சம் முதலிடம் பெறும். வெள்ளை நிறமும் அலங்காரமும் உடையது கோலம்.

### தெருவில் கை வண்ணம்

சென்னை போன்ற நகர்களில், தெருவோரமாகப் பிச்சைக்காரர் களும் கால் முதலிய உறுப்புக்களை இழந்தவர்களும், கரித்துண்டு களைக் கொண்டும் வண்ணச் 'சாக்' கட்டிகளாலும் அழகிய படங் களை—பெரும்பாலும் இறைவன் இறைவியர் உருவங்களை—மிக அழகாக வரைந்திருப்பதைக் காணலாம். மிக விரைவில் அவர்கள் இவற்றை வரைவதும், அளவுகள் முதலியன பொருத்தமாக இருப் பதும் கூர்ந்து கவனிக்கத்தக்கன. வீதியில் செல்லுவோர் சற்று நின்று, இப்படங்களைப் பார்த்து மகிழ்ந்து தங்கள் பாராட்டுதலை, அன்பளிப்பு வாயிலாகத் தெரிவிக்கிறுர்கள்.

### தமிழ்நாடு இயல்-இசை-நாடக மன்றம்

வாய்ப்பாட்டு, வயலின், மிருதங்கம், வீணை, புல்லாங்குழல், நாதசுவரம், தவில், ஹரிகதா காலட்சேபம், பரதநாட்டியம், திரைப் படத் தயாரிப்பு, திரைப்பட இசை அமைப்பு, தொழில்முறை அல்லாத நாடக நடிகர், வில்லுப்பாட்டுக் கலைஞர், தெருக்கூத்துக் கலைஞர் ஆகியோரைத் தமிழ்நாடு இயல்—இசை—நாடக மன்றம் ஆண்டு தோறும் தேர்ந்தெடுத்துப் பாராட்டு விழா நடத்தி, கலைமாமணி என்ற பட்டம் வழங்கி அவர்களைக் கௌரவப்படுத்தி வருகிறது. திறமைமிக்க புலவர்களின் கலை நிகழ்ச்சிகளை நடத்தி மக்களுக்கு அறிமுகப்படுத்தியும், கலைஞர்களுக்கு மானியம் கொடுத்தும் வரு கிறது. கலைஞர்கள் வெளியூர் செல்ல, இரயில் பயணச் சலுகைகளை யும் இந்த மன்றம் ஏற்பாடு செய்கிறது. உலகம் வியக்கும் உயர்தனிச் செம்மையுடன் விளங்கும் நம் முத்தமிழ்க் கலைகள், நமது பரம்பரைச் செல்வங்கள். இவற்றைப் போற்றி வளர்க்க இருபது ஆண்டுகளாகத்

தமிழ்நாடு இயல்—இசை—நாடக மன்றம் செய்து வரும் பணி நம் பாராட்டுக்கும் நன்றிக்கும் உரியது.

## நாட்டுப்புற விளையாட்டுக்கள்

தமிழ்நாட்டுச் சிற்றூர்களில் நீண்ட நெடுங்காலமாக நடைபெற்று வரும் விளையாட்டுக்களை, இப்போது பார்ப்போம்.

**சிலம்பம்**

சிலம்பம் பழந்தமிழர் வீரத்துக்கு எடுத்துக்காட்டாகும். உடற் பயிற்சியாக இருப்பதோடு, சிலம்பம் பழகியவர்கள் தங்களைப் பிறர் தாக்கும்போது பாதுகாத்துக்கொள்ள அது உதவுகிறது. சிலம்பம் ஆடுபவர் ஒவ்வொருவரும் மூன்று மீட்டர் நீளமுள்ள கனமான மூங்கிலை ஒருவர்மீது பலவாறாக வீசுவார்கள். தன்னைக் காத்துக் கொள்பவன், குச்சியினால் அடிபடாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். சிலம்பம் என்பது கம்புகளைச் சுழலச் செய்வது மட்டும் அன்று. நீண்ட பயிற்சியும், சுறுசுறுப்பாகக் காலை வைத்துக்கொள்ள வும், குறிப்பிட்ட இடங்களில் குறித்த வினாடியில் முறைப்படி பல வாறாக அந்தக் கம்பைப் புகுத்தும் அனுபவமும் தெரிந்திருக்க வேண்டும். காட்சியாகவும் போட்டியாகவும் பாதுகாப்புப் பயிற்சி யாகவும் சிலம்பம் புகழ்பெற்றிருக்கிறது.

**சடுகுடு**

சடுகுடு, இரண்டு குழுக்களாக இருந்து ஆடும் விளையாட்டு. மூச்சு விடாமல் மூக்கைப் பிடித்துக் கொண்டு ஓர் ஆட்டக்காரன் தொடர்ந்து ஏதாவது சொல்லிக்கொண்டவாறே கோட்டைத் தாண்டி எதிரியின் எல்லைக்குள் செல்லுவான். எதிர்க்குழுவில் யாரையாவது தொட்டுவிட்டுப் பிடிபடாமல் தன் எல்லைக்குள் வந்துவிட்டு அது வரை மூச்சுத் தாங்கினால் (அவன் யாரைத் தொட்டானோ) அவனால் தொடப்பட்டவன் ஆட்டத்திலிருந்து வெளியேற வேண்டும். ஓர் ஆட்டக்காரன் எதிர்க் குழுவின் எல்லைக்குள் இருக்கும்போது பிடி பட்டாலும் அவனும் ஆட்டத்திலிருந்து நீக்கப்படுவான். ஏதாவது ஒரு குழுவைச் சேர்ந்த ஆட்டக்காரர் அனைவரும் நீக்கப்படும்வரை ஆட்டம் நடக்கும். இது மூச்சைக் கட்டுப்படுத்துவதற்கான போட்டியே.

### பச்சைக் குதிரை

இந்த ஆட்டத்தில் பள்ளியில் பயிலும் வயதினரான பையன்கள் மட்டுமே கலந்துகொள்ளுவார்கள். ஒரு பையன் முதலாவதாகக் குனிந்து கொடுத்து, தன் கைகள் கால்விரல்களைத் தொடுமாறு நிற்பான். அவனுக்குக் 'குதிரை' என்று பெயர். மற்ற பையன்கள் அவனுக்குப் பின்பக்கமாக இருந்து ஓடிவந்து, கால்களை அகலமாக வைத்துக்கொண்டு கைகளை அவன் முதுகில் அழுத்தி அவனைத் தாண்டிக் குதிப்பார்கள். குதிரையாக இருக்கும் பையன் சிறிது சிறிதாக நிமிர்ந்து தன் உயரத்தைக் கூடுதலாக்குவான். அவ்வாறு தோற்றுப்போகிறவர்கள் உடனே குதிரையாக மாறி ஏற்கெனவே குதிரையாக இருந்தவன் விடுவிக்கப்படுவான்.

இதில் சில மாறுதல்கள் செய்து வேறு ஒருவகை விளையாட்டும் ஆடுவார்கள். ஒருவன் இன்னொருவனைச் சுமந்துகொண்டே ஒரு குழிக்குச் செல்லுவான். குதிரை மீதிருப்பவன் ஒரு பந்தை, குழிக்குள் போடவேண்டும். போடத் தவறினால், அவன் இறங்கிக் குதிரை ஆகி ஏற்கெனவே குதிரையாக இருந்தவனைச் சுமப்பான்.

### கிளித்தட்டு

இந்த விளையாட்டை ஒரு வகையான கிரிக்கட் ஆட்டம் என்று சொல்லலாம். இதற்கு வேண்டிய கருவிகள் இரண்டு மட்டைகள், ஒரு வட்டக் கம்பு, இரு முனைகளிலும் சீவிவிடப்பட்டதும் நான்கு அங்குல நீளமுள்ளதுமான ஒரு முனை, ஆகியவை.

முனையைக் கீழேவைத்து, நீளமான குச்சியால் அதை உயர்த்தி, பிறகு நீண்டதூரம் செல்லும்படி அதை அடிப்பார்கள். அதை யாராவது பிடித்துவிட்டால், அடித்தவன் ஆட்டத்திலிருந்து விடை பெறவேண்டும். முனை, கண்களில் படக்கூடிய அபாயம் இருப்பது இந்த ஆட்டத்திலுள்ள குறைபாடு.

### நிலாப்பூச்சி

இரண்டு குழுக்கள் ஒருவரை ஒருவர் பிடிக்கும் ஆட்டம் இது. ஒரு குழுவினர் நிலவின் ஒளிபடும் இடத்தில் மட்டும்தான் நுழையலாம், மற்றொரு குழுவினர் நிலவின் நிழல் படும் இடத்தில்தான் நுழைய லாம், என்ற வரையறைகளுடன் இந்த ஆட்டத்தை ஆடுவார்கள்.

**நொண்டி விளையாடுவது**

இரண்டு குழுக்களாக இருந்து இந்த ஆட்டத்தைக் கிராமங்களில் சிறுவர்கள் ஆடுவார்கள். ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள் ஒரு குழுவினர் இருப்பார்கள். மாற்றுக் குழுவைச் சேர்ந்தவன் நொண்டியடித்துச் சென்று அவர்களைத் தொடுவான். இரு கால்களையும் கீழே ஊன்றிவிட்டால், அவன் ஆட்டத்திலிருந்து வெளியேற்றப்படுவான். அல்லது ஓய்வுபெற, அவன் ஓடாமல் ஒற்றைக்காலில் நின்றுகொண்டே இருக்கக்கூடும். அவ்வாறு நின்றால் அவன் கால்களின் மீது மண்ணை வாரி இறைத்து எதிர்க்கட்சியினர் அவனை 'அவுட்' ஆக்க முயலுவர்.

**ஏனைய விளையாட்டுக்கள்**

வயல்களில் வேளாண்மை வேலை இல்லாதபோது பொழுதுபோக்க, நாட்டுப்புற மக்கள் ஆடும் விளையாட்டுக்கள் இன்னும் எவ்வளவோ உண்டு. தாயம், பல்லாங்குழி என்பன ஒரு வகையில் 'செஸ்' ஆட்டம் போன்றவை. கண்ணும்பூச்சி, திரி பொம்மலை, ஒத்தையா ரெட்டையா, கிட்டி, பட்டம் விடுதல், மழைக்காலத்தில் காகிதப்படகு விடுதல், சீனடி (ஒருவகை மற்போர்), நரம்பைக் கட்டுப்படுத்தும் வர்மனியம் என்ற போட்டி, என்பவை குறிப்பிடத்தக்கவை.

**விளையாட்டுக்களில் நாட்டுப்பாடல்கள்**

சில விளையாட்டுக்களில் நாட்டுப்பாடலும் இடம்பெறும். குழந்தைகள் சூழ, ஒருவர் 'கொம்பாறை கொம்பாறை' (.........க்குக் கொம்புகள் உண்டு) என்று சொல்லுவார். பிறகு குழந்தைகளும் அதைத் திருப்பிச் சொல்லுவார்கள்.

வயதானவர் சொல்லுவார் 'மாடும் கொம்பாறை' என்று. குழந்தைகளும் இவ்வாறே சொல்லுவர். பிறகு அவர் 'ஆடும் கொம்பாறை' என்பார். குழந்தைகள் திரும்பச் சொல்லுவார்கள். இப்படி அவர் சொல்லிக்கொண்டே போகும்போது குழந்தைகளின் அறிவுக்கூர்மையைச் சோதிக்க, திடீர் என்று கொம்பு இல்லாத உயிரினங்களைச் சொல்லுவார். யானையும் கொம்பாறை, மனிதனும் கொம்பாறை என்பார். குழந்தைகள் விழிப்பாக இருந்து, 'யானைக்கு எங்கே கொம்பு இருக்கிறது?' என்று கேட்கவேண்டும். கேட்கத் தவறி, யானையும் கொம்பாறை என்று சொல்லும் குழந்தைகள் போட்டியிலிருந்து விலக்கப்பெறுவார்கள்.

## கிராமியக் கலைகள்

தொழில் முறையில் கிராமியக் கலைஞர்களுக்கு வாய்ப்பும் ஊக்கமும் தரும் பொருள்கள் காஞ்சிபுரம் பட்டுப் புடவைகள். இவற்றை உற்பத்தி செய்யும் பட்டு நூல்காரர்களும் முதலியார்களும் தங்கள் கலைத்திறமையையும் பூ வகைகள் டிசைன்கள் வரைகின்ற ஆற்றலையும் இவற்றில் காட்டுகிறார்கள்.

மூலப்பொருள்களைத் தேர்ந்தெடுப்பது முதல் விற்பனைக்கட்டம் வரை, ஒவ்வொரு நிலையிலும் கைத்திறனைக் காட்டுவதற்கு இந்தத் தொழில், வாய்ப்புத் தருகிறது. எனவே ஒரு சேலையைப்போல மற்றொரு சேலை இருப்பதில்லை.

பொதுவாகத் தமிழ்நாட்டு மக்கள் தாங்கள் உற்பத்தி செய்யும் கைவினைப் பொருள்களைக் குறித்துப் பெருமைப்படுகிறார்கள். பொம்மைகள், வெண்கல விக்கிரக வார்ப்பு, தனி அழகுவாய்ந்த தஞ்சாவூர்த் தாம்பாளங்களில் நகாசுவேலை செய்து நடுவே பொன்னும் வெள்ளியும் ஆன தகடு பதித்தல், அந்தத் தாம்பாளங்களில் வடிவங்களை வெள்ளி-செம்பு-பொன்-மூன்றையும் கலந்து பொறித்தல், அலங்காரமான விளக்கு வகைகள் செய்தல், கோயில்களில் பயன்படும் குடை, ஆலவட்டம், சுருட்டி, தொங்கல் முதலியன செய்தல், கோவை மாவட்டம் பவானி—தளவாய்ப்பேட்டைப் பகுதிகளில் கண்கவரும் வண்டி ஜமக்காளங்கள், மெத்தை ஜமக்காளங்கள், ஹால் விரிப்புக்கள், பந்திப்பாய் ஜமக்காளங்கள் நெய்தல் யாவும் பாராட்டத்தக்க கலைகள். இவற்றை உருவாக்கிய ஓர் இனத்தார் தங்கள் திறமையில் பெருமைகொள்வது நியாயமானது, இயல்பானது, இயற்கையானது.

இவ்வகையில் குறிப்பிடத்தக்க மற்றொரு கலை செட்டி நாட்டுக் கொத்தனார்களின் சுவர் பூச்சுக்கலை. முட்டைகளின் வெள்ளைத் தாதுவைக் கரைத்துச் சுவர்களுக்கு வெளுப்பு நிறம் உண்டாக்கித் தேய்ப்பார்கள். இதனால் சுவர், கண்ணாடிபோல, நம் முகத்தைக் காட்டுகிறது. சுவர்களில் வெடிப்பு ஏற்படுவதும் இல்லை. வெள்ளையடிக்க வேண்டிய தேவையும் கிடையாது.

பழனியிலுள்ள கல் தச்சர்கள், கல் திரிகைகள் செய்வதில் சிறந்து விளங்குகின்றனர். இராமநாதபுரம் நகரையடுத்த சிற்றூர்களில் பனையோலைகளைக் கொண்டு, விசிறிகள், கொட்டான்கள், சுளகுகள், இராமேசுவரம் கூடைகள், ஓலைப் பெட்டிகள் முதலியன பல

வண்ணங்களில் மிடையப்படுகின்றன. தேவகோட்டை முதலிய செட்டி நாட்டுப் பகுதிகளில் குடிசைத் தொழிலாக வளர்ந்திருக்கும் தடுக்கு, தோல் கைப்பிடிகளுடன் கூடிய ஓலைப் பெட்டிகள், சிவப்பு ஓலைக் கொட்டான் முதலியன மிடைதலும் குறிப்பிடத்தக்கது. வேளாண்மைத் தொழிலில் பயன்படும் வட்டக் கூடைகளும் பெரிய தட்டுக்களும் 'மண்டபம் பகுதியில் மிடையப்படுகின்றன. திருக்குற்ருலமும் ஓலைப் பெட்டி, கூடை வகைகளுக்கும் புகழ் பெற்றது.

### மண்பாண்டக் கலை

தமிழ்நாட்டு மண்பாண்டக் கலையைப் பற்றியும் நாட்டுப்பாடல் களும் கதைகளும் நிலவுகின்றன. குறிப்பாக மானுமதுரை (இராம நாதபுர மாவட்டம்) யும் கரிகிரி (வட ஆர்க்காடு மாவட்டம்) யும் இந்த வகையில் புகழ்பெற்றுள்ளன. இவ்வூர்களில் செய்யப்படும் பொருள்கள் வெளிநாட்டுப் பொருட்காட்சிகளிலும் பாராட்டப்பெற்றி ருக்கின்றன. விருத்தாசலத்தில் பீங்கான் மண்பாண்ட வேலைப் பயிற்சி நிலையம் உள்ளது.

குலாலர் கைத்திறனுக்குச் சான்ருக, அய்யனர் உருவங்களும், அய்யனர் கோயில்களில் வைக்கப்பட்டிருக்கும் புரவிகளும் உள்ளன.

கலைஞர்களின் பாராட்டைப் பெற்று, கரிகிரி மண்பாண்டப் பொருள் கள் கவின்கலைப் பொருள் சேகரிப்பாளர்களால் நல்ல விலை கொடுத்து வாங்கப்படுகின்றன. கலையழகை ஊட்டி, கைத்திறனைக் காட்டிவரும் பரம்பரை மரபுக்கேற்ப, சிகரெட் சாம்பல் கிண்ணம், குடிநீர்க் குவளை, குளிர்பானம் அருந்தும் கோப்பை முதலியன நேர்த்தியாகச் செய்யப் படுகின்றன. வண்ண நிறங்கள், இதற்குமுன் கண்டிராத வடிவம், உருவ அமைப்பு யாவும் சேர்ந்து இப்பொருள்களை அரிய கலைச் செல்வங்களாக ஆக்கிவிட்டன.

ஒய்யாரமாகக் கண்ணைப் பறிக்கும் சோடனைப் பொருள்கள் முதல் மென்மையோடு நளினமும் கூடிய அன்ருட உபயோகப்பொருள்கள் வரை உள்ளன. பழமையான பரம்பரை வடிவ அமைப்பும் சித்திர வேலைப்பாடும் கொண்டவை ஒருபுறம்; மற்ருெருபுறம், நவீனகால நாசூக்கான அமைப்பும் வேலைப்பாடும் கொண்ட டீ செட்டுகள், குப்பிகள், மலர்ச்செண்டு வைக்க உதவும் சாடிகள், சுவர் அலங்கார மாக மாட்டும் பட்டயங்கள், மற்றும் எத்தனையோ அழகுப் பொருள் கள்—இவை நயமாக, அலங்காரமாக, கலைக் கண்ணோட்டத்துடன் களிமண்ணில் செய்யப்படுகின்றன.

### காகிதப் பொம்மைகள்

குலாலர் செய்யும் புரவிகள் முதலியவற்றை வெளிநாடுகளுக்கு அனுப்புவது எளிதன்று. பொருளின் விலையைப்போலப் பலமடங்கு செலவுசெய்து பாக்கிங் பண்ணவேண்டும். அப்படிச் செய்துங்கூட அவை, வழியில் உடைந்து போகக்கூடும். எனவே, அதே பொருள் களைக் காகிதத்தில் செய்யும் கலை, வளர்ச்சி பெற்றிருக்கிறது. குலாலர் கடைப்பிடிக்கும் அதே முறைதான் இதிலும் பின்பற்றப்படுகிறது. காகிதத்தைப் பயன்படுத்தும்போது பொம்மைகள் இன்னும் அழகாக உள்ளன. வேண்டிய வண்ணத்தைப் பூசுவது காகிதத்தில் எளி தாக இருக்கிறது. பார்ப்பதற்கு கல் உருவம் அல்லது ஏதோ ஓர் உலோகத்தில் செய்ததுபோன்ற தோற்றத்தையும் காகிதப் பொம்மை கள் கொடுக்கின்றன. கனமில்லாமல் இருப்பதால் இவற்றைப் பெட்டிகளில் அடைப்பதும் விற்பனைக்காக வெளியூர்களுக்குக் கொண்டுபோவதும் எளிது.

காகிதத்தில் செய்த அல்சேஷன் நாய்களை உயிருள்ள நாய்க ளாகவே பல்லாயிரம் மக்கள் கருதுகின்றனர். அவ்வளவு திறமை யாக அவை செய்யப்பட்டிருக்கின்றன. நாயின் வண்ணம், நீட்டிக் கொண்டிருக்கும் நாக்கின் அமைப்பு, கண்விழிகள், ஆகிய ஒவ்வொரு உறுப்பும் வியத்தகு முறையில் உருவாக்கப்பட்டிருக்கின்றது. நடன மாடும் பெண், கிருஷ்ண பகவானின் கீதை உபதேசக் காட்சி, மீனுட்சியம்மன் திருமணம் ஆகியவையும் இவ்வாறே மிகக் கவர்ச்சி யான முறையில் உயிர்த் துடிப்புடன் காகிதப் பொம்மைகளாகச் செய்யப்பட்டிருக்கின்றன

சுருங்கச் சொன்னுல், களிமண்ணைவிடச் சிறப்பாகவும் அழகாகவும் எந்த உருவத்தையும் செய்வதற்கு ஏற்ற கருவி காகிதம் என்பது காகிதப் பொம்மைக் கலை வளர்ச்சியால் உறுதிப்பட்டுவிட்டது.

### மரப் பொம்மைகள்

இந்நாளில் செய்யப்படும் மரப்பொம்மை வகைகள் சொல்லில் அடங்கா. அவற்றைப் பட்டியல் போடவும் இயலாது. அந்த அளவுக்குக் கடைகளில் மரப்பொம்மைகள் காணப்படுகின்றன. கடைசல் வேலையில் கைவந்த கலைஞர்கள் திருநெல்வேலி மாவட்டம் அம்பாசமுத்திரத்தில் உள்ளனர். அவர்கள், குழந்தைகள் விளையாடு வதற்கு உதவும் மரச் செப்புகளை சிறு தொழிலாகச் செய்கின்றுர்கள். இத்தொழிற்சாலைகள் மின்சாரத்தால் இயங்குகின்றன. ஸ்பிரிங்

முதலியன சேர்க்கப்பட்டு, இவை உயிருள்ள பொம்மைகளாகக் காட்சி தருகின்றன. குழந்தைகளின் பொது அறிவு ஈடுபாட்டை வளர்க்கும் பொம்மைகளும் கலையார்வத்தைத் தூண்டிவிடும் பொம்மைகளும் செய்யப்படுகின்றன. ஆட்டிவிட்டால் ஆடுகின்ற தஞ்சாவூர்ப் பொம்மைகளும் உருட்டி விளையாடுகிற தஞ்சாவூர்ப் பொம்மைகளும் உண்டு.

இவ்வாறே காகிதத்திலும் அட்டையிலும் பொம்மை செய்து, பொம்மைக்குத் துணியால் உடை தைத்து, பிறகு கண்ணாடிப் பெட்டியில் வைத்து விற்கும் கலையும் வளர்ச்சி பெற்றிருக்கின்றது.

## மர வேலைப்பாடு

மரத்தை அழகுபடவும் விரும்பிய வகையிலும் செதுக்குவது தொன்று தொட்ட ஒரு கலையாகத் தமிழ்நாட்டில் வளர்ந்துவந்திருக்கிறது. இதில் தமிழ்த் தச்சர்கள் அடைந்துள்ள நிலையை வானுற உயர்ந்த கோயில் கதவுகளிலும், அந்தக் கதவுகள், அவற்றின் மீதுள்ள நிலைகள் மற்றும் அரண்மனைகளிலும் செட்டிநாட்டு மாளிகைகளிலும் அறியலாம்.

இன்னும் எவ்வளவோ கலைகள் உள்ளன. பீங்கான் துண்டுகளில் வஜ்ரம் வைத்துச் சுக்கான் பிடித்து ரேக் போட்டு வண்ணம் தீட்டுவது, தந்தத்தில் பல்லக்கு செய்வது, அணி ஆபரணங்கள் செய்வது, முன்னக் கச்சி வேலை செய்வது, கோயில் வாகனம் செய்வது, கொட்டகை—மணப்பந்தல் முதலியவற்றை அழகுற அமைக்கும் ஒப்பனைவேலை, நெல் மணிகளால் மாலைகள் செய்தல் முதலியன இவற்றில் சில.

## நெட்டி

நெரிநெட்டி, கல்நெட்டி, மரநெட்டி என்று பல வகையான நீர்ப் பூண்டுகள் உள்ளன. இவற்றுள் வெண்மையும் கனமில்லாத் தன்மையும் உடையன வாகவும், கிளைகளுள்ள சிறிய மரங்களைப் போன்று அமைந்துள்ள குளங்களில் வளரும் பூண்டுகளுக்கே நெட்டி என்ற பெயர் சிறப்பாக ஏற்பட்டது.

சித்திரவேலைக்கும் பொம்மை செய்யவும் நெட்டி பயன்படுகிறது. தலைப்பாகை, தொப்பி ஆகியவற்றை அணிபவரின் உருவம் பெரியதாகத் தெரியவும், அதே நேரத்தில் தலைப்பாகை கனமில்லாமல் இருக்கவும், அதில் நெட்டி பயன்படுத்தப்படுகிறது. ‘ஸ்பாஞ்சு’ போல தண்ணீரை உறிஞ்சும் ஆற்றல் நெட்டிக்கு உண்டு.

கோயில்கள், கட்டடங்கள் ஆகியவற்றின் அமைப்புப் பொம்மைகள் நெட்டியில் அழகாகச் செய்யப்படுகின்றன. நெட்டிப் பொருள்கள் செய்யும் கலை தஞ்சை மாவட்டத்தில் திருத்தருப் பூண்டி வட்டத்தில் திருத்தமுடன் நடைபெறுகிறது.

**யானைக்கால் மேசைகள்**

யானையின் கால்களைப் பயன்படுத்தி மேசைகள் செய்யும் வேலை தமிழ்நாட்டில் சிறப்பாக மதுரைப் பகுதியில் நல்ல முறையில் வளர்ச்சியடைந்திருக்கிறது. இதை வெளிநாட்டினரும் விரும்பி வாங்குகிறார்கள்.

**பத்தமடைப் பாய்**

பாய் பின்னும் தொழில் பல தலைமுறைகளாக நடைபெற்று வருகிறது. திருநெல்வேலி மாவட்டத்தில் பத்தமடையில் நெசவாகும் உயர்ரகப் பாய் உலகெங்கும் புகழ்பெற்றிருக்கிறது. பொருநை யாற்றில் வளரும் கோரைப் புற்களைக் கொண்டு இவை நெய்யப் படுகின்றன. அறுக்கப்பட்ட கோரப் புற்கள் 25 நாட்கள் வெய்யிலில் உலர்த்தப்பெற்றுப் பொன்னிறம் பெறுகின்றன. பின்னர் இவை பொருநையில்—ஓடுகின்ற நீரில்—ஒரு வாரம் வரை நனைய வைக்கப் படுகின்றன. அவற்றினுள் இருக்கும் கழிவுநார்கள், நீக்கப்பட்டு, மேல்தோல்கள் பட்டுப்போன்ற நுண்ணிய இழைகளாக, நீளத்தில் கிழிக்கப்படுகின்றன. இவ்விழைகளால் நெய்யப்பெறும் பாய்கள் அவற்றைப் பயன்படுத்துவோர் உடலுக்குக் குளிர்ச்சியூட்டுவதோடு, மூலம், நீரழிவு, சொறிபோன்ற வெப்ப நோய்களைப் போக்கும் ஆற்றலை யும் பெற்றுள்ளன. பாவையர்கையாலேயே நெய்யப்படுவதால் ஒரு பாயைப் பின்ன ஒரு மாதம்கூட ஆகிறது. மடித்துச் சட்டைப் பைக்குள் வைத்துக்கொள்ளும் அளவுக்கு மென்மையான பாய்களும், பணப்பை, தலையணை, மேசை விரிப்பு முதலியனவும், பத்தமடைப் பாய் நெசவாளர் கூட்டுறவுச் சங்கத்தாரால் செய்யப்படுகின்றன.

**உலோகப் பொருள்கள்**

குத்துவிளக்கு முதல் நடராசர் திருவுருவம்வரை எத்தனையோ பொருள்களைத் தமிழ்நாட்டுக் கலைஞர்கள் பல்வேறு உலோகங்களில் செய்கின்றனர். கோயில்களில் தீப ஆராதனைக்குப் பயன்படுத்தப் படும் விளக்கு வகைகளும் பாவை விளக்கு வகைகளும் ஏராளம்.

வெண்கல வார்ப்புக்கலையை, தமிழ்நாட்டின் தனிச் சொத்து என்று சொல்லலாம். எந்த உருவம் வெண்கலத்தில் உருவாக்கப் படவேண்டுமோ அந்த உருவம் முதலில் மெழுகில் செய்யப்படும். மெழுகாலான உருவத்தின் மீது, களிமண் ஒட்டப்படுகிறது. தேவையான சில இடங்களில் கம்பிகளைப் பின்னிய பிறகே களிமண் பூசப்படுகிறது. இக்களிமண் நன்ருகக் காய்ந்த பிறகு மெழுகு உருக்கி எடுக்கப்படுகிறது. மெழுகு எடுக்கப்பட்ட இடைவெளியில் உருக்கப் பட்ட உலோகம் வார்க்கப்படுகிறது. உலோகம், நன்கு இறுகிக் காய்ந்த பிறகு, களிமண்ணை உடைத்துவிடுவார்கள். பின்னர் கூர்மையான, உளிபோன்ற, பல கருவிகளால், சிற்பி இவ்வுருவங் களில் அலங்கார வேலைப்பாடு செய்கிருன். ஓர் உருவம் நன்கு அமையப் பல நாட்கள்—வாரங்கள்—மாதங்கள் கூட ஆகும். இறைப்பற்ருலும் சிற்ப சாஸ்திரப் புலமையாலும் தொழில் அனுபவத் தாலும் சிற்பி இறை உருவங்களைத் தன் அகக் கண்களால் காணு கிருன். பின்னர் அதற்கு, திடமான உருவம் கொடுக்கிருன்.

கோபுரக் கட்டிடக் கலையும் கல்லில் விக்கிரகங்களைச் செய்யும் கலையும் இவ்வாறே புகழ்பெற்றவை.

எல்லாவகைக் கலைகளிலும், அறுபடாத ஒரு மரபுத் தொடர்ச்சி யுடன், தமிழ்நாடு முன்னேற்றம் அடைந்து வருகிறது. வாழையடி வாழையாக வளர்ந்து வரும் இந்தக் கலைகளுக்கு மென்மேலும் ஆதரவு தருவது தமிழ் மக்களின் கடமை ஆகும். இந்தக் கலைப் பொருள்களுக்கு விளம்பரம் தரவும், இவற்றை விற்பனை செய்யவும், மகாத்மா காந்தியின் கொள்கைகளின்படி உருவான காதி கிராம உத்யோக் பவன் போன்ற தொழில் அமைப்புக்களும், தமிழ்நாடு அரசாங்கத்தின் நிறுவனங்களும், இந்திய அரசாங்கத்தின் சுற்றுலாத் துறையினரும் செய்துவரும் முயற்சிகள் போற்றுதற்கு உரியன.

## பிற்சேர்க்கை

## வாய்மொழி இலக்கியத்திலிருந்து சில மேற்கோள்கள்

**பாடல்கள்**

*(அ)* **சந்தைப்பாட்டு :** இது ஒரு வேடிக்கைப்பாட்டு. ஒரு காசு மட்டும் வைத்திருந்தாளாம் ஒருத்தி. அவள் சந்தைக்குப் போய் எவ்வளவோ பொருள்கள் வாங்கினாளாம். அதன் பிறகும் அவளிடம் மீதம் அரைக்காசு இருந்ததாம்!

ஒரு காசு கொண்டு கிட்டு
கண்ணம்மா கடைக்குப் போனாளாம்
அண்டாப் பானை எடுத்தாளாம்
குண்டாச் சட்டி எடுத்தாளாம்
சின்ன வட்டில் எடுத்தாளாம்
சிப்பிலித் தட்டும் எடுத்தாளாம்
எல்லாம் கூட்டிக் கணக்குப் பாக்க
அரைக்காசு மிச்ச மிருக்குது.

*(ஆ)* **மாப்பிள்ளை குலவை :** திருமணங்களில் மாப்பிள்ளையை கிராமப் பெண்கள் வரவேற்கும் சடங்கு இது. இச்சடங்கில், மதம் பிடித்த யானைகளும் மயங்கிவிடுவதாகப் பாடல் கூறுகிறது :

ஆனை என்றால் ஆனை அறுபதடி ஆனை
ஆலமரத்தில் கட்டினால் நிற்காதாம் அந்த ஆனை
அரசமரத்தில் கட்டினால் நிற்காதாம் அந்த ஆனை
புங்கமரத்தில் கட்டினால் நிற்காதாம்/அந்த ஆனை
பள்ளிவிரலைக் காட்டினால் நிக்குமாம் அந்த ஆனை
என் தோழி பெண்டுகளே எடுங்கடி குலவைகளை

*(இ)* **அறிவியல் வளர்ச்சி பற்றிய பாட்டு :**

நீலகிரி ஓரத்திலே நீட்டிவிட்டான் காந்தக் கம்பி
தொட்டாப் புடிக்குதடி துடிகாரன் போட்ட கம்பி
கோணூசிபோல கோயம்புத்தூர் ஜில்லா கம்பி
கொள்ளைப்பணம் செலவழிச்சு கொண்டுவந்தான்
செம்படிக்கே
கோணூசிபோல கோயம்புத்தூர் ஜில்லா கம்பி
பச்சத் தண்ணி கரண்டுகளாம் பறக்குதில்ல சூட்சியங்க

* * *

மலையாளம் போற தண்ணி
மதுரை வந்து சேரவேணும்
சிந்தையிலே தான் நினைந்து
திருப்பி விட்டான் கும்பனியான்
ஆடுதடி வர்க்குஷாப்பு
அரைக்குதடி சுண்ணும்பை
எடுக்குதடி மானிடங்க
எண்ணத் தொல்லையாமே
சீமை இரும்பெடுத்து
சிமிழ்போல ரோதை செய்து
ஆடாத சூட்சியத்தை
ஆட்டிவச்சான் லோகன் துரை
அக்கரைக்கும் இக்கரைக்கும்
அழகான தந்திபோட்டு
தந்திமேலே போருராம்
தரும துரை லோகனும்
காங்கிரட்டு கல்லுடைக்க கருமனுசன் ஆகாதுண்ணு
ஆகாச வேட்டெழுப்ப
அனுப்பி வச்சான் லோகன் துரை.

(ஈ) அபிமன்யுசுந்தரிமாலை : அபிமன்யு மணக்கோலத்தில் இருப்பதை விவரிக்கும் பாடல் :

பந்தலிலே வந்து நின்று பரமுடி மன்னவனும்
அரசாணி முன்பாக அபிமனும் சுந்த[illegible]
மணைமேலே உட்கார்ந்திருவான் அபிமன்யு தேவியுடன்
ஆனதொரு வேதியர்கள் அல்லியே சேஷையிட்டார்
அபிமனும் சுந்தரியும் அரசாணி சுத்திவந்தார்
அரசாணி சுத்திவந்து அரண்மனையுள் புகுந்து
பலிகைப் பாய்மீது பரிந்தே உட்கார்ந்தார்கள்

(உ) அறுவடைப்பாடல்

சம்பாவிதை போட்டு
சரியான நாத்துவிட்டு
பம்பாயி சீலைக்காரி
பக்குவமா நட்டுவாடி
மண்வெட்டி, தொழில்இட்டு

மடை திறக்கப் போறவரே
மடையைத் திறந்துவிடு
மங்கையர்கள் நாத்துநட
நாத்து அரிச்சு நான் அறியேன்
சேத்துக்குள்ளே இறங்கிக்கிட்டு
செல்ல முகம் வாடுறனே!
நட்ட நடவு இருக்க
நாலு பக்கம் தொழி கிடக்க
நாத்தரிக்கத் தெரியாம
நடக்கலாமோ ரோட்டுவழி
உழுது தொழி கலக்கி
ஒன்னு ரெண்டா நாத்தரிச்சு
பழுதுபடாமல் இங்கு
பக்குவமா நட்டு வாங்க
உள்ளான் உழுதுவர
ஊர்க்குருவி நாத்தரிக்க
நாரை பரம்படிக்க
நட்டுவாடி குட்டப்பிள்ளை

(ஊ) தாலாட்டு

ஆரடித்தார் ஏன் அழுதாய்?
அடித்தாரைச் சொல்லி அழு
கொம்புக் கனியே
கோதுபடா மாங்கனியே
வம்புக்கு அழுதாயோ
வாயெல்லாம் பால்வடிய
மாமன் அடித்தானோ
மல்லிகைப்பூச் செண்டாலே
அத்தை அடித்தாளோ
அல்லிமலர்ச் செண்டாலே
பாட்டி அடித்தாளோ
பால் ஊற்றும் கையாலே
அண்ணன் அடித்தானோ
அழுகிறதைப் பார்ப்பதற்கு
அடித்தாரைச் சொல்லி அழு
ஆக்கினைகள் பண்ணி வைப்போம்

தொட்டாரைச் சொல்லி அழு
தோல் விளங்கப் போட்டுவைப்போம்
ஆரும் அடிக்கவில்லை
ஐவிரலும் தீண்டவில்லை
தானு அழுகின்ருன்
தாயார் மடிதேடி

(எ) ஏரோப்பிளேன் பாட்டு

வைக்கப் படப்புப் போலே
வருகுதடி ஏரோப்பிளேன்
பறக்கும் சத்தம் கேட்டவுடன்
பதறுதடி என் மனசு
பத்து மைல் தூரத்திலே
பறக்குதடி ஏரோப்பிளேன்
செத்தா பிழைப்பானே—இந்த
சீமை வெள்ளைக்காரன் மகன்.

(ஏ) குழந்தைகளின் பாடல்கள்

(1) ஆனை வந்ததாம் தோப்பிலே
ஆலாப் பழுத்ததாம் மாம்பழம்
குதிரை வந்ததாம் தோப்பிலே
குலுங்கப் பழுத்ததாம் மாம்பழம்

(2) குட்டி யானைக்குக் கொம்பு முளச்சுதாம்
பட்டணம் எல்லாம் பார்க்க வாங்கோ

(3) சுண்டான் சுண்டான் விரல்
சின்னவிரல் சிங்கார விரல்
ஓம விரல் ஒன்பது விரல்
பத்துவிரல் பருப்புக்கடை பருப்புக்கடை
அண்ணனுக்கும் கொஞ்சம்
அக்காவுக்குக் கொஞ்சம்

(ஐ) வில்லுப்பாட்டு

(1) வில்லை வளைச்சு
அம்பை மாட்டினு
சொல்லும் செயலாகும்—தம்பி
சொல்லும் செயலாகும்—அண்ணே

(2) இந்திய துணைக் கண்டத்திலே
தென் கோடியுள்ள—ஆமா
தென் கோடியுள்ள
(3) சந்தனப் பொதிகை மலையில்
வளர்ந்த தமிழ்—ஆமா
வளர்ந்த தமிழ்
தந்தணதோம் என்னும் ஓசையில்
வில்லி னில் பாட—ஆமா
வில்லி னில் பாட
வந்திடுங்க வந்திடுகவே
வணக்கமுங்க—ஆமா
வணக்கமுங்க.

(ஒ) குதிரைப்பாட்டு

மருதையிலே குருதை வாங்கி
மல்லியப்பூ வாசங்கட்டி
அடிச்சானும் சின்னப்பயல்
ஆற்று மணல் தூள் பறக்க

(ஓ) மழைப்பாட்டுக்காரனின் பாடல்கள்

(1) பெய்யுமாலம்மா பெய்யுமாலோ
பேயாமழை பெய்யு மாலோ
நல்லமழை பெய்யுமாலோ
நாடுசெழிக்கப் பெய்யுமாலோ
(2) ஊசிபோல மின்னி மின்னி
ஊர் செழிக்கச் செய்யுமாலோ
காசுபோல மின்னி மின்னி
காடு செழிக்கப் பெய்யுமாலோ
பணத்தைப் போல மின்னி மின்னி
பட்டணமெல்லாம் பெய்யுமாலோ

**கதைகள்**

மதுரையில் கோயில் கொண்டிருக்கும் மீனாட்சியம்மன் பாண்டிய அரசன் மகள் என்பர். அதைப்பற்றி வழங்கும் கதை இது :

மலையத்துவஜன் என்ற பாண்டி மன்னனுக்கும் அவனுடைய மனைவியான காஞ்சனமாலை என்ற அரசிக்கும் பிறந்த குழந்தை மீனாட்சி. அவர்கள் 99 யாகங்கள் செய்தனர். 100-வது யாகமும் செய்ய ஏற்பாடுகளைத் தொடங்கினர். அப்போது, மேற்கொண்டு யாகம் செய்யும் முயற்சிகளைக் கைவிடும்படி அரசனை, இந்திரன் வேண்டினான். அரசனும் இசைந்தான். உடனே இந்திரன் அரசனுடைய எண்ணத்தை நிறைவேற்றினான். குழந்தை மீனாட்சி பிறந்தது.

**விடுகதைகள்**

(1) எல்லை இல்லாத வயலிலே
எண்ண முடியாத ஆடுகள் (வானத்தில் உள்ள நட்சத்திரங்கள்)

(2) கணக்கில்லாத பிள்ளைகளைக்
கழுத்தைச் சுற்றிச் சுமக்கும் தாய்
அந்தத் தாய் எந்தத் தாய்? (தென்னைமரம்)

(3) சின்னக் குகைக்குள்ளே சிவப்புத்துணி
அது எந்நேரமும் ஈரம் எளிதில் உலராது (நாக்கு)

(4) இங்கு உண்டு, அங்கு இல்லை
அங்கு உண்டு, இங்கு இல்லை
இங்கும் உண்டு, அங்கும் உண்டு
அங்கும் இல்லை, இங்கும் இல்லை

இதன் பொருள் கடவுள் நம்பிக்கை இல்லாமலும் சுயநலமாகவும் வாழ்பவர்களுக்கு இந்த உலகில் நிம்மதி உண்டு; மறு உலகில் நிம்மதி இல்லை. தரும சிந்தனை உடையவர்கள் இங்கு அமைதியின்றி துயரப்பட்டாலும், மேலுலகத்தில் மன அமைதி பெறுவர். செல்வமும் பிறருக்கு உதவும் பெருநோக்கமும் தாராள மனமும் உடையவர்கள் இங்கும் அங்கும் எங்கும் கவலையில்லாமல் இருப்பார்கள். கொடியவர்கள் எங்கே இருந்தாலும் கவலையில் தோய்ந்தவர்களாக இருப்பார்கள்.

(5) என் தாயோ கடல், தந்தையோ சூரியன்
என்னை விரும்பி ஏற்காத வீடு இல்லை
நான் யார்? (உப்பு)

(6) உலகுக்கு எல்லாம் ஒரு துப்பட்டி (வானம்)

(7) டாக்டர் வந்தார் ஊசி போட்டார்
பணம் வாங்காமல் போனார், அது என்ன?
(தேள்கடி)

(8) வெள்ளைக்காரனுக்கு கறுப்புத் தொப்பி (தீக்குச்சி)

(9) உருவம் இல்லாத மனிதன்
உலகமெல்லாம் சுற்றுகிறான்
அவன் யார்? (காற்று)

(10) எத்தனை பேர் ஏறினாலும்
ஓடாமல் தாங்கும் குதிரை எது? (திண்ணை)

(11) காசியிலிருந்து கல்கத்தா வரை அசையாமல்
போவது எது? (ரோடு)

(12) கை இரண்டையும் ஆடவைக்கும்
கந்தலை எல்லாம் கூட்டி வைக்கும் (தையல் ஊசி)

(13) நடக்க முடியாது ஆனால் நகராமல் இருக்காது
அது என்ன? (கடிகாரம்)

(14) பார்த்தால் பார்க்கும்
சிரித்தால் சிரிக்கும்
குத்தினால் சில்லாகும்
அது என்ன? (முகம் பார்க்கும் கண்ணாடி)

(15) அறிவின் மறு பெயர்;
இரவில் வருவது அது என்ன? (ஒளி)

(16) ஆடிவரும் ஆனாலும் தாசியல்ல; ஆடுகையில்
சீறி விழும்; குடத்தில் போகும்; மூடித்திறந்து
விட்டால்
முகத்தைக் காட்டும்; முக்கண்ணனை
சிவன் உடம்பில் வாழும்—அது என்ன?
(பாம்பு)

குறிப்பு: சென்னை அடையாற்றிலுள்ள உலகத் தமிழாராய்ச்சி மன்றம், டாக்டர் ச. வே. சுப்பிரமணியம் அவர்களைத் தொகுப்பாசிரியராகக் கொண்டு, தமிழ் விடுகதைகளைத் தொகுத்து வருகிறது. இந்நூல் 1975 சூனில் வெளிவரக்கூடும் என்று தெரிகிறது.

**சிறுவர் வினாவிடை**

(1) இரண்டு மூட்டை நெல்லிலிருந்து எவ்வளவு அரிசி
கிடைக்கும்?
ஒரு மூட்டை அரிசி கிடைக்கும்.

20 படி நெல்லிலிருந்து எவ்வளவு அரிசி கிடைக்கும் ?
10 படி அரிசி கிடைக்கும்.
500 நெல்மணிகளில் இருந்து எவ்வளவு அரிசி கிடைக்கும்?
250 அரிசி மணிகள்.

கடைசி விடை தவறு. 500 அரிசிமணி என்பதே சரியான விடை. ஒவ்வொரு நெல்லுக்குள்ளும் அரிசி இருக்கும் அல்லவா ?

(2) ஒரு சட்டை ஈரம் காய 2 நிமிஷமாகும். மூன்று சட்டைகள் காயப் போட்டேன். காய எவ்வளவு நேரமாகும் ? (2 நிமிஷம்)

**கன்னியாகுமரி மாவட்டத்து விளையாட்டு**

சட்டாம்பிள்ளை : கொம்பாறை கொம்பாறை
குழந்தைகள் : கொம்பாறை கொம்பாறை
சட்டாம்பிள்ளை : பசுமாடு கொம்பாறை
குழந்தைகள் : பசுமாடு கொம்பாறை
சட்டாம்பிள்ளை : காளைமாடு கொம்பாறை
குழந்தைகள் : காளைமாடு கொம்பாறை
சட்டாம்பிள்ளை : வெள்ளாடு கொம்பாறை
குழந்தைகள் : வெள்ளாடு கொம்பாறை
சட்டாம்பிள்ளை : யானையும் கொம்பாறை

குழந்தைகள் இதையும் திருப்பிச் சொல்லுவார்கள். யானைக்குக் கொம்பு கிடையாது. எனவே யானையும் கொம்பாறை என்று சொன்ன குழந்தைகள் 'அவுட்' ஆகிவிடுவார்கள். எஞ்சிய குழந்தைகளை வைத்துக்கொண்டு போட்டி தொடர்ந்து நடக்கும். இவ்வாறே பறவைகளைப்பற்றிய செய்திகளுக்கும் போட்டி உண்டு.

**பழமொழிகள்**

*(1)* கலைகளைப்பற்றி

1. ஆடத் தெரியாத தேவடியாள் தெரு கோணல் என்றாளாம்
2. ஒரு நாள் கூத்துக்காக மீசையைச் சிரைக்கலாமா ?
3. கழைக்கூத்து ஆடினாலும் காசுக்குக் கீழேதான் வர வேண்டும்

*(2)* மருந்துகளைப்பற்றி

1. மருந்தும் விருந்தும் மூன்றுநாள்

2. சுக்குக்கு மேல் மருந்தும் இல்லை. சுப்பிரமணியருக்கு மேலே தெய்வமும் இல்லை

*(3) பேய்களைப்பற்றி*

மருண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்.

*(4) மழையைப்பற்றி*

1. மாலைச் செவ்வானம் மழைக்கு அறிகுறி
2. காலைச் செவ்வானம் கழுதை புரளும்
3. கார்த்திகைப் பிறைகண்ட காராளா, கைமுடி கொண்டு கரை ஏறு.

*(5) பலவகைப் பழமொழிகள்*

1. மயிருள்ள சீமாட்டி அள்ளியும் முடியலாம் அவிழ்த்தும் விடலாம்.
2. சீலை இல்லை என்று சின்னத்தாள் வீட்டுக்குப் போனாளாம், அவள் ஈச்சம்பாயைக் கட்டிக்கொண்டு எதிரே வந்தாளாம்.
3. கப்பல் கவிழ்ந்தாலும் கன்னத்திலே கைவைக்காதே.
4. பொந்து ஆயிரம் புளி ஆயிரம்.
5. வெள்ளாமைக்கும் வெள்ளாட்டுக்கும் ஜன்மப் பகை.

**தெருக்கூத்தில் ஒரு பகுதி**

மணமக்களின் உரையாடல்

கணவன் வண்டியில் கோயம்புத்தூருக்குப் புறப்பட்டான். அவனை வழியனுப்பும் மனைவி, தனக்கு வேண்டும் பொருள்களைப் பட்டியல் கொடுக்கிருள். அவற்றையும் அவள் விரும்பும் மலர்களையும் மறந்துவிடாமல் வாங்கி வருவதாக அவன் சொல்லிவிட்டுப் பயணமாகிருன் :—

அவன் : கரி மயலைக்காளை பொண்ணு பூங்குயிலே
கட்டி நெட்டி வண்டியிலே பொண்ணு பூங்குயிலே
பாதை கிடுகிடுங்க பொண்ணு பூங்குயிலே
போயி வரேன் கோயம்புத்தூர் பொண்ணு பூங்குயிலே

அவள் : சொகமாப் போய்வாங்க பொன்னு மச்சானே
சிவப்பு சீலை வாங்கி வாங்க பொன்னு மச்சானே
வழிக்கு துணை கூட்டிப்போங்க பொன்னு மச்சானே
மருக்கொழுந்து வாங்கிவாங்க பொன்னுமச்சானே

அவன் : பட்டுப்புடவை வாங்கிவாரேன் பொண்ணு பூங்குயிலே
கட்டிப் பார்த்தால் நல்லா இருக்கும் பொண்ணு
பூங்குயிலே
ரோசாப்பூவும் வாங்கி வாரேன் பொண்ணு பூங்குயிலே
ரொம்ப உனக்குநல்லா இருக்கும் பொண்ணு பூங்குயிலே

## கரும்பு கைகண்ட மருந்து

செங்கரும்பின் சாறு குடித்தால்
பித்தம் தீரும்.
ரஸ்தாளிக் கரும்பின் சாறு
வேகத்தைத் தணிக்கும்.
புல்லகண்டங் கரும்புச் சாறு
வாதத்தையும், கபத்தையும் போக்கும்.
நாணல் கரும்பின்சாறு குடித்தால்
வாய்வும், வயிற்றுநோயும் பறந்துவிடும்.
நாணல் கரும்பின் பழைய வெல்லம், மூத்திரக்கட்டு,
குமட்டல், பேதி மூன்றையும் குணப்படுத்தும்.
நாணல் கரும்பின் சர்க்கரை அல்லது பாகு, வாந்தியையும்
குமட்டலையும் நிறுத்தும்.
நாணல் கரும்பின் சீனிச் சர்க்கரை சுரத்துக்கும்,
விக்கலுக்கும் மருந்து.

## நவராத்திரி—கொலு

**(திரு. காடப்பசெட்டியார், ஆத்தங்குடி)**

முதல் மூன்று நாள் துர்க்கை பூசை!
அடுத்து மூன்று நாள் லெட்சுமி பூசை!
பிறகு மூன்று நாள் சரசுவதி பூசை!
இவ்விதம் நினைத்துக் கொண்டாடுகிறோம்.

முதலில் மூன்று நாட்கள் விரர்களைப் பாராட்டுவது! தீரமான செயல்களைப் பாராட்டுவது!! இதற்கு அறிகுறியாக ஆற்றலின் வடிவமான துர்க்கையை மலைமகளை—துதித்து பாராட்டி வணங்குகிறோம்.

அடுத்து மூன்று நாட்கள் செல்வத்தை செல்வ உற்பத்தியை உற்பத்திப் பொருள்களை பாராட்டுவது. இதற்கு அறிகுறியாக செல்வத்தின் வடிவமான லெட்சுமியை—திருமகளை—துதித்துப் பாராட்டி வணங்குகிறோம்.

அடுத்து மூன்று நாட்கள் கலைஞர்களை கலைப்பொருள்களை வித்தைகளைப் பாராட்டுவது. இதற்கு அறிகுறியாக வித்தையின் வடிவமான சரஸ்வதியை — கலைமகளை — துதித்து பாராட்டி வணங்குகிறோம்.

இந்தியாவில்: சிற்றரசர்களின் அரசு சிறப்பாக வாழ்ந்த நாளிலிருந்து இந்த நவராத்திரி, தசரா நாட்கள் கொண்டாடப் பெற்று வரும் என்று தெரிகிறது. அரசர்கள் தாம் இதைச் சிறப் பாகச் செய்திருக்கிறார்கள். அதன் தொடர்பாக கோயில்களில் தெய்வங்களுக்கு—தெய்வங்களின் பெயரால் இந்த விழாவைக் கொண்டாடியிருக்கிறார்கள். கலைப் பொருள்களை விரும்பி வாங்கும் பொதுமக்களும் வீடுகளில் இவ்விழாவை கொண்டாடி வந்திருக்கிறார்கள்.

வீடுகளில் விழாவைக் கொண்டாடியவர்கள் கலைப் பொருளுக்கும் இசைக்கும் முக்கியத்துவம் கொடுத்தார்கள். கோயில்களில் விழாவைக் கொண்டாடியவர்கள் கலைகளுக்கும் கலைப் பொருள் களுக்கும் பக்திக்கும் முக்கியத்துவம் கொடுத்தார்கள். அரசர்கள் தாம் மூன்றுக்கும் — வீரம், செல்வம், வித்தைக்கு — உயிர் கொடுத்தார்கள்.

நாம் மூன்றுவித நிலைகளையும் அநேகமாக மறந்துவிட்டு ; பக்தியை மட்டும் நினைப்பதாக நவராத்திரி விழாவை நடத்துகிறோம்!

இந்நிலை மாறி ; வீரச்செயல் புரியும் வீரர்களை, பொருள்களை உற்பத்தி செய்யும் தீரர்களை, வித்தையில் பெரியவர்களை, கலைஞர்களை, புதியன காணும் அறிஞர்களை இந்நவராத்திரி நாளில் பாராட்டக் கற்றுக்கொள்ள வேண்டும்.

பத்தாவது நாளில்: குழந்தைகளை கலைப்பொருள்களால் அலங்க ரித்து வீரத்தை ஊட்ட அம்பையும் கிலுக்கியையும் கையில் கொடுத்து அழைத்துச் செல்கிறோம். வீரமாக வாழையைக் குத்தி சாறை இரத்தமென்று நினைத்து நெற்றியில் இட்டுக்கொள்ளுகிறோம்! வீரம் வெல்க! அந்த வெற்றி மகிழ்ச்சியில் இனிப்பைத் தின்று மகிழ்கிறோம்!

## உதவிய நூல்கள்

### (1) தமிழ்


*அழகப்பன், ஆறு:* தாலாட்டுப்பாடல்கள் (பாரி நிலையம் சென்னை)

*அன்னகாமு* மேன்மலை மக்கள்

,, ஏட்டில் எழுதாக் கவிதைகள் (திருநெல்வேலி தென் இந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை)

*அருணசலக் கவுண்டர்:* பாளையங்கோட்டைப் பட்டயக்காரர் நாட்டுப்பாடலும் பூர்வ பட்டமும் (எஸ். ஆர். சுப்ரமணியபிள்ளை, திருநெல்வேலி)

*அருணசலம், மு.:* காற்றிலே மிதந்த கவிதை

,, பள்ளுப்பாட்டு

,, கும்மிப்பாட்டு

*அய்யாசாமி, ஆர்:* குழந்தை நாடோடிப்பாடல்கள்

*பலராமையா, வி:* உங்கள் வீட்டில் சித்தர் மருந்து

*தன்வந்தரி பகவான்:* திருவாய் மலர்ந்து அருளிய வைத்திய குரு நூல் 200 (பதிப்பாசிரியர் டி. குப்புசாமி நாயுடு..ஈ.ஆர்.எம். குருசாமிக்கோனுர், மதுரை, 1956)

*கணேசன், சா:* கையேடு

*ஜகந்நாதன், கி. வா:* மலை அருவி (பெர்சி மர்வீன், ஜ. சி. எஸ். தொகுதி நாட்டுப் பாடல்கள்) வெளியிட்டோர்: சரஸ்வதி மாஹல், தஞ்சாவூர்.

*பூர்ணிமா சகோதரிகள்:* தமிழ்நாட்டு விடுகதைகள் (ராஜன் வெளியீடு, சென்னை-1) 1963

*ராஜாராம், டி.:* தமிழ் அம்மானைப் பாடல்கள் (ஜெய குமாரி ஸ்டோர், நாகர்கோயில், 1970)

*சியாமளா பாலகிருட்டிணன் :* தமிழ்நாட்டு நாட்டுப்புறப் பாடல்களும் அவற்றில் காணப்பெறும் இசை வடிவங்களும் (தமிழ் இசைச்சங்கம், சென்னை.) 1973.

*சேதுப்பிள்ளை, ரா. பி. :* தென் மொழிகளில் பழமொழிகள் சாம்ராஜ் பிரசுரம், சென்னை-3) 1963 தென்மொழி புத்தகக் குழு ஆதர வுடன் உருவான நூல்.

*'சோமலெ'* செட்டிநாடும் தமிழும் (பாரி நிலையம், சென்னை)

,, வளரும் தமிழ் ,,

,, திருநெல்வேலி மாவட்டம் ,,

,, தஞ்சாவூர் மாவட்டம் ,,

,, கன்னியாகுமரி மாவட்டம் ,,

*தமிழண்ணல் :* தாலாட்டுப் பாடல்கள் (செல்வி பதிப்பகம், காரைக்குடி)

*தமிழ் இசைச்சங்கம் சென்னை :* தேவாரப் பண் ஆராய்ச்சி அறிக்கைகள் வெள்ளிவிழா மலர்

,,

*வள்ளியப்பா, அழ.* பாமரமக்களின் பரம்பரைப் பாடல்கள் (நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா) 1967

*வானமாமலை :* தமிழர் நாட்டுப் பாடல்கள் (நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்)

,, தமிழர் நாட்டுப் பாமரர் பாடல்கள்

,, கட்டப்பொம்மன் கதைப்பாடல்கள் ,,

,, வீணாதி வீணன் கதை ,,

## (2) English

*Grover, Charles E.* — The Folksongs of Southern India (Higginbothams, Madras, 1871)

*Hameed, K. P. S.* — Bowsong : A Folk Art from south Travancore (Article in TAMIL CULTURE, Madras, Vol. V, No. 3, July 1956)

*International Association of Tamil Research Madras.* — Proceedings of the Kuala Lumpur Conference, Vol. II.
(1) Folk Motif in Cilappadikaram by Prof. Vanamamalai
(2) A Study of Historical Ballads of Tamil Nadu by Prof. Vanamamalai.

*Kalakshetra :* — Art Festival Souvenirs

*Marg Publications :* — Classical and Folk Dances of India, Bombay, 1963

*Meenakshisundaram, T.P. :* — Tamil and Other Cultures (Exterior Relations of Tamil), Madurai University, 1970.

*Narasimhan, V. K., Venkatachari, A. G. & Chari, V. K. N. (Editors)* — The Languages of India—A Kaleiodoscopic Survey. (Our India Directories and Publications Private Ltd., Madras 18)

*Rajagopalachari, C. :* — Avvaiyar (Collected by A. K. Chettiar, Madras) 1[illegible]8

*Ramasubramanian, V.* — Metamposychosis (Bulletin of the Institute of Traditional Cultures, University of Madras) 1960

*Santhanam, K. (Ed.)* — An Anthology of Indian Literatures (Gandhi Peace Foundation, New

Delhi/Bharatiya Vidya Bhawan, Bombay) 1969.

*Syamala, N.* Folk Music and Dance of Tamil Nadu (University of Madras, Thesis, 1960)

,, Survey and Research on Folk Music, Dance and Drama of Tamil Nadu (Consolidated Report for the Madras State Sangita Nataka Sangam, January 1962)

*Somasundaram, Mi Pa* Folksongs in Tamil (A Broadcast Talk)

*Subramania Pillai, G.* Tree Worship and Ophiolatry (Annamalai University) 1948

*Subramonian, Dr. V. I. and others* Four papers on Literature and Linguistics · (Meenakshi Puthaka Nilayam, Madurai) 1968

*Vanamamalai* Studies in Tamil Folk Literature (New Century Book House, Madras-2)

*Varadarajan, M.* The Influence of Folklore on Tamil Literature (Annals of Oriental Research XXIII Part I, University of Madras, Madras, 1970)

*Veerasamy, V.* Sun in Cankam (Journal of the Dept. of Tamil—Vol. I) University of Kerala, Trivandum, March 1970.

# அருஞ்சொல் விளக்கம்

| | |
|---|---|
| *ஆரத்தி (ஆலத்தி)* | திருஷ்டி கழிக்க தீபமிடுதல் |
| *அபிஷேகம்* | இறைவன் திருமேனிகளை முழுக் காட்டுதல் |
| *அக்கினி நட்சத்திரம்* | கோடைகாலத்தில் மிகக் கூடுதலாக வெப்பம் நிலவும் காலம் |
| *அக்கிரகாரம்* | பிராமணர் குடியிருப்பு |
| *சதுர்வேதிமங்கலம்* | நான்கு வேதங்களையும் நன்கு பயின்றவர்களுக்கு சோழர்கள் முற்றூட்டாக வழங்கிய ஊர். |
| *நலுங்கு* | திருஷ்டி கழிக்க, மணமக்களுக்குத் திருமணத்தில் செய்யப்படும் ஒரு சடங்கு |
| *நட்டுவனர்* | நடன ஆசிரியர் |
| *பஞ்சலோகம்* | தங்கம், வெள்ளி, செப்பு, இரும்பு, ஈயம் இவற்றின் கலவை |
| *பிடாரி* | கொடுமையான அம்மன் |
| *பூக்கட்டுதல்* | நம்பிக்கை உள்ளவர்கள், முக்கியமான முடிவுகள் செய்ய கோயிலில் பூக் கட்டி வைத்துப் பார்ப்பது. |
| *பொட்டு* | 1. நெற்றியில் இடும் திலகம்<br>2. தேவதாசிகள் அணிந்த தாலி |

# சிறப்புப் பொருட்குறிப்பு அகராதி

**குறிப்பு:** △ இந்த அடையாளம் நாடு, நகரங்கள், சிற்றூர்கள் ஆகியவற்றைக் குறிக்கும்.

○ வட்ட அடையாளம் நூல்களின் பெயரைக் குறிக்கும்.

ஈ



உ



ஊ

ப

ஜ



ஸ



ஹ





'சோமலெ' 1921-இல் பிறந்தார். சென்னையில் மாநிலக் கல்லூரியில் பி. ஏ. பட்டம் பெற்றுப் பம்பாயில் பத்திரிகைக் கல்வி பயின்றார். இவர் தமிழில் எழுதியுள்ள பிரயாண நூல்கள் பிரபலமானவை. தமிழ்நாட்டின் பல மாவட்டங்களைப் பற்றியும் விரிவான நூல்கள் எழுதியுள்ளார்.

மக்கள் மரபு, பண்பாடு, கலை ஆகிய துறைகளில், வளம் சிறந்த இந்திய மாநிலங்களுள் தமிழ்நாடும் ஒன்று. சுவைமிக்க இந்நூல், தமிழ் மக்களுடைய நம்பிக்கைகள், இதிகாச புராணங்கள், மதம், மந்திரம், பழக்க வழக்கங்கள், தேர், திருவிழா, நாட்டுப்பாடல், கிராமிய இசை-நாடகம் ஆகிய எல்லாவற்றையும் அலசி ஆராய்கிறது.

நேஷனல் புக் டிரஸ்ட்
இந்தியா

ரூ. 12-25